5. . . . ப போக்கு ... க அமைந்தநாட... ... விசையாலையதெவற்கு சூரைக்குடியில் குளம் பண்ணின

6. . . . க்காடும் வளைமீசுற்று. . . ல நாயனாற் தம்ம தானம் பல இறையிலிகளும் நீங்கலாக நீக்கி உள்ள நன்செய்...

7. . . . இப்பாவிலும் பன்னிலுங் ... எப்பெயர்ப் பட்டனவுங் கழித்து நான்கெல்லையும் திருவாழிக்கல்லு.

# 27

# நாகப்பட்டினம் நாகநாதசுவாமிக் கல்வெட்டுகள்

**சு.இராசவேலு,** தஞ்சாவூர்

**26 : 1**

**இடம்** : நாகப்பட்டினம் மாவட்டம்,வட்டம், நாகநாத சுவாமிக் கோயில் கருவறையின் பின் சுவர்.

**காலம்** : பொ.ஆ.18 ஆம் நூற்றாண்டு (1774)

**செய்தி** : தச்சுக்கிழக்கிந்திய கம்பெனியில் பிளிச்சிங்டன் என்ற ஆளுநர் காலத்தில் திருப்பணிக்கு அந்தோணிப்பேட்டை பகுதியைக் கொடையாக அளித்தமை. சில சொற்கள் தச்சு மொழியில் குறிக்கப்பட்டுள்ளன. பட்டாவிய வெள்ளிப்பட்டயத்துடன் இக்கல்வெட்டை ஒப்பு நோக்கி நாகப்பட்டின தச்சுக் கிழக்கிந்திய வரலாற்றை அறியமுடியும்.

1. தர்மமே செயம் நாகலோகம்[நாகராச] நாகபட்டணத்து
2. நாகலிங்கத்தை பூசை பண்ணி சிவறாத்திரி பூசையில் நற்-
3. ப்பணி சிரண உத்தராணம் பண்ணினது சாலிவாகன சகாத்த 1
4. 695 கலியுஅம் 4875 உலாந்தேச கும்பனி ஆண்டு
5. 1774 யிதின் மேல் செல்லா நின்ற செய வருஷம் சித்திரை மாதம் மு-
6. தல் யெத்லொறேயி நிர்பம் பிளிசிங்கன் மகாராசா னாளில் உள்-
7. ளூர் மணியம் சிவேலந்தொயின் பெலத்து அவர்கள் சீரண உத்தரா-
8. ணம் பண்ணினது கல் திருப்பணி கும்பணி . த்தோலுக்கு னாகமல்லு
9. சின்னய்யனாயக்கரவர்கள் மணியம் தோலுக்குமாயலுடை கண-
10. பதி முத்துச் செட்டியார் குமாரன் சுப்பிறமணிய செட்டியார் யிந்-
11. னாளில் தருமம் பரிபாலனமானது முத்திரைப்படிக் குத்தகையில் முன்-



12 னடந்து வருகிறது மகமை நாள் ஒண்ணுக்கு பணம் 1 கும்பனிர் வற்–

13 தகர் 100 பேர் வழி ஒண்ணுக்கு மாதம் ஒண்ணுக்கு பணம் 1 தொந்நூறாத்தில் பேர்

14. 3 வில் பணம் 6 முகத்துவாரக் குத்தகையில் மாதம் ஒன்னுக்கு பணம் 2 சிவறாத்தி–

15. ரி பூசைக்கி பணம் முப்பது கம்பட்டத்தில் மகமை ஆயிரத்துக்கு பணம் 100 பா–

16. க்கு மகமை அவணம் ஒண்ணுக்கு பாக்கு 2 கலசுகாறார் பங்கில் கால்

17. ப்பங்கு வெத்திலை குத்தகையில் நாள் ஒண்ணுக்கு வெத்திலை பெரிய கடை–

18. யில் சுவாமியுடைய வெங்காயகடை ஒண்ணுக்கு மாதம் ஒண்ணு

19. க்கு வாடகை பணம் 56 வண முதலியார் முத்து குமார முதலியார் சர்

20. கரக்காத்த முதலியார் யிவர்கள் ஆத்து மலாபத்துக்கு நாகனாதர் கோ–

21. வில் தெஷ்ணாமூற்த்திக்கி அந்தோணிப் பேட்டையிலிருக்கிற தி–

22. ருவள மடம் நந்தனவனம் கும்பனிர்க் கிறாமம் நெய்வேலிருக்கிற ச–

23. றுவ மானியக் குள நிலம் கும்பனிர் அளவு குழி 400 சுவாமியுடைய பற்–

24. ரில் மடத்து நிலம் தெக்கு வடக்கு கும்பனி ஞ். கிழக்கு மேற்கு அடி யிந்த–

25. துக்கு உபகாரம் பண்ணிந பேர்கள் கயிலாசஞ்ஞ். டியிருப்பார்கள் . லிங்க து

26. சிவந் .. பாத முதலியார் குமாரன் சுவாமினாத முதலியார் நித்தம் சதாசேருவை

27. நல்லுடை சுவாமினாத செட்டியார் குமாறன் சின்னியன் நித்தம் சதாசேருவை

**26 : 2**

**இடம்** : *மேற்படி*

**காலம்** : *சகம் 1693 ஆவணி, பொ.ஆ.1771*

**செய்தி** : *நாகநாதர் கோயில் தட்சினாமூர்த்தி ஆலயம் கருங்கற்*

*திருப்பணிக்குக் கொடை வழங்கியமை*

1. சாலிவாகன சகற்த்தம் 16[93] ல் லக
2. வ்ருஷம் ஆவணி மாதம் 10 கயில. . . .
3. னார் திருவாவடுதுறை மவுன மூற்த்தி
4. அனேக. து யர்க்க. முக்தி மோட்ச
5. பெறும்படி யிரங்கி னாகப்பட்டினத்து னா-
6. கனாதர் தெட்சணாமூற்த்தி கோயில்
7. கருங்கற் திருப்பணியாகச் செய்தரு-
8. ளினபடி தெட்சணாமூற்த்தி பணி
9. விடைமு உள்ளூரில் மரக்கறிக்கடை-
10. யில் கொண்ட கடை 1 முத்திரை
11. [ப்படி]மகமை னாள் 1 க்கு பணம் .. இரும்
12. 1. பணம் 4 விற்கு . . . னாட்டாமைகாறன்
13. [வ றை. விற. ல் குடுக்கிறது குருவாற
14. [மடம் 1 அந்தோணிப் பேட்டையில்
15. . . . த் குத்தில் தெத்த சா.. தன் நிலம் கொ
16. ண்ட நிலத்தில் குருவாற மடம் நந்தவன
17. முள்பட கும்பணிர் க்குழி 560 உப்பளம்
18. கருவேலங்கடை உள்பட அனவரு..
19. . . . வாய்கால் கு. முத்திரைப்படிய்
20. . . . உப்பு வீதம் குருவள மடத்துக்கு குழி
21. து யிந்த தருமத்துக்கு பகாரம் பண்ணினவன்
22. கையிலாசம் பெறுவார்கள் சென்
23. . . . லா க்கும் ள்ள சின்னி மெ
24. . . . .சதாசெருவை

**26 : 3.**

**இடம்** : *மேற்படி தட்சிணாமூர்த்தி சிற்றாலயம் அருகில்*

**காலம்** : *19 ஆம் நூற்றாண்டு*

**செய்தி** : *திருவாவடுதுறை மவுன மூற்த்தியார் சிற்பம் உள்ளது.*

முத்தி பெற்ற செய்தி உள்ளது.

1 உ. கயிலாச பரம்-
2. பரை திருவாவடு-
3. துறை மவுனமூற்-
4. த்தி ஆற்றுமா சா. . .
5. முத்தி பெறும்படியிற-
6. ங்கி உலகத்தில் திரு-
7. க் கொண்டெழு-
8. ந்தருளின ப. . .



# 28

# திரு ஆனைக்கா நெற்களஞ்சியம் கல்வெட்டு

**கி.ஸ்ரீதரன்,** சென்னை

**இடம்** : திருச்சிராப்பள்ளி மாவட்டம், திருஆனைக்கா ஜம்பு கேசுவரர் திருக்கோயில், அகிலாண்டேசுவரி சன்னிதிக்கு முன் நெற்களஞ்சியம் அருகில் உள்ள மண்டப நுழைவாயில்.

**காலம்** : பொ.ஆ. 16ஆம் நூற்றாண்டு

**செய்தி** : திருக்கோயில் நெற்களஞ்சியமாக விளங்கும் கொட்டாரத்தில் பணி செய்தவர்களுக்கு அளிக்கப்பெற்ற ஊதியம் பற்றியது.



1. சக வருஷ சகாத்த
2. ம் 1517 இ-
3. தின் மேல் செல்-
4. லா நின்ற மன்ம-
5. த வருஷம் மாசி-
6. மாதம் 62 நாய-
7. நார் அழகிய திரு
8. வானைக்காவு-
9. டைய நாயநா-
10. ர் கோயில்த் தி-
11. ருக் கொட்டாரத்தி-
12. லே படிபிடிக்க-
13. றது பணிப்பை-
14. ண்டாட்டியும்
15. மாவிடிக்கிற பி-
16. ராமணியளும்-
17. வாசல் காப்பாரு-
18. ம் அடிப்புச் சம்ப

19. ந்தமும் அல்லாம-

20. ல் பின்ன ஆ-

21. ற்க்காகிலும் க-

22. லத்தில் பேர் இ-

23. லக்கை காறர்

24. அதியார் கடை--

25. க் கூட்டகள் இந்

26. த பேர்களுக்கு

27. நெல்லு அருர.. .

28. . . . . . . . .

# 29

# மெ.க.அன்னசத்திரம் கல்வெட்டு

**சு.இராசகோபால், சென்னை**

**இடம்** : *திருவண்ணாமலை மாவட்டம் திருவண்ணாமலை தேரடி வீதியில் உள்ள மேனா.கானா.அன்னதான சத்திர வாயிலின் வலது புறத்தில் பதிக்கப்பட்டுள்ள கல்வெட்டு.*

**காலம்** : *கலி வருடம் 4974 ஆங்கிரச வருடம், கார்த்திகை மாதம் 15ஆம் தேதி, பொ.ஆ.1873.*

**செய்தி** : *பிரிக்கப்படாத அன்றைய மதுரை மாவட்டம் கோட்டையூரில் (இன்றைய சிவகங்கை மாவட்டம்) உள்ள மாத்தூர் கோயில் மண்ணூர் பிரிவைச் சேர்ந்த மெய்யப்பச்செட்டியார் குமாரர் கருப்பஞ் செட்டியார் பெயரில் அன்னசத்திரம் நிறுவப்பட்டமை.*

1. ஓம்
2. மெ.க.
3. சிவமயம்
4. கலியுகாதி இ 4974 க்கு ஆங்கீர
5. ச இ காற்த்திகை மீ 15 உ
6. மதுரை ஜில்லா கோட்டை
7. யூர் மாத்தூறக் கோவிலார்
8. மண்ணூருடையார் மெய்
9. யப்ப செட்டியார் குமாரற்
10. கருப்பஞ் செட்டியார்
11. அன்னதாந சத்திரம்.

# 30

# வடசேரி ஸ்ரீசங்கரசிந்தாமணி சுவாமிகள் சமாதிக்கோவில் செப்புப்பட்டயம்

**செந்தீ நடராசன்,** நாகர்கோவில்

இடம் : கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோவில் நகரம் வடசேரி வஞ்சியாதித்தன் புதுத்தெருவின் தென் கோடியில் ஸ்ரீசங்கரசிந்தாமணி சுவாமிகள் சமாதிக்கோவில் சிவன் கோவிலுடன் அமைந்துள்ள மூன்று சமாதிகள் இடமிருந்து வலமாகச் சுவாமிகள் அவரது இரு சீடர்களின் சமாதிகள் உள்ளன. சுவாமிகளின் பீடத்தின் இடப்பக்கமாகப் பீடத்தில் சிறிய மரத்தாலான அனுமார் படிமம் வைக்கப்பட்டுள்ளது. இது வடசேரி வாழ் சாலியர் சமூகத்திற்குரியது.

செப்பேடு கோவிலினுள் சுவாமிகள் சமாதி குறித்த நீள்செவ்வகச் செப்பேடு ஒன்று உள்ளது. அதன் நீள அகலங்கள் 69 செ.மீ. ஙீ 7.5 செ.மீ. நிறை 450 கிராம். இரு புறமும் தமிழில் தெளிவாகவும் ஆழமாகவும் செப்பேடு பொறிக்கப்பட்டுள்ளது. முதல் பக்கம் 12 வரிகள், இரண்டாம் பக்கம் 13 வரிகள்.

செப்பேட்டில் எண்கள் தமிழ்க்குறியீடுகளால் எழுதப் பட்டுள்ளது. ஆனால் 20 வது வரியில் மட்டும் 1500 என்பது தற்காலத்தில் பயன்படுத்தப்படும் எண்ணால் எழுதப்பட்டுள்ளது.

காலம் : ஆண்டு சுவாமிகளின் பிறந்த ஆண்டாகக் கலியுகம் 4429, சாலிவாகன சகாப்தம் 1249, கொல்லம் 503 எனத் தரப்பட்டுள்ளது (வரி 2). அவற்றிற்கு நேரான ஆங்கில ஆண்டு கி.பி. 1328 ஆக வேண்டும். ஆனால் சாலிவாகனம் மட்டும் கணக்கீட்டில் கி.பி. 1327 என வருகிறது. செப்பேட்டில் வரும் பிற கொல்லம் ஆண்டு கணக்கீடுகள் கி.பி. 1328 ஐ ஒத்து போகின்றன.

சுவாமி சமாதியான ஆண்டாக வரி 17ல் தரப்பட்டிருக்கும் கொல்லம் 923 (கி.பி. 1748) சமாதியான வயது நானூற்று இருபதுடன் ஒத்துப்போகிறது.

செப்பேட்டில் ஆலயத்தைக் கல்பணியாக முடிக்கக்

குறிக்கப்படும் நாள் கொல்லம் 1113 ஆடி சுவாதிக்குள் நிர்மாணிக்க முடிவு செய்திருப்பதாகச் செப்பேடு குறிப்பிடுகிறது. அந்நாள் வெகுதான்ய வருடம் ஆடிமாதம் 19 ந்தேதி புதன்கிழமை அட்டமி திதியில் அமைகிறது. அதற்கு நேரான ஆங்கில ஆண்டு தேதி 03081938. சுவாமிகள் சமாதியான ஆடிமாதம் அட்டமி திதி சுவாதி நட்சத்திரத்திலேயே பணி முடிக்க விரும்பியதாகத் தெரிகிறது.

**செய்தி :** ஸ்ரீசங்கரசிந்தாமணி சுவாமிகள் இங்கு சமாதியான வரலாறு முதலில் விவரிக்கப்படுகிறது. அவர் காசிக்கு வடக்கே அயோத்தியாவில் பிறந்தவர் 400 ஆண்டுகள் தேசாந்திரியாகப் பல சிவத்தலங்களிலும் சஞ்சரித்து இறுதியில் கன்னியாகுமரியில் உள்ள பகவதியம்மனைக் காண வந்த இடத்தில் இங்கேயே 20ஆண்டுகள் தங்குகிறார். காசாயம் அணிந்து துறவியாகிறார். பால் பழம் தவிர பிற உணவுகள் தவிர்க்கிறார். பலர் அவருக்குச் சீடர்கள் ஆகின்றனர். சீடர்களின் சங்கம் அமைகிறது. அவரின் அடியவர்கள் கூட்டத்தைச் சங்கமர் (சங்கத்தைச் சேர்ந்தோர்) எனப் பட்டயம் குறிப்பிடுகிறது. கடுக்கரையில் இறந்து புதையுண்ட ஒரு (பிரம்ம குலத்தைச் சேர்ந்த)ஆண் மற்றும் (இருளர் குலத்தைச் சேர்ந்த)பெண் குழந்தைகளை உயிர்ப்பிக்கிறார் எனப் பட்டயம் கூறுகிறது. கிபி 1748 ல் தன் இரு முக்கிய சீடர்களுடன் உயிருடன் சமாதி ஆகிறார். சமாதியான நாளாகக் கொல்லம் ஆண்டு 923 ஆடி மாதம் 13ந்தேதி திங்கள் கிழமை 18 முதல் 23 நாழிகைக்குள் (பிற்பகல் சுமார் மணி 1 12 முதல் 3 12 க்குள் விருச்சக லக்கனத்தில் சப்தமி அட்டமி திதியில் சித்திரை சுவாதி நட்சத்திரங்களில் அது நிகழ்ந்ததாகப் பட்டயம் கூறுகிறது. சமாதியான இடத்தின் எல்லைகளைத் தருகிறது. சமாதிக்கு எல்லைகள்

வஞ்சி ஆதித்தன் புதுத்தெருவிற்கு கிழக்கு, தெருவிற்கு தெற்கு, ராஜபாதைக்கு மேற்கு, கிளமேல் குறுக்குத்தெருவிற்கு வடக்கு மேலெல்கை,தென்வடல் குறுக்குத் தெருவிற்கு கிழக்கு

பட்டயம்இருபகுதிகளைக்கொண்டதாகத்தோன்றுகிறது. முதல் பகுதியில் மேற்கண்ட விவரங்களைக்கூறியபின் இச்சமாதிக்கான ஆண்டுதோறும் சோதி விழாவும்

நித்திய பூசையும் செய்தவர களக்குடி ராமலிங்கம், வடிவேல் முருகையா, மெய்யன் பெரியவன் ஆகியோர் கைப்பணமும் பிறர் பணமுமாக 1550 பணம் வைத்து நடத்திவர சுவாமிகள் அனுமதியுடன் பட்டயம் எழுதிய செய்தி சொல்லப்படுகிறது.

தர்ம தான காராண்மை நாகேந்திர சுவாமி (நாகராஜா கோவில்?) எல்லைக்கு உட்பட்ட வடசேரியில் சுவாமிகள் பார்த்திருந்த மனையின் இறுதியில் உள்ள குறுக்குத்தெருவிற்கும் கிழக்கு, எல்லைக்கும் தென்கிழக்கு ராஜபாதைக்கு மேற்கு, தென் எல்லை தென் எல்லை கிழமேல் குறுக்குத்தெருவிற்கும் வடக்கு, மேலெல்லை வஞ்சியாதித்தன் புதுத் தெரு சாலியக்குடிக்கு தெற்கு. இவ்வாறு அளக்கப்பட்ட பெருநான்கெல்லைக்கு உள்பட்ட மனையில் விக்கிரகங்கள், மணிதூபம் முதலான வெங்கல பாத்திரங்களுடன் பூசனை நடத்திவர வேண்டியது. மார்கழி மாதத்தில் சாலி களக்கோடி ராமலிங்கம் குருபூசை வகைக்கும் மாதத் திருவிழாவிற்கும் சிஷ்யன் சோனாபுரம் கணக்கு வசம் ஒப்படைத்த படிபணம் 1550 காராண்மையாகக் கொண்டு அனுபவங்களைக் கொண்டு சந்திர சூரியர் இருக்கும் வரை இத்தர்மம் நடத்திவர பணிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

சுவாமிகளின் சங்கத்தாரன்றி வேறு எவரும் தொட்டு பூசை செய்யலாகாது என்றும் அவ்வாறு செய்தால் அவர்கள் குடும்பம் நசித்திப் போகும் என்று கூறப்படுகிறது. சுவாமிகள் அனுமதியுடன் ஆலயம் கட்டி பூசைகள் குறைவர நடப்பதாகக் குறிப்பிடுகிறது. பின்னர் முதலில் எழுதிய பட்டயம் சேதமடைந்து விட்டதால் இந்தச் செப்புப் பட்டயம் எழுதி ஆலயத்தையும் கல்பணியாகச் செய்யவும் பணியைக் கொல்லம் 1113 ஆடி சுவாதிக்குள் முடிக்கத் தீர்மானிக்கப் பட்டதைக் கூறி பொருள் உதவி நாடி வேண்டுகோள் விடுக்கிறது. வேண்டுகோள் விடுப்பது ஆறுமுகப்பெருமாள் மகன் வைத்தியலிங்க சுவாமிகளும் ஊராரும். எனவே இப்பட்டயத்தின் காலம் 1938.எனவாகிறது.

ராமலிங்கம் களக்கோடி முதலானோரால் கொடுக்கப்பட்ட பணம் 1550 காராண்மையாகக் கொண்டு எல்லா விசேடங்களும் சந்திர சூரியர் உள்ளவரை

*செய்து வரவேண்டுமென்றும், இத்தர்மத்திற்கு அழிவு ஏற்படுத்துவோர் கங்கைக்கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்திற்கு ஆளாவார் என்ற ஓம்படைக் கிளவியுடன் பட்டயம் முடிக்கப் படுகிறது.*

**முதல் பக்கம்**

உ முருகன் துணை

1. ஸ்ரீ சங்கரசிந்தாமணிசுவாமிகளென்னும் திருமேனி கொண்டருளிய மகானுபவனது திருவருள் யாவருக்குக்[1] தெரிவிக்கின்ற வரலாற்றின் சரித்திரம் கூறுகின்றோம். இந்த திருமேனி உற்பத்தியானது காசிக்கும் வடக்கு அய்யோத்தி மாநகரத்தில்

2. பிறம்மகுலத்திலவதாரஞ் செய்தவந். அதாவது கலியுகம் 4429 ம் சாலிவாகனம் 1249 ம் கொல்லம் 503 ம் கூடிய காலத்தில் ஜெனித்து நானூறு வயது மட்டும் தீற்த்தயாத்திரை முதலாகிய சிவாலயங்கள் தெரிசித்தும்

3. நமது திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் கன்னிகா க்ஷேத்திரம்2 தெரிசிக்க வந்ததில் இவிடத்திலிருபது வருஷமிருந்துமனேகந் தீக்ஷை பெற்று சீஷர்கள் சிவனடியார்களோடு சந்நியாச கோலமாய் காயாசம்[3] தரித்து பால் பழம் சாப்

4. பிட்ட உணவு வேறுத்தும்[4] அனுமார்சித்தி பெற்றும் நமது நாட்டில் கடுக்கரையில் பிற்ம்மகுலத்தில் பிறந்த ஒரு பெண் குழந்தையும்[5] இருளர் குலத்தில் பிறந்த ஒரு ஆண்குழந்தையும் பிறந்து இழந்து[6] போன காலத்தில் புதைத்து மூடிவிட்டார்கள்.

5. அக்குழந்தைகளது தாய்தந்தையர் மனவருத்தமுற்றிருக்கும் காலையில் அக்குழந்தைகள் குழியில் நின்றும் எடுத்து உயிர்கொடுத்து ஜீவிக்கச் செய்து இக்குழந்தைகளுக்கு இருபது வயதாகவு மவைகளுக்கும் உபதேசம் செய்து தன்னடிமையாக்கி பாது

6. காத்து வந்தனர். அப்போது சுவாமிக்கும் நானூற்றிருபது வயதாக உயிரோடு சமாது இருக்கவேண்டுமென்று நிதானித்து அடியார்களுக்கு அறிவித்து சிலமொழி பகர அக்காலத்து சுவாமியிடத்து உபதேசம் பெற்ற எங்களையும் தங்களோடு

7. சேற்த்துக் கொள்ளவேண்டுமென்று விரும்புங்காலையில் சுவாமிகள் தெற்குமாகவும் இரண்டு சமாதுகள் இடதுவசமாக வடக்கு வசமாகவும் செய்திருக்கிறது. அதன்பின் முன் அனுமார் உன்னோடு இருந்த எனக்கு என்ன சொல்லப்போகிறாயென்று கேட்க்க நீயுமென்

8. சமாதுக்கு தென்புரம் என்வசமே யிருக்[7] கடவாயென்று உத்தரவு கொடுக்க அநுமாருக்கும் பிரதிகைஷயாகி இருக்கின்றது. மேல் நடந்த விஷயங்கள் சுவாமிகள் அடங்குங் காலையில் பிரபவருஷம்8 தெக்ஷணாயனமான ஆடிமாச பதிமூன்று தேதி

9. சோமவாரத்தன்று பகல் நாழிகை ஏழரைவரெ சித்திரை நக்ஷத்திரமும் மேல் சுவாதி நக்ஷத்திரமும் துடங்கி சப்திமி நாலேகாலுக்கு மேல் அஷ்டமியும் அன்று பதினெட்டு மேலிருபத்தி மூன்றுக்குள் விருக்ஷிக லெக்கனம் முகூர்த்த சமயத்தில் உயி

10. ரோடு பேசிக்கொண்டிருக்குங் காலையில் எங்களிலொருவராகிய ராலிங்கம்[9] களக்குடி என்னுமவரு செலவான தார்ம்மவகக்கு ஏர்ப்பட்டு வடிவேல்முருகையா என்பவரும் மெய்யன் பெரியவன் என்பவ்வரும் தன் கைப்பொருளும் யாஜகப் பொருளுமாக

11. 550 பணம் சேற்த்து சுவாமிகள் சன்னதியில் தார்ம்மவகக்கு இப்பணத்தில் நின்றும் நித்திய பூஜையும் திருவாடு சோதி அடியந்திரம் ஆண்டுகள்தோறும் நடந்துவரும் பொருட்டு சுவாமி முகதாவில் ஒரு பட்டய முடித்து எழுதிவர சுவாமிகள் என்

12. பூஜைக்குரியவர் சங்கமரி[10]லொருவராயிருக்க வேண்டும். வேற்யாகில்[11] பூஜிக்கில் அக்குடும்பம் நசிக்குமென்று திருவாய் மலர்ந்தருளினார். இதுவரெ உத்திரவின்படியே ஆலயமும் கட்டி பூஜைக்கு பரிகலபாத்திரங் கற்பூர முதலாகிய தீபங்களு

**இரண்டாம் பக்கம்**

ஸ்ரீ

13. ம் நகரா சேண்டை முதலிய வாத்திய கோஷங்களும் நாளதுவரெ நடந்து வருகின்றன. சுவாமிகளடங்கி இருக்கும் எல்கைகளாவன யெங்கள் வஞ்சி ஆதித்தன் புதுதெருவின் கிழக்கு தெருவின் தெற்கு, ராஜபாதைக்கும் மேற்கு கிளமேல் நாராசத்

14. தினும்[12] வடக்கு, மேலெல்கை தென்வடல் நாராசத்தினும் கிழக்கு. இந்த நான்கு எல்லைக்குள்ளிருக்கும் எல்கைகள் முன் எழுதிய பட்டயம் ஜீறணப்பட்டு[13] போனதால் செம்புபட்டய எழுதவும் திருப்பணி கற்பணியாக வுரு செய்யும் பொருட்டு இப்போது நிகழும் வெகுதா

15. ன்னியவருஷம் கொல்லம் 1113 வருஷம் ஆடி சுவாதிக்குள் நிருமிக்க என்ன கொண்டவர்களாயிருக்கிறோம்[14]. பெரியோர்கள் பொருள் உதவி செய்து நிறைவேற்றி தரும் பொருட்டு வேண்டிக் கொள்கிறோம். இங்ஙனம் ஆறுமுகப்பெருமாள் புத்திரன் வைத்

16. திலிங்க சுவாமிகள் முதல்பேர் உளர்காறர்[15]. செந்திலாதிபன் துணை நாளதுவரெ 610 வயதாயிவிட்டது சுபம்.

17. உ.923 ம் ஆண்டு ஆடி பவ[16] 13 ம் தேதி திங்கள் கிழமையும் சித்திரை .7. க்கு மேல் சோதியும் சப்தமி 4 ரு . ம் அஷ்டமி.

18. 53 ம் வருஷம்[17] சதாரதம் 26 கூடிய தினத்தில் காசிக்கு வடக்கருகுயிருந்து கோட்டாறும் சௌகவல்லி பாதத்தில் வடக்கருகில் பார்த்திருந்த 420 வயசுள்ள சங்கர சிந்தாமணி குருசாமியாரான மேற்படி ஊரில் எனது சிஷ்யாரகிய சங்கமற்கு எழுதின வடிவேல் முருகய்யாவுக்கு எழுது

19. கிற தற்மதான காராண்மை பட்டயமாவது. நாகேந்திரசுவாமி எல்லைக்கு உள்பட்ட வடசேரியில் நான் பார்த்திருந்த மனைக்கு ஒடுக்கத்துக்கும்[18] நாராசத்திற்கும் கிழக்கு எல்லைக்கு தென்கிழக்கு ராஜபாதைக்கும் மேற்கு தென் எல்லை தெற்கின் கிழமேல் நாராசத்திற்கும் வடக்கு மேல் எல்லை வஞ்சியாதித்தன்

20. புதுதெரு சாலியக்குடி தெற்குமாக மேற்படி வகை எல்லை ஆழந்த[19] பெருநான்கு எல்லைக்கு உள்ப்பட்ட மேற்படி மனையில் விக்கிரகளும் மணிதூபம் முதலாகிய வெங்கல பாத்திரங்களும் நடத்தவேண்டும் வகைக்கு என் சீஷன் சோனபுரம் கணக்கு மெய்யன் பெரியவன் மார்கழி மாசம் சாலிகளக்

21. கோடிராமலிங்கம் மேலும் குருபூஜை வகைக்கு மாசத்திருவிழா கட்டணவகைக்கு எனபித்த[20] ராமலிங்கம் களக்கோடி படிபணம் 1550 ம் யிப்பணம் ஓராயிரத்தி ஐந்நூற்றி ஐம்பதும் எடுத்துருத்திரிப்பீரே அனுபவங்களுக்குக் குடுத்துரு ஆசேந்திர காலமே காராண்மையாகி அனுபவிச்சிகொண்டு மெய்யாய் வருகிற

22. தற்ம்மதாரணையும் முடக்கம் வருத்தினால் என் சீஷன்மார் முதலாகி ஆள்களோடு சொல்லி வேன்டிய தற்மம் நடத்தி பட்டயம் எழுதிக்கொடுத்த சங்கர சிந்தாமணி குருசாமியர்களாகிய விட்டுவனா குருப்படிக்கு சங்கர சிந்தாமண குருசாமியார்க்கு இந்த தர்மத்தை பரிகரித்த[21] ஆள்கள் கெங்கைக் கரையில் காராம்

23. பசுவைக் கொன்ற தோஷத்தில் போவதாகவும். இந்த வகைக்கு இந்திரன் சந்திரர், ஈஸ்வரர் முதலானவர் அரியவும்[22]. இது சத்தியம். 13 ம் தேதி திங்கள்கிழமை அன்று 18 நாழிகைக்குமேல்[23] நாழிகைக்கு அகம் விருக்ஷிப லக்கினத்தில் உயிரோடமொத்துபதமாகி[23] மேலும் சங்கத்தார் இல்லாமல்

24. வேறிட்டு ஆள்கள் நம்மை தொட்டு பூசித்தபேர்கள் அவருடைய குடும்பமும் நசித்து போவார்கள். குருபாதமே கதி சுபம் சுபம் சு

## விளக்கக் குறிப்பு

1. யாவருக்குக் யாவருக்கும் என வாசிக்கவும்
2. கன்னிகா க்ஷேத்திரம் கன்னியாகுமரி பகவதி கோவில்
3. ரயாசம் காசாயம் என வாசிக்கவும், துறவியர் ஆடை
4. வேறுத்தும் வெறுத்தும் என வாசிக்கவும்
5. பென் குழந்தையும் பெண் குழந்தையும் என வாசிக்கவும்
6. இழந்து இறந்து என வாசிக்கவும்
7. என்வசமே யிருக் என்வசமே யிருக்கக் என வாசிக்கவும்
8. பிரபவருஷம் பிரபவ வருஷம் என வாசிக்கவும்
9. ராலிங்கம் ராமலிங்கம் என வாசிக்கவும்
10. சங்கமரி(ல்) . சங்கத்தாரில் (சுவாமிகளின் அடியவர்கள் சங்கத்தில்)
11. வேற்யாகில் வேறுயாகில் வேறு யாராவது
12. நாராசத்தினும் குறுக்குச் சந்தினும்
13. ஜீற்ணப்பட்டு சிதலமடைந்து
14. என்ன கொண்டவர்களாயிருக்கிறோம் எண்ணம் கொண்டவர்களாக இருக்கிறோம் என வாசிக்கவும்
15. உளர்காரர் ஊர்காரர் என வாசிக்கவும்
16. ஆடி பவ ஆடி மாதம் மாதத்திற்கான குறியீடு தவறாக பவ என எழுதப்பட்டுள்ளது.
17. 53 ம் 503 என்று வாசிக்கவும் நூற்றுக்கான குறியீடு க்குப் பதில்,பத்திற்கான குறியீடு போடப்பட்டுள்ளது
18. ஒடுக்கத்துக்கும் கடைசிக்கும்
19. ஆழ்ந்த அளந்த என வாசிக்கவும்
20. எனபித்த ஏற்பித்த
21. பரிகரித்த நீக்கிய , அழித்த
22. அரியவும் அறியவும் என வாசிக்கவும்
23. உயிரோடமொத்து பதமாகி உயிரோடு ஒத்து பதமாகி உயிரோடு சிவபதவி அடைந்தார்

# 31

# கர்ணல் ஜெ. பென்னிகுக் கல்வெட்டு

இரா.சந்தனம், தஞ்சாவூர்

**இடம்** : மதுரை மாவட்டம், தா. வாழப்பட்டி வட்டம், செம்புக்குடிபட்டி அருகில் முல்லைப் பெரியாறு பாசனக் கால்வாயின் குறுக்கே கட்டப்பட்டுள்ள அமுக்குப் பாலம்.

**காலம்** : பொ. ஆ. 1891

**செய்தி** : ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் முல்லைப் பெரி யாறு அணை மற்றும் முல்லைப் பெரியாறு பாசனக் கால்வாய்களை சென்னை மாகாணத்தின் பொதுப்பணித்துறை தலைமை பொறியாளர் கர்ணல் ஜெ. பென்னிகுக் பெயர் மற்றும் ஆண்டு குறிப்பிடப் பட்டுள்ளது.

1. 1891
2. COLLY J. PENNYCUICK R.E
3. CHIEF ENGINEER P.W.D



# 32

# சோழவந்தான் ஆங்கிலேயர் காலக் கல்வெட்டு

**இரா.சந்தனம்,**
**பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்**

**இடம்** : *மதுரை மாவட்டம் வாடிப்பட்டி வட்டம், சோழவந்தான் இரயில் நிலையம் அருகில் நகரி செல்லும் சாலை பிரிவின் இடது பக்கம்.*

**காலம்** : *பொ.ஆ. 1890*

**செய்தி** : *மதுரை மாவட்டத்தின் துணை ஆட்சியராக(பொது) இருந்த எம். தில்லை நாயகம்பிள்ளை அவர்களின் தனிப்பட்ட கடும்முயற்சியால் சோழவந்தான் – தாதம்பட்டி (வாடிப்பட்டியின் ஒரு பகுதி) இடையே சாலை அமைத்தமை.*

1. The
2. Construction
3. Of this road from
4. Sholavandan to
5. Thathemputty is
6. Solely due to the
7. Exertion of Mrrv
8. M. Tillainayagum
9. Pillaiaul Deputy
10. Collector on Gene
11. Ral Charge Madura
12. Distrect. 1890.
13. தாதம்பட்டிக்கிப் போகிற யிந்த
14. ரோட் மதுரை ஜில்லா ஜெ–
15. ணறல் சார்ஜ் டிப்ட்டிக்
16. கலேக்ட்டர் மகாளன ஸ்ரீ

17. எம். தில்லை நாயகம்பிள்ளை

18. யவர்களால் ஏற்ப்படுத்தப்பட்ட

19. டது. சோளவந்தான்

20. கி. ஆறுமுகம்பிள்ளையால்

21. செய்து முடிக்கப்பட்டு

22. விருக்கிறது.



# 33

# திருவதிகை சத்தரம், வாசுதேவன் பட்டுக் கல்வெட்டுகள்

**ப.கலைச்செல்வன்,**
**ஜே.ஆர்.சிவராமகிருஷ்ணன்,**
**சு.கண்ணன்,** அண்ணாமலைநகர்

**33 : 1**

இடம் : கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டம், திருவதிகை ஸ்ரீ கோவிந்தபெருமாள் சுவாமி கோயிலின் வடக்குப் பகுதியில் உள்ள இடிந்த கட்டடத்தின் சுவர்.

காலம் : கலியாண்டு *4998*, பொ. ஆ *1897*

செய்தி : பண்ருட்டி அருகில் உள்ள லிங்காரெட்டிப்பாளையத்தை சார்ந்த முத்துப்பெருமாள் செட்டியார் மகன் குமாரசுவாமி செட்டியார், அவர்தம்பி கோவிந்தசெட்டியார், குமாரர் இளையபெருமாள் செட்டியார் திருவதிகையில் ஆகியோர் ஸ்ரீஅரங்கநாதசுவாமி கோயிலுக்கு மூன்று திருமாளிகைகளை பிராமணர்களுக்கு தானமாக கட்டிக்கொடுத்தமை.

1. ஸ்ரீ ராமஜெயம்
2. கலியுகாதிவ 4498 சாலிவாகன 1819
3. இங்கிலீஷ் 1897 வருட நிகழும் ஏவிளம்பி
4. வைகாசிமீ 12யில் ஆரம்பித்து உலகின் கண்ணுள்ள
5. ஆன்மாக்கள் உஜ்ஜீவிக்க வெழுந்த இரக்ஷகராகும்
6. திருவதி ஸ்ரீ அரங்கநாதஸ்வாமி ஸந்நிதியில் விசேஷ
7. கைங்கரியஞ் செய்த இலிங்க ரெட்டிப் பாளயம் நன்
8. முத்துப் பெருமாள் செட்டியார் குமாரர் இராமசுவாமி
9. செட்டியாரும் அவர் தம்பி நா கோவிந்த செட்டியார் குமாரர்
10. இளைய பெருமாள் செட்டியாரும். ஸ்ரீ சக்கரவர்த்தி [ஸ்ரீ]
11. மகன் சந்நிதிக்கு வடமேற்கில் மூன்று திருமாளிகை
12. கட்டி முடித்தனன் திருமாளிகை மூன்றிலும்
13. சந்நிதியிற் கைங்கிரியம் செய்யும் பிராமணாள்
14. குடியிருக்கலாம் மேலும் மேற்கூறிய கைங்கிரி

15. யத்தைச் செய்யாமலும் அக்காலமிருக்குந் தரும

16. கர்த்தாவின் உத்திரவை மீறி நடந்தாலும் மேற்படி

17. . . . சத்திரத்தை விட்டு உடனே நீங்க வேண்டியது.

18. . . . இதின்றி இவர்கள் நீடித்திருப்பினும் அங்ஞ்

19. . . .ததீட்சை முதலிய சிரச்சம்பந்த முதலிய

20. . . .திடமும் இவர்கட்கு கிடைஞ்(யாது)

21. . . . என்பது திண்ணம்...

22. விளம்பி

23. வைகாசிமீ

24. மூன்றாவது நாள்

25. இங்ஙனம்

26. தருமஞ்செய்த

27. இராம சுவாமி செட்டி

**33 : 2**

இடம் : *திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டம், வாசுதேவன்பட்டு, அருள்மிகு சௌந்தரநாயகி உடன்உறை ஸ்ரீ பக்தவச்சலேஷ்வரர் திருக்கோயிலின் சண்டிகேஷ்வரர் கோயிலின் பின்புறச்சுவர்.*

காலம் : *பொ.க. 20 ஆம் நூற்றாண்டு*

செய்தி : *நாராயண செட்டியாரின் மனைவி சடச்சி அம்மாள் சண்டிகேஷ்வரர் கோயிலை 1939 ஆம் ஆண்டு கட்டுவித்தமை.*

1. சண்டி கேஷ்பறன்

2. கோவில் மட்டும்

3. நாராயண செட்டி பெஞ்ஜாதி சடச்சி அம்மாள் திருபணி தருமம் 1939

# 34

# தளி பாளையக்காரர் கல்வெட்டு

ச.இரவி,கோவை

இடம்: திருப்பூர் மாவட்டாம், உடுமலை வட்டம், தளி, தூக்குமரத்தோட்டத்திலுள்ள கற்பலகை

காலம்: பொ.ஆ. 1801ம் வருடம் ஏப்ரல் மாதம் 23ம் நாளை துண்முகி ஆண்டு;

செய்தி: கல்லறைக் கல்வெட்டு. தஞ்சாவூரைச் சார்ந்த அங்கிரை கதி என்னும் ஆங்கிலேயர் 27 வயதில் 1801 ஏப்ரல் மாதம் 23 வியாழக்கிழமை இறந்தமை.

. . . .

1. 1801 வருடம் மீ 23
2. தேதி வியாழகிழமை வரை-
3. க்கும் செல்லா நெ ன் ற-
4. துன் மிகி வருஷம் சித்திறை மீ 1
5. 3 தேதி தஞ்சை நகாத்திலி-
6. ருந்த அந்திரை கெதி (அங்கிரை கெதி)
7. பறங்கி யிருபத்தேழு வ-
8. யதில் தெய்விகமாகி அ-
9. டங்கின சமாது. . .

# 35

# மலையூர் செப்பேடு

**தி.சுப்பிரமணியன்,** கிருட்டிணகிரி.

**இடம்** : *தருமபுரி மாவட்டம். பாப்பாரப்பட்டிக்கு அருகிலுள்ள மலையூர் என்ற ஊரில் உள்ள ஏகாம்பரக் கவுண்டர் என்பவரிடமுள்ளது இந்தச் செப்பேடு.*

**காலம்** : *19ஆம் நூற்றாண்டு*

**செய்தி** : *செப்பேட்டின் முன்பக்கம் சூரியன், சநிதரன் ஆகியவற்றுடன் விரட்டைக் கிளிகன் காணப்படுகின்றன. சிவமயம் என்று தொடங்குகின்ற இச் செப்பேட்டில் மொத்தம் 130 வரிகள் உள்ளன. சாதி நாட்டாமை எவ்வாறு வழங்கப்பட்டது என்பதைச் இச்செப்பேடு கூறுகின்றது. ஐந்துமுறை நாட்டாமை வழங்கப்பட்ட விபரம் தெளிவாகக் காணப்படுகின்றது பேச்சு வழக்கிலுள்ள தமிழில் வாசகம் வெட்டப்பட்டுள்ளது.*

1. சிறுதலை பூண்டியிலிருந்து ஔகளந்தா கவுண்டனும்ஏகாம்பிரிகவு
2. ண்டனும் ரண்டு பேரும் மேர்க்கேரெரி வரச்சே சிங்கரிப்பட்டி கணவாயிலே
3. நூரு வேடராகிரர்கள் வந்து மரிச்சிக் கொண்ட போது ஓலைகளத்தாகவுண்டனு
4. ம் ஏகாக்பிரிகவுண்டனும் இவர்கரெண்டு பேரும் அவர்கள் மேல் சண்டைகள்
5. செய்து அவர்களில் நாலு வேரை வெட்டித் துரத்திவிட்டு அப்போ ஆலம்பாடி
6. வந்து சேந்து அந்த கோட்டையில் வீடுகட்டிப் கொண்டு நிலையாய் இருந்
7. தார்கள் அப்போ ஆலம்பாடி கோட்டையிலிருக்கப்பட்ட இருப்பாளி நாயக்கன் நீ
8. ங்களா ரென்று கேட்டான். நாங்கள் படையாச்சிகளென்று சொன்னார்கள் ஆனால் ந
9. ம் மள் பக்கத்திலே இருங்கோளென்று சேத்திக் கொண்டான். இப்படி அனேக காளை
10. ய் இருந்தார்கள். இருப்பாளி காயக்கனுக்கும் பென்னாகரம் தலைப்புக்கு சேந்த கோடாகவு

11. ண்டன்பட்டி மரியண்ணக்கவுண்டனுக்கும் இவர்கள் ரண்டு பேருக்கும் சச்சரவுகளாயி

12. ருக்கும் அப்படி விருக்குர நாளையிலே ஒருநாள் இருப்பாளி நாயக்கன் காணுகாம்

13. பள்ளிக்கு பயணமாகி பேரரபோது அந்த சமாசாரமரித்து மரியண்ணக்கவன்

14. டன் இவனை இந்த வேளையில் கொல்லவேணுமென்று தன்னுடைய ஆட்களை கூட்பு கொ

15. ண்டு முத்தூர் சமலை சந்துலே வளச்சி கொண்டு இவனுக்கும் அவனுக்கும் சண்டைக

16. ளானதை ஏகாம்பாரிகவண்டன் கேட்டு நம்ம துரையாகிய இருப்பாளி நாயக்கனுக்கு அகுடு

17. வந்ததென்று ஓடிப்போய் தப்பட்டை கொம்பு கத்தி ஆயிதத்துடனே மரியண்ணகவுண்ட

18. டைய ஆள்களை பன்னண்டூ பேரே வெட்டின உடனே மரியண்ண கவுண்டனு

19. டைய ஆள்கள் சேதமானதே ஓடிப்போனன். அப்போ இருப்பாளி நாயக்கன் பார்த்து நம்ம உ

20. யிர் காப்பாத்தினா னென்று இவனுக்கு என்ன குடுப்போம் நாம்பெ லென்று மனதிலெண்ணி ஏ

21. காம் பிரிக்கவுண்டனையும் அளைத்து உனக்கு என்னா வெகுமானம் வேனுமென்று கேட்

22. டான். அப்போ ஏகாம்பிரிகவண்டன் எங்களுகு சாதி நாட்டாமை அதிகார வேணுமெ

23. ன்ரான் அப்போ ஏகாம்பிரிக்கவுண்டன். இருபாளி நாயக்கன் உங்கள் பத்து ஜனங்களை அழைப்பித்து

24. க் கொள்ளுமென்றான். அப்போ ஏகாம்பிரிகவுண்டன் பத்து ஜனங்களை அழைப்பித்தா

25. ன். ஆலம்பாடி மாணிக்க கவுண்டன் கொதள்ளி முத்துக்கவுண்டன் காணுகாம்பள்ளி

26. சென்றாயக் கவுண்டன் மத்தூர் காணிக்கவுண்டன் சென்னப்பட்டணம் கோவிந்தக் கவு

27. ண்டன் காணுகாம்பள்ளி கொன்னையக் கவுண்டன் பாளையம் தாதக் கவுண்டன் ஆனை

28. க் கல்லு கரிராமக் கவுண்டன் ஆரவள்ளி திம்மராயக்கவுண்டன் கவுளிகரை வெங்

29. கிட்ட ராமக்கவுண்டன் தளி ஆரிமுத்து கவுண்டன் தெங்கனிக்கோட்டை திம்மதாய

30. க்கவண்டன் தெல்லமங்கலம் வேடப்பகவுண்டன் பஞ்சப்பட்டி பச்சாக்கவுண்ட

31. ன் தல்லி முல்லி அக்கிராராம் முதலிக்கவுண்டன் முத்தூர் ராமகவுண்டன் பவளத்தூரு

32. பரசு ராமகவுண்டன் கொண்டமங்கலம் லச்சமண கவுண்டர் தாசம்பட்டி சந்தகவுண்

33. டன் மலைஊரு ஒல களந்தா கவுண்டன் நாட்டராம் பாளையம் பெரியண்ணகவுண்டன் அனு

34. சட்டி ராமசாமி கவுண்டன் உரிகம் னாக் கவுண்டன் கோட்டள்ளி வையாயுரி கவுண்டன்

35. லச்சுமண கவுண்டன் அந்தானள்ளி அல்லிராசிக் கவுண்டன் கானுகாம்பட்டி நஞ்சப்

36. பக்கவண்டன் இத்தண்ட பேரூம் மகாநாட்டாருக்கும் காய்கரி பதார்த்துடனே பதனஞ்சி நாள்

37. வரைக்கும் சாப்பாடு விசாரித்து தாம்பூலம் குடுத்து சமதாச்சாளென்று மகா நாட்டாரு

38. ம் இருப்பாளி நாயக்கனும் சம்மதித்து இவனுக்கு ஒன்ன இருத்தாலும் நிலை நிக்காதென்

39. று ஆலோசித்து இந்த கவண்டர்கள் சம்மதியால் அந்த ஆலம்பாடிக்கு சேந்த சென்னப்

40. பட்டணம் வரைக்கும் நஞ்சனம்கோடு வரைக்கும் ஒசூர் வரைக்கும் மகா நாட்டாமை பட்

41. டக்கார னென்றும் உரம்பரையார் முன்பாக இருப்பாளி நாயக்கன் சர்வதாரி வருஷம்

42. சித்திரை மாசம் பதிமூனாம் தேதியில் எழுதி குடுத்த பட்டயம் என்னமென்ரால் உன்னுட

43. சாதி தெண்டனை அடிக்கக் கோலும் கட்டக்கயரும் கூடைக்கல்லும் பிளிய மிராலும் உன்சா

44. தியிலுண்டான தப்பு வாங்கிக் கொள்ளுமென்று சாதி நாட்டான உன்னுதென்று இத்

45. தினக் கவுண்டர்களும் துரையும் வெகுமானத்தோடே பாவித்தார்கள் இப்படிக்கு உ

46. ங்கள் வம்சமுள்ளவரைக்கும் மகாநாடு நடத்தி வருகிறது. இனிமேல் நானும் உங்க

47. ள் கோத்திரமுன்ன வரைக்கும் மனவர்த்தி விட்டு விட்டேன் நாட்டாரும் மெச்சினவனுகு சாத

48. வரியும் கடை எண்ணை கனடபாக்கு மகா நாட்டார் விட்ட மான்ய மிதுகள் உன்னுதென்று

49. சங்கத்தி வரிமானியம் விட்டார்கள் இந்த நாடு பூமி ஆகாயம் சந்திர சூரியர்களுள்ளவரைக்

50. கும் உன்னுதே. இதுக்குச் சாச்சியாரென்ரால் நஞ்சங்கோடு நஞ்சண்டஸ்வரர் மலை மா

51. தேஸ்வரர் ஆலம்பாடி ரங்க நாயகர் டெங்கனிக் கோட்டை வெங்கிட்டராமனா திருவண்

52. ணாமலை அருணாசலயீஸ்வரர் சீரங்கத்து ரங்கராயர் இந்த நாட்டாமையை யாதாமோ

53. ருவன் பகரித்தால் அவர்கள் காசியிலே காராம் பசுவை கொண்ணபாவத்திலே போவார்கள் பிராம

54. ணரை கொண்ரபாவத்திலே போவார்கள் கோயில் இடித்த பாவத்திலே போவார்கள் குருதுரோகம்

55. பண்ணினவர்களைந்த பாவத்திலே போவார்களோ அந்த பாவத்திலே போவார்கள் இப்படிக்கு இரு

56. ப் பாளி நாயக்கன் ஏகாம்பிரிகவுண்டனுக்கு எளிதிக்குடத்த பட்டயம் கயி சிவமயம் இ

57. ந்த படிக்கு உலகளந்தா கவுண்டனும் கொம்பரகவுண்டனும் ஆலம்பாடி நாட்டை ஆ

58. ண்டுக் கொண்டிருக்கும் காலத்தில் பெரியப்பா நாயக்கன் சின்னய நாயக்கன் பாலப்ப நாயக்க

59. ன் இவர்கள் வந்து எங்களுக்கும் நீங்கள் வர்த்தினை உங்கள் வீட்டுக்கு ரண்டு பணம் குடுக்க வேணு

60. மென்று கேட்டார்கள். அதுக்கவர்கள் நாங்கள் குடுக்கிரதில்லை என்ரார்கள் நாங்கள் விடுகிரதில்லை

61. என்றார்கள். இவர்களுக்கும் அவர்களுக்கும் சச்சரவு பட்டு ஆடு மாட்டை கொள்ளை யாடினார்

62. கள். இவர்கள் அவர்களில் பத்துவேடரை வெட்டி கொள்ளையை திருப்பி கொண்டார்கள் இவர்களு

63. ம் அவர்களும் கூடிக்கொண்டு செகதேவிராய ரண்டைக்கு போனார்கள் ராயிர் பார்த்து நீங்கள்

64. வந்த விபரமுமன்ன வென்று விசாரிக்கும் போதிலெவர்கள் எங்கள் ஸ்தளத்துக்கு வந்த சேர்ந்து

65. படியால் நாங்கள் எங்கள் வர்த்தியையை கேட்டோமென்று பெரியப்ப நாயக்கன் சொன்னான் அ

66. துக்கு ஏகாம்பிரிகவுண்டன் செகதேவிராயரை கும்பிட்டு சொல்கின்றான் வன்னிய வ

67. ம்சமும் அப்படி கொடோமென்ரோம் நாங்கள் விடுருரதில்லை என்று இவர்கள் எங்கள்

68. ஆடுமாடெல்லாம் கொள்ளையிட்டார்கள். நாங்கள் அவர்களை பத்து பேரை வெ

69. ட்டி கொள்ளையை திருப்பி கொண்டோமென்று யேகாம்பிரிகவுண்டனும் உலகளந்தாக

70. வண்டனும் சொன்னார்கள். அப்போ செகதேவிராயர் மெச்சிக் கொண்டு வேடர் கையில் பொன்

71. அபுராதம் வாங்கிக் கொண்டார் போ நீங்கள் சௌரியவான்காளன்று மெச்சி உங்

72. களுக்கு கென்ன வெகுமானம் வேணுமென்ரார். அப்போ யோகம்பிரிக்கவுண்டனெங்களுக்கு

73. ன்னம் சாதி அதிகாரம் வேணு மென்றார். அப்போ செகதேவிராயர் உங்கள் பத்து

74. செனங்களை கூட்டிக்கொள்ளுமென்றார். ஆலம்பாடி வரைக்கு சென்னபட்டனம் வ

75. ரைக்கும் காணுகானள்ளி வரைக்கும் ஓசூர் வரைக்கும் மாடள்ளி வரைக்கும் ஆனக்கல்

76. லு வரைக்கும் பிக்கி பவளத்தூர் வரைக்கும் ஆலம்பாடி மாணிக்க கவுண்டன் கௌதள்

77. ளி மூர்திக்கவுண்டன் ஆரவள்ளி தொண்யைக்க கவுண்டன் நஞ்சன் கோடு நஞ்சப்ப கவுண்ட

78. ன் கோடள்ளி பெரியகவுண்டன் இன்னம் மற்றுமுண்டான வரவினமுறையின வரு

79. ம் கிளக்கு சீமைக்கு கூட்டிப் போகும் போது தரை தப்பட்டை கொம்பு சல்லி கொடை சாரை கொ

80. த்துடும்பு பதினெட்டு ஆயிதத்துடனே களஞ்சிபுரம் நாட்டுக்குப் போய் காமாச்சிய

81. ம்மன் கோயிலிரங்கினார்கள். அந்த ஓபளியிலிருக்குப்பட்ட கவுண்டார்கள் சிரை மீட்ட கவண்

82. டன் ஐயன்பேட்டை சுப்பராய கவுண்டன் ஆரணி பெருமாக்கவண்டன் கீழ்குப்பம் காளிக்

83. கவுண்டன் உடையார்பாளையம் சங்க கவண்டன் திருவண்ணாமலை அருணகிரிக்கவுண்டன்

84. தீர்த்தமலை மூர்த்திக்கவுண்டன் இன்னும் மற்றுமுண்டான உரைவின் முரையாரனை வரும் கூ

85. டி பதினைஞ்சு நாள் வரைக்கும் மிருந்து ஆலோசினை செய்து யோகாம்பிரிக்கவுண்டன் எங்க

86. ள் வன்னிய வமுசத்துக்கு குலுகுருவாக இருக்க வேணுமென்று துரையே கேட்டார்கள் அப்ப

87. டியே அந்த கவுண்டர்கள் சம்மதியினலே செயவருஷம் வையாசி மாதம் பதினைஞ்சாம் தே

88. தி வெள்ளிக்கிழமை தசமி கூடின சுபதினத்திலே செகதேவிராயர் யேகாம்பிரிக் கவுண்டனுக்

89. கு எளுதிக்குடுத்த செப்பேடு பட்டயம் என்னமென்றால் துரை பாக்கு பச்சைவடம் சலத்தியு

90. ம் கொடுத்து உங்கள் சாதியில் அடிக்கக் கோலும் கட்டகயிகும் குடுத்து உன் வமுசமு

91. ள்ள வரைக்கும் நாடு செலுத்தி வருகிறது. சுளிசெத்த புளப்பு உன்னுதே இதுக் காராகிலும்

92. அபகரித்து சுட்டிசெய் தோர்களுக்கு ள சாயபொன் அபராதம் குடுக்கப்படும் அதும் த

93. விர அவன் வீட்டுக்கு மாட்டெலும்பும் வேப்பிளையும் கொருகுகிறது இதுக்கு சாச்

94. சி யாரென்ரால் காஞ்சிபுரம் யேகாபரநாதர் திருவண்ணாமலை அருணாசலீஸ்வரர்

95. திருப்பதி வெங்கட்டரமணன் சீரங்கத்து ரங்கநாயகர் திருசெங்கோடு அர்தணாரீஸ்வரர் ந

96. ஞ்சகோடு நஞ்சுண்டேஸ்வரர் மேல்கோட்டை செல்லபுள்ளையார் இருருக்கு மேல் யாதாமொ

97. ருவன் இந்த நாட்டை அபகரித்தவன் இத்தின கோயிலை இடித்த பாவத்திலே போவார்கள் கா

98. ராம் பசுவை கொன்ன பாவத்திலே போவார்கள் இந்தபடிக்கு செகதேவிராயர் யோகம்பிரிக்கவுண்

99. டனுக்கு எழுதிக்குடத்த செப்பேடு பட்டயம் சயி ஸ்ரீ ராமஜெயம் இந்த படிக்கு ஆ

100. லம்பாடி மகாநாடும் காவேரி தேசஸ்வரர் தேரும் பிரமிச்சி கவண்டன் உபயம் நடத்தி வரு கூட தெ

101. ம் காலத்திலே வலங்கை யாருக்கும் இடங்கை யாருக்கும் சச்சரவுபட்டு உங்கள் விருது வர

102. ன்னு பிரமிச்சக் கவுண்டனை தடுத்தார்கள். அப்போ ஆலம்பாடி காட்டிலிருந்து கவுண்டரை கூட்பு அ

103. ந்த வலகையாரே அடித்து தருத்திவிட்டு தேசேஸவரர் சாத்திரயே முப்பத்திரென்டு மேலவாத்தியத்

104. துடனே தேரை நடப்பித்தான் வலங்கையார் மைசூர் கர்த்திரிடத்திலே போய் பிராது செய்தார்கள் அ

105. ப்போ கர்த்தர் பிரமச்சிகி கவுண்டனை அழைத்து விசாரிக்கும் போது பிரமிச்ச கவுண்டர் எங்க

106. ளுக்கு முப்பத்திரண்டு மேள வாத்திய முண்டு அந்த வாத்திய மில்லாமல் தேரை கூடப்பிக்க சொன்னார்க

107. ள். அப்படி நடப்பிக்க மாட்டோமென்றோம் அதுனாலே எங்களுக்கும் அவர்களுக்கும் சச்சரவுஹ

108. வந்ததென்றார். அப்போதுரை ஆலோசனை செய்து அந்த காவேரி நதியில் வாத்தியத்தை யாரும் தடுக்

109. கக் கூடாதென்று வலங்கையார் கையில் ள பொன் அப்ராதம் வாங்கி வைத்து பிரமிச்சிக் கவுண்ட

110. னைமெச்சி உங்களுக்கு முப்பத்திரண்டு மேலவாத்தியம் செல்லும் மென்று தீர்மானித்து விட்டு

111. உன்னென்ன வெகுமானம் வேணுமென்று கேட்டார். பிரமிச்சிக்கவுண்டர் எங்கள்

112. சாதி நாட்டாமை அதிகாரம் வேணுமென்று கேட்டான். பிரமிச்சிக்கவுண்டர் கூட வந்த கவுண்டர்

113. கள் சம்மதியினாலே கர்த்தர் பிரமிச்சி கவுண்டனுக்கு பச்சவடம் சகலத்தியும் வெகுமானம்

114. குடுத்து உன் சாரியில் கல்யாணத்துக்கு பணம் ரூ பாக்குபடி வைத்தினை கட்டு அஞ்டு கு தப்புமுட்டு

115. ம் நீ வாங்கிக்கொண்டு உன் நாட்டை சுகமாய் நடத்தி வருகிறது. இதையாதாமொருவன் அப

116. கரித்தாவன் வீட்டுக்கு மாட்டெலும்பும் வேப்பிலையும் சொருகிறது இதுக்கு சாச்சியா ரென்றால் நஞ்

117. சனங்கோடு நஞ்சுண்டேஸ்வரர் மலை மாதேஸ்வரர் மேல்கோட்டை செல்ல பிள்ளையார் ஓசூர்

118. சூ லிங்கேஸ்வரர் காவேரி தேசேஸ்வரர் திருப்பதி வெங்கிட்டரமணர் சீரங்கத்து ரங்கசாமி இந்த ப

119. ட்டயம் மைசூர் கர்த்தர் பிரமச்சிக் கவுண்டனுக்கு எளுதிக் குடுத்த பட்டயம் நலமாயிருக்கவும்

120. ராமஜெயம். டெங்கணிகோட்டை இபிராம் சாயு அதிகாரத்தில் கௌந்தைக் கவுண்டனு

121. க்கு எளுதிக்குடுத்த பட்டயம் என்னமென்றால் உங்க சாதியிலுண்டான தப்பு முப்பும்

122. கலியாணத்துக்கு பணம் பாக்கு படிவெத்திலை கட்டு ரூ இந்தப் படிக்கி இபுராம் சாய

123. பு தீர்மாணித்து கௌத்தை கவண்டனுக்கு பாக்கு பச்சவடம் குடுத்து உங்கள் காட்டை நீசு

124. கமாக ஆண்டுக் கொண்டிருக்கிறது இந்த நாட்டை யாதாமொருவன் அகோபி செய்து இ

125. ந்த நாடு ஆதி எல்லாம் மென்று இருந்தால் கானுகானள்ளி தெரு வீதியில் சாசனகல்லு பார்

126. க்கவும் உபயன் கல்லு பார்க்கவும் காவேரி தேசேஸ்வரர் கோயில் முன்பாக இபுராம் சாய

127. பு கொளந்தைக் கவுண்டனுக்கு எளிதிக்குடுத்த பட்டயம் சயி சிவமயம் வினாயகர் துணை

128. சாமி நாதாச்சாரி.

# 36

# வழக்கறுத்தீஸ்வரர் கோயில் கல்வெட்டுக்கள்

**க.ஆ.கவிதா,** சென்னை.

**35 : 1**

**இடம்** : *காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரம் வட்டம், காஞ்சிபுரத்தில் உள்ள வழக்கறுத்தீஸ்வரர் கோயிலில் முதலியார் மண்டபத்தின் மேற்குச் சுவர்.*

**காலம்** : *பொ.ஆ. 1904*

**செய்தி** : *மண்டபம் கட்டியது*

1. சிவமயம்
2. மாதொட்டி
3. ஆ. ஆர்க்காடி தி
4. மாசிலாமணி மு
5. தலியாற் மண்–
6. டப தர்மம்
7. குரோதி வருஷ–
8. ம் அர்ப்பிசி மி
9. 1904 நவம்பர்
10. மீ காஞ்சிபுரம்

**35 : 2**

**இடம்** : *மேற்படிக் கோயில் நவக்கிரக சன்னதி நுழைவாயிலின் மேற்புற சுவர்.*

**காலம்** : *சகம் 1807 (பொ.ஆ. 1884)*

**செய்தி** : *நவக்கிரக சன்னதி கட்டப்பட்டது*

1. சிவமயம்
2. சாலிவாகன சகாப்தம் 1807
3. இங்கிலிஷ் 1884 ஆகஷ்ட்டு மீ
4. 25 ருதார்ண வருஷம் ஆவணி மீ
5. நகரம் காஞ்சிபுரம் இராஜாம்

6. பேட்டை செட்டித் தெருவில் ஸ்ரீ
7. வழக்கறுத்தாஸ்வரர் சந்நதியில்
8. ஷை தெருவில் வசிக்கும் விர்ப்பிழா ம-
9. காரிஷி கோத்திரம் சாலை சமர்-
10. புரி செட்டியார் குமாரர்
11. சுப்பராய செட்டியார்
12. ல் நவக்கிரகங்களும் ஆலயமும்
13. கட்டப்பட்டு நித்தியாம்சைக்கு
14. ரூபா இருநூறும் ஷை கிராமத்தில்
15. வைக்கப்பட்டிருக்கிறது
16. திருச்சிற்றம்பலம்

# 37

# தென்காசிச் செப்புப்பட்டயம்

**செந்தீ நடராசன்,** நாகர்கோவில்.

**இடம் :** *நாகர்கோவில் கோட்டாறு இனிய . எஸ்.ஆர்.ஸ்ரீராம் அவர்கள் வீட்டில் இரு தலைமுறையாக இருந்து வருவது.*

**அளவு :** *செப்புப் பட்டய அளவு 17 செ.மீ.* X *24 செ.மீ. நிறை 480 கிராம். ஒரு பக்கம் மட்டும் தெளிவாகவும் ஆழமாகவும் பொறிக்கப்பட்டுள்ளது. 21 வரிகளில் அமைந்துள்ள செப்புப் பட்டயம்.*

**மொழி :** *வரிவடிவம் கிரந்தம். மொழி சமஸ்கிரதம். நில எல்கைகளும் பட்டயம் பொறித்தவர் பெயரும் தமிழ் வரிவடிவில் தமிழில் உள்ளன.*

**செய்தி :** *நெல்லை மாவட்டம் தென்காசி அருகில் அமைந்த சைவ கோளகீ மடத்தின் ஸ்ரீசுப்பிரமணியர் மற்றும் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் வழிபாட்டிற்கு அளிக்கப்பட்ட நிலக் கொடை குறித்தச் செப்புப்பட்டயம் இது. கொடுத்தவர் பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவரும் தென்மணலூரில் வாழ்பவரும் பாண்டிய வம்சத்தவருமான வீரசூர மஹிபதியின் மகன் பூபதி. நிலம் தென்காசி ஆறு, முக்கடல்ஆறு, இலஞ்சி ஆறு, மேலகரம் ஆறு ஆகியவைகளுக்கு நடுவே இருப்பதாகச் செப்புப் பட்டயம் குறிப்பிடுகிறது. பட்டயம் பொறித்தவர் சில்ப்பம் சிந்தாமணி ஆசாரி.*

*ஆய்வுக்குறிப்பு சாலிவாஹன சகாப்தம் 771 என வருகிறது. சாலிவாஹன சகாப்தம் 771 ற்கு நேரான ஆங்கில ஆண்டு கிபி 849. இது எழுத்தமைதிக்குப் பொருந்திப் போகவில்லை. மேலும் இக்காலத்தில் மதுரை மூலவருக்கு மீனாட்சி சுந்தரேஸ்வரர் எனப் பெயர் வழங்கவில்லை.* **செப்பேட்டில்** *வரும் நில எல்லைகள் கேரளப்பகுதியை ஒட்டியவை. கேரளாவில் கொல்லம்1124 என்பதை 'கொல்லம் ஒருநூற்று இருபத்தி நாலு'(124). என்று குறிப்பிடும் மரபு இன்றும் உண்டு. அவ்வகையில் சக ஆண்டு 1771 ஐ 771என்று குறிப்பிடுவதாகக் கொண்டால், ஆண்டு கிபி 1849 எனக்கொள்ளலாம்.*

கோளகி மடம் புராதன சைவ மடங்களுள் ஒன்று. இம்மடத்தில் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னர் காளமுக, பாசுபத, லகுலீசபாசுபத சைவர்கள் சமயப் பயிற்சி பெற்றதாகவும், மடம் பிராமணர்கள் பொறுப்பில் இருந்ததாகவும் தெரிகிறது.

**தென்காசி கிரந்தச் செப்புப்பட்டயம் (மொழி சமஸ்கிரதம்)**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸா'லிவாஹந ஸ'காப் $_3$தேஷு சத்ரயிகஸ பூத்யுத்தரஸ பூஸ'தேஷுக$_3$தேஷு
2. ஆகீ$_{3ஸ}$ரஸ ஸம்வத்ஸரே உத்தராயணே சைத்ராமாஸே ஸு'க்லபிக்ஷ ஷஷ்ட்$_2$யாம் ஸ்தி$_2$ரவாஸரே
3. ஆருத்$_3$ர நக்ஷத்ரே ஸ்ரீமத்ஸகல ஜக$_3$ந்நிதா$_3$ந பூ$_4$த பரசிவஸ த்$_3$ரோஜாத முக$_2$ தீ$_3$க்ஷித ஸ்ரீஸு
4. ப்$_3$ரஹ்மண்ய ப்ரஸாத$_3$லப்$_3$த$_4$ தீ$_3$க்ஷா ஸி'வபூஜாதி$_3$ ஸத்$_3$யோ ஜ்யோத்திஸ்'ஸி' வாசார்ய்யலப்$_3$த$_4$ தீ$_3$க்ஷ நிர்மேதா$_3$
5. தீரநிவாஸி கோ$_3$ளகீ மடாதிஷ்டி$_2$ ஈஸாந ஸி'வாசார்ய்யாநுக்ரஹீத ஹரிஸ்'சம்த்$_3$ர முநிநாமக
6. ஸி'வாசார்ய்ய பரம்பரயாலப்$_3$த$_4$ தீ$_3$க்ஷாநுக்ரஹ : அவாந்தர ஸை'வா: ஸுப்$_3$ரஹ்மண்ய
7. ஸி'வக$_3$ணா: தே$_3$ஸி'கேம்த்$_3$ரா: இல்லமம்ட்$_3$ல மத்யவர்த்தந: ஆந்தராளிக ஸை'வாந் ஸி'ஷ்யாந்
8. அநுக்$_3$ரஹ்ண ந்தஸ்ஸந்தஸ்தி$_2$தா: பாம்ட்$_3$யதே$_3$ஸ' வாஸிநா விக்ரம பூ$_3$பேந த$_3$க்ஷிணதே$_3$ஸ'ம்
9. ப்ரத்யா நீதா: த$_3$க்ஷிண தே$_3$ஸி'ய தாம்ரேபார்ணிதீரஸ்த$_2$ ப்3ரஹ்மவ்ருத்த$_4$ புர பூர்வபா4க$_3$ஸ்தி$_2$
10. தேந்மணலூருபுர வாஸ்தவ்ரேந வீரஸ'ரமஹீப)திநா ஸம்மாநீதா: த்ரிகூடாசலே
11. ஸி'ஷ்யாநுக்ரஹ்யஸ்தி$_2$தா: வீரஸ'ரமஹீபதி புத்ரேண குமார சக்ரவர்த்திநா
12. ம்நா பூ$_4$பதிநா ஸி'வாக$_3$ம ஸித்தா$_4$ந்த பாரங்க$_3$தாநாம் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ப்ரஸாத$_3$ஸமா
13. ஸாதி$_3$த நிக்$_3$ரஹ்யநுக்$_3$ரஹ ஸாமர்த்தி$_4$யாநாம் நித்யாநுஷ்ட$_4$ யமாந ஸ்ரீமீநாக்ஷீ ஸுந்த$_3$ரேஸ்'வரஸ
14. பார்ய்யாணாம் ஸ்ரீ ஸுப்$_3$ரஹ்மண்ய தே$_3$சிகேம்த்$_3$ராணாம் பாரம்பார்ய்யா க்ரமேண ஸ்ரீமீநாக்ஷீ

15. ஸு*ம்த$_3$ரேஸ்வர பூஜார்த்த$_2$ம் ஸிஷ்யாநுக்ரஹார்த்த$_2$ம் ஸி'வத$_4$ர்மே பரிபாலநார்த்த$_2$ம் ஸி'வப$_4$த்த

16. ஸத்காரார்த்த$_2$ம் த$_3$க்ஷிணகாசீ க்ராம பஸ்'சிமபா$_4$கே$_3$ பஞ்சவிம் ஸ'திபா4ர க்ஷேத்ர பரிமிதா பூ$_4$

17. மி: ஆசம்த்3ரார்கம் த$_4$ர்மோர்த்த$_2$ம் பூ$_4$யாதி$_3$தி மத்வாகி$_3$மாநேந த$_3$த்தரி இந்த பூ$_4$மிக்கு நான்கெல்கையா

18. வது தென்காசி ஆற்றுக்கு மேற்கு முக்கடல் ஆற்றுக்கும் தெற்கு இலஞ்சி ஆற்று

19. க்கும் கிழக்கு மேலகறம் ஆற்றுக்கும் வடக்கு ஏவமம்கீ$_3$க்ருத்ய குமாரசக்ரவர்த்தி நா

20. ம்நா பூபதிநா த$_3$த்தமித$_3$ம் த$_4$ர்மே ஸா'ஸநம்

21. யிந்தப்பட்டயம் யெழுதினேன் சிலப்பம் சிந்தாமணிய ஆசாரி யெழுத்து.

**பட்டயச் செய்தி.**

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் எழுநூற்று எழுபத்தொன்று முடிந்த
2. ஆங்கிரஸ வருஷம் உத்திராயணத்தில் சித்தரைமாத வளர்பிறை சஷ்டி சனிக்கிழமையில்
3. ஆதிரை நட்சத்திரத்தில் திருமிகு அனைத்து உலகிற்குத் தலைவனாகத் தோற்றம்தரும் பரசிவனின் சத்யோஜாத முகஅருளில் வந்த ஸ்ரீ சு
4. ப்ரிமணியன் அருள்பெற்ற தீக்ஷையினால் சிவனை வணங்கும் சத்யஜோதி சிவாச்சாரியர் வழிவந்த தீக்ஷை பெற்ற நர்மதைக்
5. கரையில் இருக்கும் கோளகிமடம் வாழ் ஈசான சிவாச்சாரியர் அருள்பெற்ற ஹரிசந்திரமுனியின்
6. சிவாச்சாரிய பரம்பரையில் தீட்சையருள் பெற்றவரும், அவாந்தர சைவரும், சுப்ரமணிய
7. சிவகணத்தவரும், தேசாந்திரிகள் தலைவர்களாக, இல்ல மண்டலத்தின் நடுவில் வாழ்பவரும் ஆந்திர தேசத்தவரும், சிவஅடியவர்கள்
8. ஆசி பெற்ற சந்ததியாரும், பாண்டிய தேசத்தில் வசிப்பவருமான விக்ரமபூபரைத் தெற்கு தேசம் நோக்கி
9. வரச்செய்து, தென்னாட்டு தாமிரபரணிக்கரையில் உள்ள பிரம்மவிருத்தபுரத்தின் கிழக்குப் பாகத்திலுள்ள

10. தென்மணலூர் புரம் வாழும் வீரசூரமகீபதி அவர்களால் கௌரவிக்கப்பட்டவர்களாகத், திரிகூடமலை

11. அடியவர்கள் ஆசியுடன் வாழும் வீரசூரமகீபதியின் மகனான குமாரசக்கிரவர்த்தியான

12. பூபதி, சிவ ஆகம சித்தாந்தங்களில் தேர்ச்சிபெற்றவர், ஸ்ரீ சுப்ரமணியர் அருளால்

13. பெற்ற ஆக்கல் அழித்தல் வல்லவரான தின வழிபாடுபெறும் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர்

14. ஆலயத்திலிருக்கும் ஸ்ரீ சுப்ரமணிய தேசாந்திரி வழிவந்த ஸ்ரீ மீனாட்சி

15. சுந்தரேஸ்வர பூஜை வழிபாடுகள் நடத்தவும் சிஷ்யர்களை அனுக்ரஹிக்கவும் சிவதர்ம பரிபாலனத்திற்கும் சிவபத்தியைக்

16. கடைபிடிக்கவும் தென்காசி கிராமத்தின் மேற்கு பாகத்தில் கோவிலுக்காக விட்டுக் கொடுத்த 25 பார பூ

17. மி சந்திர சூரியர் இருக்கும்வரை தர்மமாக மரியாதையுடன் கொடுத்த இந்த பூமிக்கு நான்கெல்கையா

18. வது தென்காசி ஆற்றுக்கு மேற்கு முக்கடல் ஆற்றுக்கு தெற்கு இலஞ்சி ஆற்று

19. க்கும் கிழக்கு மேலகரம் ஆற்றுக்கும் வடக்கு எனக் கொண்டு குமாரசக்ரவர்த்தியான

20. பூபதி தத்தம் செய்த சாசனம்

21. யிந்த பட்டயம் எழுதினேன் சில்ப்பம் சிந்தாமணிய ஆசாரி எழுத்து.



# 38
# கன்னியாகுமரி மாவட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்

**செந்தீ நடராசன்,** நாகர்கோவில்.

## 38:1–4

**இடம் :** கன்னியாகுமரிமாவட்டம் விளவங்கோடு வட்டம் மிடாலம் (உதயமார்த்தாண்டம்) ஊரில் செட்டு சமூகத்தினரின் முத்தாரம்மன் கோவில் முன்மண்டபத் தூண்களில் உள்ள கல்வெட்டுகள்.

**காலம் :** *கொல்லம்986, பொ.ஆ.1811, தை 25*

**செய்தி :** *தூண்கள் அமைத்தமை*

**1**

1. ராம செயம்
2. 986 ஆண்டு
3. மார்களி மாதம்
4. 25 தியதி திங்
5. களாச்சை
6. ம் மகியிரம்
7. நட்செத்திர
8. த்தில் செட்டு
9. வேலாயுத
10. ப் பெருமாள்
11. குமரர் பெருமாள்
12. கணக்காயிட்டு

**2**

1. ராம செயம்
2. 986 ஆண்டு
3. மார்களி மாதம்
4. 25 தியதி திங்
5. களாச்சை

6. ம் மகியி

7. ர நச்சத்திர

8. த்தில் இரா

9. மு சுப்பிறமண்

10. யன் கணக்காயி

11. ட்டு அமச்சு நிறுத்

12. தின தூணு அம்ம

13. ன் துணை

**3**

1. சிவமயம்

2. கு அணஞ்

3. ச பெருமா

4. ள் கணக்கா

5. யிட்டு அம

6. ச்சு நிறுத்தின

7. தூணு அம்

8. மன் துணை.

**4**

1. ராம செயம்

2. 986

3. ஆண்டு மார்களி

4. மாதம் 25 தியதி உத்த

5. மி ன் பெ

6. ண்ணு க

7. ணக்காயிட்

8. டு பணி செயி

9. து நிறுத்தின

10. தூணு அம்

11. ம ன் துணை.

## 38:5–6

இடம் : கன்னியாகுமரிமாவட்டம், கல்குளம் வட்டம்,
தலக்குளம் ஊரில் செட்டு சமூகத்தினரின் தெய்வ விநாயகர் கோவில் முன்மண்டபத்தூண்களில் உள்ள கல்வெட்டுகள்.

காலம் : கொல்லம்1091, பொ.ஆ. 1916

செய்தி: கோயில் கட்டுமானப்பணிக்கு கொடை அளித்தமை

**5**

1. தலகுளம்
2. மேலுத்தெ
3. ருவில் சிதம்
4. பரம் பழனியா
5. ண்டி செட்டி
6. யார் முகப்பு ம
7. ண்டபம் வேலைக்கு
8. குடுத்த ரூ 3
9. 25 10
10. 91 வருஷம்
11. தை 4 தியதி

**6**

1. இந்த முகப்
2. பு மண்டபத்து
3. க்கு ரூ 32
4. 5 போக மீதி
5. ரூ பூரச்செ
6. லவும் இ.சிவ
7. னு செட்டியார்
8. அவர்களால்
9. கொடுக்கப்பட்டது.

# 39

# ஆச்சிபட்டி ஜமீன் பட்டயம்

**இரா.ஜெகதீசன், உடுமலை ரவி**

இடம் : *கோவை மாவட்டம் ஆச்சிபட்டி ஜமீன் வசம் உள்ளது.*

காலம் : *பொ.ஆ. 17ஆம் நூற்றாண்டு*

செய்தி : *கோயில் பூஜைக்கு ஏற்பாடு செய்தமை.*

1. செனனி சென்ம சௌபாக்கியானாம வாத்தினி குல சம்பதாம் பதவிபூர்வ புண்ணியானா மலிக்கீயதே சென்ம பத்திரி கா் சோலைத் ஸ்ரீமன் சாலியவாகன சகார்த்தம்

2. 4080 கலியுகசகார்த்தம் 1610 மேல் செல்லா நின்ற துன்மகி வருடம் ஆவணி நலயத்தில் சுக்கிரவாரம் அத்த நட்சத்திரமும் திரயோதசியும் கூடிய சுபதினத்தில் எழுதிய சிலா

3. சாதனபட்டயம் என்னவென்றால் தாராபுரம் தலத்து செட்டுலை காரமல்லி செட்டி மகன் மல்லி சின்னான் செட்டி மகன் வசவன் செட்டி சந்தரவசவன் செட்டி மகன்

4. சுந்தரசெட்டி பெத்து செட்டி மகன் குமாரன் செட்டி தாராபுரத்து எசமானர்கள்நாலு பேரும் இருபத்திநாலு நாட்டிலுள்ள பத்தாயிரம் குலச்சாதியார் அதிபதியாக்ய இம்மடிப்பட்டம் எல்லப்ப

5. கவுண்டர் அவர்களுக்கு எளுதிவைத்துக் கொடுத்தப்பட்டயம் என்ன வென்றால் வாரக்க நாட்டுக்குச் சேந்த கோதவாடி கிராமமு எறுவாடி பட்டணத்தில் உவு

6. பெத்தா விரமகுலத்தார் அனைவோரும் கூடி சாதி ஞாயம் பேசும் போது ஸ்ரீமது இம்மடிப்பட்டம் கோப்பண்ணமன்றாடியா் அவர்கள் கிராமத்துக்கு வந்தவ

7. யனே வந்திருந்தபடியினால் சாதியார் அனைவொரும் கூடி இந்தபடிக்கு நீங்கள் அம்மன் சன்னதியில் சாதி கூட்டத்துக்குள்ளே ஞாயவிரோதமாய் வந்திருந்தபடியினாலே அம்மனுக்கு அவு செகமும் சாதிக்கு விருந்து

8. ம் செய்விக்கவேனு மென்று சொன்னதற்க்கு அவர் அம்மனயும் சாதியையும் பார்த்து உதாசனமான வசனமாய் சொல்லியும் பின்னும் சில தொந்திர சொல்லியும் பின்னும் சில தொந்திரவுகள் செய்கிறதாய் எத்தினப்படுமிட

9. த்தில் இனிமேல் இந்த நாட்டில் இருக்ககூடாதென்று அம்மன் உத்திரவு நடப்பிவிச்சு நீங்கள் நம்ம வமுசத்திற்க்கு உடந்தை

பட்ட வமுசமான படியினாலே பந்த அபத்துக்காக எங்களிடத்தில் வந்து சொல்லி கொண்டதுக்கு.

10. நாங்கள் பரயக்கப்பட்டு உங்களையும் அம்மனையும் திரும்பிக்கொண்டு வந்ததைக் குறித்து நீங்கள் முன் சொன்ன பணம் எங்களுக்கு கொடுக்க வேண்டியதில் நீங்கள் எந்தயிடத்திற்கு போகமனதிருக்கோ

11. அந்தயிடத்துக்கு சாமியை எடுத்துக் கொண்டு போங்களென்று சொல்ல அப்ப அம்மனை எடுக்கும் போது அம்மன் அந்தயிடம் விட்டு இளகாமலிருந்த படியினாலே பாதியார் அனைவொருங் கூடி அம்மன் இந்த விடம் வி

12. ட்டு இளகாமலிருக்க வேண்டியதென்ன வென்று அம்மனை உத்தரவு கேள்க்கும் போது அம்மன் உத்திரவானது ஆச்சிட்பட்டி கடடெமனவாகவும் நான் இவ்விடத்திலே தானே நில நாட்டாய இருக்க வேணு

13. மென்று அம்மன் உத்தரவான படியினாலே நாங்கள் அம்மன் உத்தரவுக்கு விரோதமாய் இன்னொரு யிடதுக்கு போககூடா ஆகையால் அம்மனை இவ்விடத்திலே தாலே நீங்கள் அம்மனையும் நில நாட்டு

14. செய்துவைத்து எங்களையும் சவரட்சனை செய்து கொள்ள வேணுமென்று கேட்டதைக் குறித்து அந்தப்படிக்கு அம்மனையும் அவர்களையும் வைத்து சவரட்சனை செய்து வருகிறபடியினாலே

15. நீங்கள் எங்களைக் குறித்து இவ்விளவு பிரவத்தனப்பட்ட படினாலேவும் நீங்கள் இந்த சீர்மைக்கு அதிபதியானபடி யினாலேயும் இந்த தெவ எங்கவமுததிற்க்கு உடந்தப்பட்ட படியினா

16. லயும் தாராபுரம் செமனரும் சாதி அனைவரும் கூடி உங்களுக்கு கொடுக்கப்பட்ட செமான் ஸ்தானம் என்ன வென்றால் தேவாக்கு கேட்டு அம்மனையும் எடுத்துக்கொண்டு நல்லூர்க்காநாடு

17. முத்தூருக்கு போகலாமென்று சாதி அனைவொரும் கூடி வரும் போது மேல்படி கோப்பணமன்றாடியாரசன் சேகரத்துடனே பின் துடர்ந்து வந்து எல்லைப்பள்ளத்துக்குத் தெற்கே ஆச்சி

18. பட்டிக்கும் வடக்கே தடுத்து ரெகளை செய்து அம்மனைப்பிடிங்கிக் கொண்டு போவுதாய் எத்தனைப்பட்டது தெரிந்து சில செட்டுக் காஷர் ஆச்சிபட்டிக்கு அரமனையாரிடத்துக்கு வந்து முன் நடந்த

19. சங்கதிகளை எல்லாம் சொல்லி இப்ப இந்த வேளையில் எங்க மானத்தையும் பிராணத்தையும் கார்த்து அம்மனையும் திப்புவித்து

கொண்டு வந்தால் உங்களுக்கு இரனூறு பொன் வீரராயன் பாத

20. காணிக்கையாய் வைத்து குடுக்குறொமென்று சொன்னபடியினாலே அரமனையாரும் சன சேகரத்துடனே அவ்விடம் போய் மேல்ப்படி கோப்பணமன்றாடி யாரைக் கண்டு நம்ம எல்லைக்குள்

21. ளே வந்திருக்கப்பட்ட சனங்களையும் அம்மனையும் ராசி செய்து அளய்த்துக் கொண்டு போகவேணு மெக விரரகனை செய்யகூடாதென்று சொன்னதற்குக் நம்முடைய எல்லையிலிருந்து எடுத்து

22. க் கொண்டு ஓடிவந்த படியினாலே நாங்கள் பின்துடர்ந்து வந்து இவிடத்தில் குறுக்காட்டி என திருமத்து சுவாமியை நான் கொண்டு போறஎன்று சுவாமியை நிராகரித்தப்படியினாலே இருபெரபா

23. டடுமைக்கா எரில் கூடி முதமையாயிருந்து கொண்டு நம்மவர்களான சாதியில் நடவாத நாலு குள்ளத்திற்கு தீர்வை முதலானாதற்க்கும் கூடியிருந்து அரமனைக்குள்ளமும் பாகு

24. பட சணமும் உஸ்னுக்கு முன்பும் சாதிகுள்ளம் பின்புமாய் இந்தப்படிக்கு எசமான் ஸ்தானமாய் உங்க காவலிக்க நாட்டுக்குச் சேந்த ஆச்சிப்பட்டி கிறாமமும் ஆவ

25. லப்ப நாயக்கர் சீர்மை தேவனாயக்கர் சீர்மை நாகய்யநாயக்க சீர்மை போடி னாயக்கர் எத்தலப்பனாயக்கர் சீர்மை எள்ளம்மனாயக்கர் சீர்மை சம்பைய்யனா

26. யக்கர் சீர்மை வாண்றாயக்கவுண்டர் புலியாண்டகவுண்டர் ஆன மலை சீர்மை ஊத்துக்குளி பெரும்படைப்ப சீர்மை வெங்கலநாடு கொல்லங்கோட்டு

27. சீர்மை கொங்கு மலயான பரியந்திரம் சாதி வழக்கப்படி அடக்கி நடத்திக் கொள்ளவும் வளக்கப்படிக்கு யாதாமொருவர் நடவாதே போனால் அவனிடத்தில் அரமனைக்கு

28. இருபத்திநாலு பொன்னும் சாதிக்கு இருபத்தி நாலு பொன்னும் பாங்க அவனை சாதியில் சேர்த்தி அடக்கி நடத்திக் கொள்ளவும் இந்தபன்னிரண்டு கிராமத்திலுள்ள

29. சாதியார் ஆச்சிபட்டி அம்மன் கோவிலில் தீர்வை தீர்த்துக் கொள்ளவும் இதுக்கு சாட்சி சுவுண்டே சுவரி இருமனங்க சுவாமி கல்யாண வெங்கிடாசலபதி முத்துவைய்யண

30. கவுண்டன் பொங்குலுக்கி நாடு சொரி செட்டி மகன் தாசுசெட்டி மெக்க நாடு முத்துகிருஷ்ணசெட்டி ஆளனாடு கோயமுத்தூருக்கு கிருஷ்ணறாயபேட்டை கட்ட மனை கந்தன் செ

31. ட்டியார் இதற்க்கு யாதாமொருவன் விகாதம் செய்தால் அசுவத்தி சிசுவத்தி ஸ்ரீயத்தி கோவத்தி வீரமத்தி இந்த பஞ்ச பாதகமடைந்து காசியில கெங்ககரையிலே காராம்பசுவை

32. வ கொன்ற தேசத்திலே போக கடவது சாதனப்படிக்கு பயந்து நடந்தவனுக்கு ஆயிர ஆரோக்கியமும் புத்திர சந்தானமும் அஷ்ட அய்சுவமயமும் உண்டா யிருப்பான்

33. இந்தப்படிக்கு கல்லும் காவேரிபுல்லும் பூமி சந்திராதித்தருள்ளவர்க்கும் தேவாங்கு வம்ச முள்ளவர்க்கும் கொருவை முசமுள்ளவாக்கும் இதற்க்கொரு குறை

34. வில்லாமல் நடப்பி விச்சு கொள்ளுகிறது இந்தப்படிக்கு தாராபுரத்து எசமானர் நாலுபேரும் பத்தாயிரம் குல சாதிவார் அனைவரும் கூடி ஆச்சு

35. பட்டியில் அம்மன் முன்னிலைக்கு தமுதிவைத்துக் கொடுத்தபட்டயம் சவுண்டெசுவரி இருமலிங்க சுவாமி துணை.

# 40

# வைகை ஆற்றுப் பள்ளத்தாக்கில் தொல்லியல்

**பா.பாலமுருகன்,** புதுச்சேரி.

அண்மையில் வைகை ஆற்றுப்பள்ளத்தாக்குப் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் வரலாற்றுக்கு முற்பட்ட கால பண்பாட்டுத் தடயங்கள் பல கண்டறியப்பட்டுள்ளன. அவற்றில் சில முக்கிய ஊர்கள் மட்டும் இங்கே தரபட்டுள்ளன. பிற பட்டியல் இடப்பட்டுள்ளன.

**அருகவேலி** (77° 37' 36"E - 9° 50' 02"N)

இவ்வூர் மயிலாடும்பாறை எழுமலை சாலையில் மயிலாடும் பாறையில் இருந்து சுமார் 7 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இரும்புக்காலம் மற்றும் வரலாற்றுத் தொடக்க காலத்தைச் சார்ந்த பாறை ஓவியங்கள் இவ்வூரின் கிழக்கே 3 கி.மீ. தொலைவில் சித்திரக்கல் பொடவு என்று உள்ளூர் மக்களால் அழைக்கப்படும் குகையின் மேற்கூரையில் பாறை ஓவியம் இரண்டு இடங்களில் காணப்படுகின்றன. வெள்ளை நிறத்தில் வரையப்பட்டுள்ள இவ்வோவியம் மனிதர்கள் மற்றும் விலங்குகளின் உருவம் காணப்படுகின்றன. மனித உருவத்தைச் சுற்றிலும் மான்கள், மாடுகள் மற்றும் கோழிகளின் உருவங்கள் உள்ளன. அவற்றில் சில வெள்ளை நிறத்தால் நிரப்பபட்டும் மற்றும் சில கோட்டு உருவங்களாகவும் காணப்படுகின்றன. இக்குகையின் மற்றொரு இடத்தில் காணப்படும் ஓவியம் மனிதர்கள் வேட்டையாடிய பிறகு தங்களது வெற்றியைப் பகிர்ந்து கொள்ளும் விதமாக அமைந்துள்ளன. இதில் மனிதர்கள் விலங்கின் மேல் அமர்ந்துகொண்டு இருப்பது போலவும், தரையில் நிற்பது போலவும், மாடு, மான், எறும்பு திண்ணி போன்ற உருவங்களும் வரையப்பட்டுள்ளன. இவ்வோவியங்கள் காணப்படும் மலை அடிவாரப் பகுதியில் இரும்புக் காலத்தைச் சார்ந்த கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள் மற்றும் முதுமக்கள் தாழிகள் சிதறிக்கிடக்கின்றன. இவை உள்ளூர் மக்களால் வேட்டைக்காரன் பாறை என்று கூறப்படுகிறது.

**மயிலாடும்பாறை** (77° 30' 49"E - 9° 45' 51"N)

இது தேனிவருசநாடு செல்லும் சாலையில் சுமார் 30 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. வரலாற்றுக்கு முற்பட்ட காலப்

பாறை ஓவியங்கள் இவ்வூரின் வடகிழக்கே 4 கி.மீ தொலைவில் கரடி ஊத்துக்குச் செல்லும் வழியில் கண்டறியப்பட்டுள்ளது. ஓவியம் காணப்படும் குகை, குதிரைகட்டிப்பொடவு என்று உள்ளூர் மக்களால் அழைக்கப்படுகிறது. இக்குகையில் விலங்குகள் மற்றும் மனிதர்களின் உருவம் வரையப்பட்டுள்ளன. பெரும்பாலும் மான், மாடு போன்ற விலங்குளின் உருவம் அதிகமாகக் காணப்படுகிறது. இங்கு காணப்படும் வெள்ளைநிற ஓவியங்கள் சிவப்பு நிற ஓவியங்களுக்கு மேலே வரையப்பட்டுள்ளன. சிவப்பு நிற ஓவியங்கள் வெள்ளை நிற ஓவியங்களுக்கு முற்பட்ட காலத்தை சேர்ந்தவையாகும். தற்போது இப்பகுதியில் வசிக்கும் பளியர் என்னும் பழங்குடி இன மக்கள் இக்குகையில் இரவில் தங்கும்போது வெளிச்சத்திற்காக நெருப்பு ஏற்றுகின்றனர். இதனால் குகையில் உள்ள ஓவியங்கள் கறுப்பு படிந்த நிலையில் உள்ளன. கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள், கறுப்பு மற்றும் சிவப்பு ஓடுகள், முதுமக்கள் தாழிகள் போன்றவை இவ்வோவியம் காணப்படும் மலை அடிவாரப் பகுதியில் கிடைக்கின்றன.

**பின்னதேவன்பட்டி** (77° 31’ 56”E - 10° 01’ 37”N)

இவ்வூர் தேனியில் இருந்து சுமார் 7 கி.மீ கிழக்கே அமைந்துள்ளது. தேனி ஆண்டிப்பட்டிச் சாலையின் இடது புறம் 2 கி.மீ தொலைவில் வைகையாற்றின் இடதுகரையில் இரும்புக்காலத்தைச் சார்ந்த குத்துக்கல் (Menhir) கண்டறியப்பட்டுள்ளது. இது தற்போது உள்ளூர் மக்களால் பாண்டிமுனீஸ்வரன் கோவில் என்று பெயரிட்டு வழிபட்டு வருகின்றனர். இதன் உயரம் சுமார் 3.65 மீ, அகலம் 1.2[illegible] அடி, கனம் 0.35 மீ ஆகும். வைகையாற்றுப் பகுதியில் கிடைத்தவற்றில் இதைப் பெரியதாகக் கருதலாம்.

**சொக்கதேவன்பட்டி** (77° 31’ 58”E - 10° 02’ 27”N)

சொக்கதேவன்பட்டி தேனியில் இருந்து கிழக்கே சுமார் 10 கி.மீ தொலைவிலும் பின்னதேவன்பட்டியில் இருந்து வடக்கே 2 கி.மீ தொலைவிலும் உள்ளது. இரும்புக் காலகட்ட ஈமச்சின்னமான பலகைக்கல் வட்டத்துடன் கூடிய குத்துக்கல் இவ்வூரில் கண்டறியப்பட்டுள்ளது. குத்துக்கல்லின் உயரம் 2.40 மீ, அகலம் 90 மீ, கனம் 0.50 மீ ஆகும். இங்கு காணப்படும் கல் வட்டங்களின் சராசரி வட்ட அளவு 5.007.00 மீட்டர் ஆகும். இவற்றை உள்ளூர் மக்கள் வழிபட்டு வருகின்றனர். பொதுவாகக் குத்துக்கல்லை நாட்டுக்கல் என்றும் அழைக்கின்றனர்.

மேற்குறிப்பிட்ட இடங்களைத்தவிர பிற இடங்களிலும் தொல்லியல் சான்றுகள் கண்டறியப்பட்டுள்ளன. அவை கீழே பட்டியல் இடப்பட்டுள்ளன.

| இடம் | தீர்க்கரேகை | அட்சரேகை | பண்பாட்டு எச்சங்கள் |
|---|---|---|---|
| சிந்துவன்பட்டி | 77° 37' 33" | 10° 05' 42" | இரும்புக்கால ஈமச்சின்னங்களான கல் வட்டம், முதுமக்கள் தாழிகள் மற்றும் குத்துக்கல். |
| குள்ளபுரம் | 77° 38' 32" | 10° 04' 04" | இரும்புக்கால வாழ்விடப்பகுதி ஊரின்கிழக்கே காணப்படுகிறது. |
| எ.வாடிபட்டி | 77° 42' 00" | 10° 05' 46" | கல்வட்டங்கள் மற்றும் தாழிகள். |
| குல்லிசெட்டிபட்டி | 77° 49' 38" | 10° 06' 31" | முதுமக்கள் தாழிகள் |
| கீழக்கோயில்பட்டி | 77° 47' 02" | 10° 09' 00" | இரும்புக்கால ஊரிருக்கை பகுதி மற்றும் ஈமக்காடு. |
| இராமயக் கவுண்டன்பட்டி | 78° 05' 40" | 10° 08' 44" | கல்வட்டங்கள் காணப்படுகிறது. |
| சத்திரதொண்ட மான்பட்டி | 78° 09' 42" | 10° 03' 31" | கல்வட்டங்கள், முதுமக்கள் தாழிகள் காணப்படுகிறது |
| கொடிமங்கலம் | 78° 09' 16" | 10° 00' 27" | இரும்புக்கால ஊரிருக்கை பகுதி. |
| எடுக்கலைநத்தம் | 78° 10' 26" | 10° 01' 02" | கல்வட்டத்துடன் கூடிய கற்குவியல், முதுமக்கள் தாழிகள். |
| இராஜாக்கூர் | 78° 14' 01" | 09° 56' 03" | செம்பிரான் கல்லுடன் கூடிய கல்வட்டம், கற்குவியல் மற்றும் தாழிகள். |
| கருமந்தங்குடி | 78° 33' 51" | 09° 46' 47" | செம்பிரான் கல்லுடன் கல்வட்டம் மற்றும் தாழிகள். |





# 41

# கோட்டமங்கலம் பெருங்கற்காலச் சின்னங்கள்

**ச.இரவி,** கோவை

திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டை வட்டம் கோட்டமங்கலம் என்னும் ஊரில் பெருங்கற்காலக் கல்திட்டைகள் கண்டுபிடிக்கப்பட்டன. உடுமலையிலிருந்து பல்லடம் செல்லும் சாலையில் 9 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.இவ்வூரிலுள்ள உப்பாற்றங்கரையில் கல்திட்டைகளும் சின்ன குளம் பெரிய குளம் ஆகிய பகுதிகளின்தென்மேற்கில் இரும்புக்கசடுகளும் கறுப்பு சிவப்பு வளைகோட்டு வண்ணம் பூசப்பட்ட ஓடுகளும் பெருமளவில் கிடைக்கின்றன. இப்பண்பாட்டு மேடு ஏறக்குறைய 50 ஏக்கர் பரப்பளவில் உள்ளது. இவ்வூரின் மேற்கே கருவண்ணராயர் மற்றும் வீர சுந்தரிகோயில் பின்புறம் இரண்டு கல்திட்டைகள் காணப்படுகின்றன.மூடுகற்களைக் கொண்டுள்ள இக்கல்திட்டைகளில் ஒன்றில் இரண்டு இடுதுளைகள் உள்ளன. இவை மேற்கு மற்றும் தெற்கு கற்பலகைகளில் காணப்படுகின்றன. பொதுவாக இடுதுளைகள் கிழக்குப் பலகைக்கல்லில் காணப்படும். இரண்டாவது கல்திட்டையிலும் இரண்டு இடுதுளைகள் உள்ளன. ஒன்று தென்பகுதியிலும் பிறிதொன்று மூடுகல்லிலும் உள்ளது. இடுதுளைகள் ஒவ்வொன்றும் 45 செ.மீ. குறுக்களவு உடையதாக உள்ளது.



# 42

# ஆர்ப்பாக்கம் அகழாய்வு

ப.தே.பாலாஜி, சென்னை

காஞ்சிபுரம் மாவட்டம், வட்டத்தில் உள்ள ஆர்ப்பாக்கம் (79 45'.43" A.12. 44'12"ö)ஊரில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறை அகழாய்வு மேற்கொண்டது. இவ்வூர் காஞ்சிபுரத்திற்கு வடக்கில் 13 கி.மீ தொலைவில் காஞ்சிபுரம்உத்தரமேரூர் மாநில நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்கில் தைலயிப்பெரும்பாக்கம், பெரும்பாக்கம் கீழ்ப்பெரும்பாக்கம், நெல்வேலி ஆகிய ஊர்களும் கிழக்கில் கீழ்புத்தூர், காவந்தாண்டலம் ஆகிய ஊர்களும் தெற்கில் மாகரல் என்ற ஊரும் மேற்கில் திருவண்ணாமலை என்ற ஊரும் உள்ளன. இவ்வூர்பாலாறு மற்றும் சேயாற்றின் நடுவில் அமைந்துள்ளது.

ஆர்ப்பாக்கம் ஊரில் சமன பௌத்தச் சிற்பங்களும் திருவாலிஸ்வரர் மற்றும் ஆதிகேசவப்பெருமாள் கோயில் ஆகிய கோயில்களும் உள்ளன. வரலாற்றுப் புகழ்பெற்ற இவ்வூரில் 2011,2012,2013 ஆகிய மூன்று காலகட்டங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. முதல் ஆண்டில் ஸ்ரீ வாலிஸ்வரர் கோயில் அருகில் அகழாய்வுக் குழி இடப்பட்ட்து. இதில் கருப்பு சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு பானை ஓடுகளும் சுடுமன் உருவங்கள் விளக்குகள் அருமணிகள் போன்றவையும் கிடைத்தன. 2012 ஆம் ஆண்டு இரண்டு அகழாய்வுக் குழிகள் இடப்பட்டன. இக்குழிகளில் இடைக்கால பிற்கால தடையங்களே கிடைத்தன. கட்டிடத்தின் சிதைவுகளும் மூன்றாவது குழியில் கண்டுபிடிக்கப்பட்டது. செங்கற்கள் 23 X 23 X 44, 21 X 14 X 7 செ.மீ. நீள அகலம் ஆகிய இரு அளவுகள் கொண்டவையாக உள்ளன. இரண்டாவது குழி 4 மண்ணடுக்குகளும் மூன்றாவது குழி 6 மண்ணடுக்குகளும் கொண்டவையாகும்.4 ஆவது ஆய்வுக்குழி 4 மண்ணடுக்குகளை உடையது. இக்குழியில் கருப்பு சிவப்பு, சிவப்பு, கருப்பு வகை மட்கல ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றுடன் மணிகள், செப்புப்பொருள்கள், சுடுமண் உருவங்கள் உடைந்த மண்விளக்குகள், மண்தகளி போன்றவை கிடைத்தன. 2013 ஆம் ஆண்டு நட்த்தப்பட்ட அகழாய்வில் 56,7 எண்ணிடப்பட்ட குழிகள் அகழாய்வுக்கு உட்படுத்தப்பட்டன. இக்குழிகள் ஆதிகேசவப்பெருமாள் மற்றும் சமன தீர்த்தங்கரரின் கோயிலுக்கு

அருகில் இடப்பட்டன. இக்குழிகளில் 4 மண்ணடுக்குகள் முறையே காணப்பட்டன. இவற்றிலும் கருப்பு சிவப்பு, சிவப்பு மற்றும் கருப்பு நிற மட்கல ஓடுகள் கிடைத்தன. கட்டிடத்தின் சிதைவுகள் இங்கும் கிடைத்தன. கனேசரின் உருவம் ஒன்றும் முத்திரைகள் சிலவும் இங்கு கிடைத்தன. ஆர்ப்பாக்கம் அகழாய்வின் மூலம் இங்கு மூன்று கால கட்டங்களில் மக்கள் தொடர்ந்து வாழந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. முதல் பண்பாட்டுக்காலம் பொ.ஆ. முன் 4 ஆம் நூற்றாண்டிலிருந்து பொ.ஆ. 5 ஆம் நூற்றாண்டு வரையும் இரண்டாவது பண்பாட்டுக் காலம் தொடர்ந்து 5 ஆம் நூற்றாண்டிலிருந்து 13 ஆம் நூற்றாண்டு வரையும் மூன்றாவது பண்பாட்டுக்காலம் 13 ஆம் நூற்றாண்டிலிருந்து நவின காலம் வரையும் இருந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

# 43

# கெடிலம் ஆற்றுத் தொல்லியல் இடங்கள்-1

**கோ.மதிவாணன்**, தஞ்சாவூர்

கடலூர்விழுப்புரம் மாவட்டங்களிலுள்ள கெடிலம் ஆற்றின் கீழ்கண்ட ஊர்களில் கள ஆய்வில் தொல்லியல் பண்பாட்டுக் கூறுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை பெரும்பாலும் இரும்புக்காலப் பண்பாட்டுக் காலத்தைச் சார்ந்தவை.

| வ.எண் | ஊர் | கிடைக்கும் இடம் | வட்டம் | கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் எச்சங்கள் |
|---|---|---|---|---|
| 1. | வில்லிவலம் | ஊரின் கிழக்கிலுள்ள ஓடைப்பகுதி | திருக்கோயிலூர் | ஈமத்தாழிகள், கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள் தட்டுகள் குடுவைகள் |
| 2. | பழங்கூர் | ஊரின் கிழக்கில் 2 கி.மீ தொலைவிலுள்ள அய்யனார் கோவில் பகுதிஆகாச மேடு | திருக்கோயிலூர் | இரும்புக்கால வாழ்விடப்பகுதி |
| 3. | அயன்வேலூர் | வடகிழக்கிலுள்ள நரிமேடு; விழுப்புரம் உளுந்தூர்பேட்டை சாலை | விழுப்புரம் | ஈமத்தாழிகள், மட்கல ஓடுகள் |
| 4. | பாளையம் | கெடில ஆற்றின் வடபகுதி | உளுந்தூர்பேட்டை | இரும்புக்கால பாணை ஓடுகள், அழிந்த ஈமக்காடு |
| 6. | மாளிகம்பட்டு | கெடில ஆற்றின் தென்பகுதி | பண்ருட்டி | நுண்ணியகற்காலக் கருவிகள், ஈமத்தாழிகள், இரும்பு வாளின் கைப்பிடி |
| 7. | பனப்பாக்கம் | ஊரின் வடக்குப்பகுதி | பண்ருட்டி | கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள், தட்டுகள், குடுவைகள், எலும்ப்புகளுடன் கூடிய ஈமத்தாழிகள் |
| 8. | மலட்டாறு | தென்பெண்ணையாற்றின் கிளை ஆறு | பண்ருட்டி | புதைபடிவங்கள் |
| 9. | கருக்கை | கெடில ஆற்றின் தென்கரை ஊரின் மேற்குப்பகுதி | பண்ருட்டி | நுண்கற்காலக்கருவிகள், மூலக்கற்கள் |

# 44

# கெடிலம் ஆற்றுத் தொல்லியல் இடங்கள்-2

**கி.தேவிஸ்ரீ,** தஞ்சாவூர்

கெடில ஆற்றுப் பகுதியில் கீழ்கண்ட இடங்களில் கள ஆய்வுகள் செய்த பொழுது புதிய தொல்லியல் இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.இரும்புக்கால பண்பாடு முதல் இடைக்காலப் பண்பாட்டுக்கூறுகள் இப்பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்டன. அவை

| வ.எண் | ஊர் | காலம் | கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் எச்சங்கள் |
|---|---|---|---|
| 1. | கோண்டூர் (11 45' 44"வ 79 44 02.4" கி) | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு சிவப்பு ஓடுகள் |
| 2. | நத்தம் (11 45'21"வ79 19'07") | இரும்புக்காலம் | வாழ்விடம்.கருப்பு மற்றும் சிவப்பு மட்கல ஓடுகள் |
| 3. | பி.என்.பாளையம் (11 46'31" வ 79 38'25"கி | இடைக்காலம் | வாழ்விடம்.சிவப்பு, கருப்பு மட்கல ஓடுகள் |
| 4. | முத்துகிருஷ்ணபுரம் (11 45'56"வ 79 36'26" கி | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள் |
| 5. | ஆண்டிப்பாளையம் (11 47'05"79 36'50" கி | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு,சிவப்பு மட்கல ஓடுகள் |
| 6. | மேல்கவரப்பட்டு (11 47'27"வ 79 35'25"கி | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு,சிவப்பு மட்கல ஓடுகள் |
| 7. | திருவதிகை(11 45'55" வ 79 34'36" கி | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள் |
| 8. | செம்மங்கோட்டை, 11 46'36" வ 79 29' 46" | இடைக்காலம் | வாழ்விடம்.கருப்பு,சிவப்பு மட்கல ஓடுகள் |
| 9. | காமாட்சிப்பேட்டை சமத்துவபுரம் 11 45'24" 79 27'59" கி | இடைக்காலம் | வாழ்விடம். கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள் |
| 10. | மேற்கு இராமபுரம் | இடைக்காலம் | வாழ்விடம்.குடுவை மூடி கருப்பு, சிவப்பு மட்கல ஓடுகள் |

# 45

# சிறுமலை, குலசேகரன் கோட்டைத் தொல்லியல்

**இரா.சந்தனம், தஞ்சாவூர்**

மதுரை மாவட்டம், தா.வாடிப்பட்டி அருகிலுள்ள சிறுமலையின் தெற்கு அடிவாரப்பகுதியில் உள்ள சாணாம்பட்டி, விராலிப்பட்டி, செம்புக்குடிபட்டி, கொண்டயம்பட்டி, அ.கோவில்பட்டி ஆகிய ஊர்களில் நுண்கற்காலத்தைச் சார்ந்த கற்கருவிகளான செதில்கள் அவற்றின் மூலக்கற்கள் பரவலாகக் காணப்படுகின்றது. சாணாம்பட்டியின் ஓடைக்கரையில் 5 ஏக்கர் அளவில் நுண்கற்காலத் தடையங்கள் உள்ளன. மேலும் இதே மாவட்டத்தில் மதுரை திண்டுக்கல் தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ள குலசேகரன் கோட்டை (10 05'51.44' வ 77 57'30.66'கி) சிறுமலையின் அடிவாரத்தில் பல தொல்லியல் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வூரின் வடக்கே நுண்கற்காலத்தைச் சார்ந்த முனைக்கருவிகள், வெட்டுக்கத்தி, செதில்கள் போன்றவையும் அவற்றின் மூலக்கற்களும் கிடைக்கின்றன. இவ்வூர் நுண்கற்காலக்கருவிகள் செய்கின்ற தொழிற்கூடமாக விளங்கியிருத்தல் வேண்டும். இக்கருவிகள் கிடைக்கின்ற இதே பகுதியில் இரும்புக்காலத்தைச் சார்ந்த பாணை ஓடுகளும் தாழிகளின் உடைந்த பகுதிகளும் கிடைக்கின்றன.இவ்வூரின் தெற்கில் அமைந்துள்ள கண்மாய்ப் பகுதியில் கல்வட்டம் ஒன்று தற்பொழுதும் காணப்படுகிறது. குலசேகரன் கோட்டையில் இடைக்காலத்தைச் சார்ந்த பாணைகளின் ஓடுகள் பெருமளவில் கிடைத்துள்ளன.

பாண்டியர் காலத்தைச் சார்ந்த மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் ஒன்றும் இவ்வூரில் உள்ளது. கிழக்கு நோக்கிய கருவறை, அர்த்த மண்டபத்துடன் அம்மன் சன்னதி தெற்குப்பார்த்த நிலையில் அமைந்துள்ளது. இக்கோயிலில் நாயக்கர் கால முக்குறுணிபிள்ளையார் சிற்பம் ஒன்றும் காணப்படுகிறது. இவ்வூரில் கோட்டை ஒன்று இருந்தமைக்கான தடையங்களும் காணப்படுகின்றன. இவ்வூரினை ஒட்டிச் செல்லும் ஓடை அருகில் இக்கோட்டையிருந்தமைக்கான செங்கற்பகுதிகளும் செம்மன் சுவர்களும் காணப்படுகின்றன. செங்கல் 24 செ.மீ நீளமும் 18 செ.மீ. அகலமும் உடையது.

இவ்வூரில் தனியாக காளியம்மன் கோயில் அருகில் ஆடவர் சிற்பம் ஒன்று சிதைந்த நிலையில் உள்ளது பல

சிதைந்த சிற்பங்களுக்கு இடையில் பாண்டியர் கால அமர்ந்த நிலைஅய்யனார் சிற்பம் ஒன்றும் காணப்படுகிறது. இவ்வூருக்கு வடக்கில் புறமரத்துக்காடு என்ற பகுதியில் நின்ற நிலையில் ஆண் பெண் உள்ள புடைப்புச் சிற்பச் சதிகற்கள் 5 காணப்படுகின்றது. இவை நாயக்கர்கால அமைப்பினை உடையவை. மேலும் இங்குள்ள வயலில் பிற்காலத்தைச் சார்ந்த ஆண் மற்றும் பெண் சிற்பம் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றது. மேற்கூறியவற்றிலிருந்து குலசேகரன் கோட்டை நுண்கற்காலத் தடையங்களையும் இரும்புக்கால இடைக்கால பிற்கால வரலாற்று எச்சங்களையும் கொண்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.பாண்டிய மன்னன் குலசேகரன் பெயரில் இவ்வூர் அமைந்துள்ளதும் நோக்கத்தக்கது.



# 46

# அறந்தாங்கி வட்டாரத் தொல்லியல்

வெ.யோகேஸ்வரன், சரளைப்பள்ளம்

புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கிப்பகுதியில் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் கீழ்கண்ட ஊர்களில் புதியதாகக் கண்டறியப்பட்டன. அறந்தாங்கி புதுவயல் செல்லும் சாலையில் 8 கி.மீ. தொலைவில் வெள்ளாற்றின் கரையில்அமைந்துள்ள வீரமங்கலம் என்னும் ஊரில் ஆற்றங்கரைப் பகுதிகளிலும் அதன் அருகில் உள்ள தென்னந்தோப்பிலும் இரும்புக்காலத்தைச் சார்ந்த மட்கல ஓடுகள் கிடைக்கின்றன. இங்கு சுடுமண்ணலான உரைகிணற்றின் பகுதியும் உள்ளது. இப்பகுதியை ஆத்து மேடு என வழங்குகின்றனர். அறந்தாங்கி பேராவூரணிச் சாலையில் 4 கி.மீ. தொலைவில் வெள்ளாற்றின் வடகரையில் அமைந்துள்ள ஊர் ரெத்தினக்கோட்டை . இவ்வூரில் கோட்டை ஒன்று இருந்ததற்கான செங்கற் சிதைவுகள் காணப்படுவதுடன் இரும்புக்கால ஈமத்தாழிகளும் உள்ளன. இப்பகுதியை ‘வாரி’ என மக்கள் வழங்குகின்றனர்.



# 47

# தேனி மாவட்டத் தொல்லியல் தடையங்கள்

**பா.ஜோதிஸ்வரன், சென்னை**

தேனி மாவட்டத்தில் போடி நாயக்கனூர் வட்டத்தில் போடி நாயக்கனூருக்குத் தெற்கில்அமைந்துள்ள பாலாறுபட்டி என்ற ஊரில் தொல்லியல் தடையங்கள் புதியதாகக் கள ஆய்வில் கண்டுபிடிக்கப்பட்டது. பாலாறுபட்டி தேனிகுச்சனூர் சாலையில் 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்கில் முல்லைப்பெரியாற்றின் கிளையாறு ஒன்றும் செல்கிறது. இவ்வூரின் வடமேற்கே அமைந்துள்ள மல்லிங்கர்சாமி மலையில் இயற்கையான அமைந்த குகையின் பாறைப்பகுதிகளில் வெண்மை நிறத்தால் தீட்டப்பட்ட வரலாற்றிற்கு முற்பட்ட கால ஓவியங்கள் காணப்படுகின்றன. இவை மனித உருவங்கள் ஆகும். நின்ற நிலையில் உள்ள மனித உருவங்களில் முதலிரு உருவங்கள் வலப்பக்கம் பார்த்த நிலையில் கைகளில் வாலும் கேடயமும் வைத்திருப்பது போன்றும் இதன் அருகில் உள்ள மேலும் இரண்டு மனித உருவங்கள் தங்களின் கைகளை ஒருவருடன் ஒருவர் பிடித்தவாறும் இடப்பக்கம் பார்த்தவாறும் உள்ளன. இவ்வோவியத் தொகுதிக்கு கீழே விலங்கு ஒன்றின் மீது அமர்ந்த நிலையில் மனிதன் ஒருவன் தீட்டப்பட்டுள்ளான். இவை போருக்கான நிகழ்ச்சியாக இருக்கலாம். விலங்கின் மீது அமர்ந்த நிலையில் இருப்பவர் இக்கூட்டத்தின் தலைவனாக இருக்கலாம். இக்குகையின் அருகாமையில் வெளிப் பகுதிகளில் பழங்கற்காலக் கருவிகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவை இடைப்பழங்கற்காலத்தைச்சார்ந்த கைக்கோடரிகளாக விளங்குகின்றன. எனவே இக்குகைப்பகுதியில் பழங்கற்கால மனிதன் இருந்திருக்க வேண்டும். வெள்ளை நிற இவ்வோவியங்கள் இரும்புக்காலம் அல்லது புதிய கற்காலக் கட்டத்தில் வாழ்ந்த மக்களால் தீட்டப்பட்டிருத்தல் வேண்டும்.

# 48

# வாடிப்பட்டி வட்டாரத் தொல்லியல்

இரா.கோவிந்தராஜ், மதுரை

மதுரை மாவட்டம், வாடிப்பட்டி வட்டத்தில் கீழ்க்கண்ட இடங்களில் கள ஆய்வில் தொல்லியல் எச்சங்கள் கண்டு பிடிக்கப்பட்டன.

| வ. எண் | ஊர் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | கணவாய் தாகா | இரும்புக்காலம் | கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள் (4 ஏக்கரில்) |
| 2. | மேலக்கால் | இரும்புக்காலம் | வாழ்விடம் இரும்புக் கசடுகள், உடைந்த நிலையில் முதுமக்கள் தாழிகள் மற்றும் கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள். (6 ஏக்கரில்) |
| 3. | மேலக்கால் கால்வாய் | இரும்புக்காலம் | தாழிகள். உடைந்தவை. சுடுமண் உருவம்.. |
| 4. | நாராயணபுரம் | இரும்புக்காலம் | தாழிகள் கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள், இரும்புக் கழிவுகள். (4 ஏக்கர்) |
| 5. | மன்னாடிமங்கலம் | இரும்புக்காலம்; | கருப்பு சிவப்பு பானை ஓடுகள், |
| 6. | தேனூர்கண்மாய் | இரும்புக்காலம்; | கருப்பு சிவப்பு கிண்ணங்கள் தட்டுகள் முது மக்கள் தாழி. (6 ஏக்கர்) |
| 7. | குலசேகரன்கோட்டை | இரும்புக்காலம் | கற்பதுக்கை கல்வட்டங்கள் மற்றும் பெருங்கற்கால கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள் |
| 8. | கச்சகட்டி | இரும்புக்காலம் | வாழ்விடம்,தாழிகள், கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள், இரும்புக் கசடுகள், தட்டுகள், கிண்ணங்கள் (4 ஏக்கர்) |
| 9. | தெத்தூர் | இரும்புக்காலம் மற்றும் வரலாற்றுக்காலம் | கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள் மற்றும் வரலாற்றுக்கால வாழ்விடம். |
| 10. | கோம்பைக்காடு | நுண்கற்காலம் | நுண்கற்கால செதில்கருவிகள் |
| 11. | சத்திரவெள்ளாளபட்டி | இரும்புக்காலம் | இரும்புக் கசடுகள் கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள் |

# 49

# பாலக்கோடு வட்டாரத் தொல்லியல்

**தகடூர் ரமேஷ்**

தருமபுரி மாவட்டம் பாலக்கோடு வட்டத்தில் கீழ்கண்ட இடங்களில் தொல்லியல் எச்சங்கள் புதியதாகக் கண்டுபிடிக்கப் பட்டன. அவை பின்வருமாறு:

**காகத ஹள்ளி:** பாலக்கோடு போகர அள்ளி சாலையில் 6 கி.மீ. தொலைவில் ஊரின் கிழக்கே ஊஞ்சல் கம்பம் பகுதியில் கல்வட்டங்கள் காணப்படுகிறது. குத்துக்கல் ஒன்றும் இங்கு உள்ளது.

**வெப்பாளம்பாடி:** பாலக்கோடு போளார ஹள்ளி சாலையில் 3 கி.மீ தொலைவில் வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதி 5 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது. இங்கு கறுப்பு சிவப்பு பாணை ஓடுகள் கீறல் குறியீட்டுடன் கிடைக்கின்றன. இரும்புக் கசடுகளும் கிடைக்கின்றன.

**பூர்கல்லான் கொட்டாய்:** பாலக்கோடு பேளார அள்ளி சாலையில் 3 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இங்கு ஆலமரத்திற்குப் பின்பகுதியில் கல்திட்டை ஒன்று காணப்படுகிறது. குந்தபள்ளி என்ற இடத்தில் நடுகல் ஒன்றும் காணப்படுகிறது. இதனை வேட்டைக்கார சாமி என குறிப்பிடுகின்றனர்.

**பேளார அள்ளி:** பாலக்கோட்டிலிருந்து 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இவ்வூரில் நடுகல் ஒன்று பெரிய அளவில் காணப்படுகிறது. இந்நடுகல்லில் வீரன் ஒருவன் பன்றியைக்கொல்லும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது.

**கார்த்தாரப்பட்டி:** கர்த்தாரப்பட்டியிலிருந்து சோமன ஹள்ளி செல்லும் சாலையில் நடுகல் ஒன்று காணப்படுகிறது. தியான நிலையில் மூன்று பெண்கள் தலைக்கு மேல் இடது புறமாகக் காட்டப்பட்டுள்ளனர்.

## 50

# வல்லம் அகழாய்வு 2013

**வீ.செல்வகுமார்**, தஞ்சாவூர்

தஞ்சாவூர்திருச்சிராப்பள்ளி தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ள வல்லத்தில் வஜ்ஜிரேஸ்வரர் கோவிலுக்கு முன்பு உள்ள பகுதியில் 2013 செப்டம்பர் மாதம் நடத்தப்பெற்ற அகழாய்வில் பல தொல்லியல் சான்றுகள் வெளிப்பட்டுள்ளன. இங்கு பேராசிரியர் எ.சுப்பராயலு 198384ல் செய்த அகழாய்வில் இரும்புக்காலவரலாற்றுக் காலச் சான்றுகளைக் கண்டுபிடித்துள்ளார். அண்மையில் நடைபெற்ற அகழாய்வுகளின் வழியாக நுண்கற்காலச் சான்றுகள் வெளிப்பட்டுள்ளன.

பிள்ளையார்பட்டி கிராம எல்லையைச் சேர்ந்த தமிழ்ப் பல்கலைக்கழக வளாகத்தில் 2009 முதல் 2011 வரை மேற்கொள்ளப்பெற்ற அகழாய்வின் தொடர்ச்சியாக இந்திய வரலாற்றாய்வுக் கழகத்தின் நல்கையுடன் தற்போது அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. கோயிலுக்கு முன்புள்ள பகுதியில் மூன்று அகழாய்வுக் குழிகள் இடப்பெற்றன.

இந்த அகழாய்வில் முதன்மை நிலையில் உள்ள சில மண்ணடுக்குகள் கிடைத்தன. இப்பகுதியில் உள்ள மண்ணடுக்குகள் பிற்கால மக்களின் செயல்பாடுகளால் மிகவும் சேதமடைந்த நிலையில் காணப்பட்டன. ஆரம்ப காலத்தில் இக்கோயிலுக்கு முன்பு ஒரு பெரிய குளம் அல்லது கினறு இருந்துள்ளது. தற்போது கோயிலுக்கருகே உள்ள வஜ்ஜிரதீர்த்தம் பிற்காலத்தில் தோண்டப்பெற்று அங்குள்ள மண், அதற்கு முன்பு கோயிலுக்கு முன் இருந்த கிணற்றில் நிரப்பப்பட்டுள்ளது. இதன் விளைவாக இங்கு பல பண்பாடுகளைச் சேர்ந்த தொல்பொருள்கள் கலந்த நிலையில் காணப்படுகின்றன.

அடியில் கிடைத்த மண்ணடுக்குகளில் குவார்ட்ஸ் கல்லால் ஆன நுண்கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன. இவை இங்கு பிள்ளையார்பட்டியில் கிடைத்தது போன்ற கருவிகள், அதே வகையான மண்ணடுக்குகளில் கிடைக்கின்றன.

இரும்புக்கால மற்றும் வரலாற்றுத் துவக்க காலத்தைச் சேர்ந்த கருப்பு–சிவப்பு பானை ஓடுகளும் மற்றும் இரும்புக் கருவிகளும் கிடைத்துள்ளன.

சோழர்காலக் கட்டடப்பகுதிகள், நாணயங்கள், மணிகள், இரும்புப் பொருள்கள் எனப் பலவகையான சான்றுகள்

கிடைத்துள்ளன. மேலும் ஆங்கிலேயர் காலத்தில் இங்கு வாழ்ந்தவர்கள் பயன்படுத்திய தொல்பொருள்களும் கிடைத் துள்ளன.

இங்கு வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இரும்புக்கால மக்களும் வாழ்ந்துள்ளனர். அவர்கள் இப் பகுதியை வாழ்வதற்கு தேர்ந்தெடுத்தமைக்கு இங்குள்ள வாரி, அல்லது ஓடை மற்றும் உயர்ந்த நிலவமைப்பு காரணமாக இருந்திருக்கலாம்.

## நாணயவியல்

# 51
# காஞ்சிபுரத்தில் முத்திரைக் காசு

ப.சண்முகம், சென்னை

முத்திரை பொறித்த வெள்ளிக் காசுகள் 1803 ஆம் ஆண்டிலிருந்து தமிழகத்தின் பல பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்காசுகள் புதையல்களாக போடிநாயக்கனூர் (தேனி மா.), மாம்பலம் (சென்னை மா.) ஆகிய ஊர்களிலும் கொடுமணல் (ஈரோடு மா.), அழகன்குளம் (இராமநாதபுரம் மா.) போன்ற அகழாய்வுகளிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்காசுகளில் பெரும்பாலானவை வட இந்திய மகதமோரியப் பேரரசுகள் காலத்தில் வெளியிடப்பட்டவை. சங்ககாலத் தமிழகத்தை ஆண்ட பாண்டிய, சேர அரசர்களும் இக்காசுகளை வெளியிட்டுள்ளனர். சோழர் வெளியிட்டதென்று கருதத்தக்க முத்திரைக்காசுகள் இதுகாறும் கிடைக்கவில்லை.

காஞ்சிபுரம் (காஞ்சிபுரம் மாவட்டம்) ஒரு தொன்மையான வணிக நகரமாகும். இங்கு நடைபெற்ற அகழாய்வுகளில் முத்திரை பொறித்த காசுகளை வார்ப்பதற்குப் பயன்படுத்திய இரண்டு சுடுமண் வட்டுக்கள் கிடைத்துள்ளன என்றாலும் முத்திரை பொறித்த காசுகள் இதுவரை கண்டெடுக்கப்படவில்லை. இவ்வட்டுகள் முழுமையாக இல்லாமல் உடைந்துள்ளபோதிலும், மற்ற முத்திரைக்காசுகளில் காணப்படும் சூரியன், காளை, யானை ஆகிய உருவங்களை அடையாளம் காணலாம்.

கீழே விவரிக்கப்படும் முத்திரைக் காசு காஞ்சிபுரத்தில் பல ஆண்டுகளுக்கு முன்னர் கள ஆய்வு மேற்கொண்டபோது வேகவதி ஆற்றின் ஓரத்தில் என்னால் கண்டெடுக்கப்பட்டது. இவ் வெள்ளிக் காசு பின்னமின்றி உள்ளது. காசில் உள்ள சின்னங்கள் ஓரளவு தெளிவாக உள்ளன.

**முத்திரைக் காசின் அடிப்படை விவரங்களாவன:** உலோகம்: வெள்ளி, வடிவம்: செவ்வகம், நீளம்: 15 மி.மீ, அகலம்: 12 மி.மீ., தடிமன்: 1.5 மி.மீ., எடை: 2.5 கிராம்.

இக்காசில் உள்ள குறியீடுகள் ஓரளவு தெளிவாக இருந்தபோதிலும் அவற்றைச் சரியாக இனம் காண இயலவில்லை. முன்புறத்தில் கீழ்க்கண்ட நான்கு குறியீடுகள் உள்ளன. 1. சூரியன், 2. யானை, 3. ஆறுகைச் சின்னம், 4.செடி. இவற்றில் சூரியன் பாதியளவே உள்ளபோதும் அதன் ஏழு கதிர்கள்






முத்திரைக் காசு, காஞ்சிபுரம்

மிகத் தெளிவாகப் புலப்படுகின்றன. இரண்டாவது சின்னமான யானையின் பின்பகுதி வெட்டுப்பட்டுள்ளது. மூன்றாவதாக உள்ள சின்னம் ஆறு கிளைச் சின்னமாகும். இச் சின்னம் மற்ற காசுகளில் காணப்படுவதிலிருந்து சற்றே மாறுபட்டும் சற்றுப் பெரியதாகவும் உள்ளது. இச் சின்னத்தில் புலப்படும் மூன்று கிளைகளில் இரண்டு தட்டையாகவும் மூன்றாவதாக உள்ள ஒரு கிளையின் நுனி இரண்டாகப் பிளவுபட்டும் உள்ளது. நான்காவதாக உள்ள சின்னமான சிறு செடியில், பக்கத்திற்கு இரண்டாக மொத்தம் நான்கு இலைகள் காம்புடன் உள்ளன. ஐந்தாவது குறியீடு இடப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பின்புறத்தில் உள்ள சின்னம் ஒரு சிறிய வட்டத்திற்குள் இடப்பட்டுள்ளதால் அதனை அறிவது சற்றுக் கடினமாக உள்ளது. இதேபோன்ற சின்னம் உடைய காசுகள் இதுவரை காணப்படவில்லை. இச்சின்னத்தை நின்றவாறுள்ள ஓராள், இருபக்கச் சக்கரங்களுடைய ஒற்றைமாட்டு வண்டி, விலங்கு எனப் பலவாறாகக் கருத முடியும். தொலைவணிகர்களின் பயன்பாட்டுக்கு உதவும் முக்கிய வாகனத்தைக் குறிக்க வண்டிச்சின்னத்தை இட்டிருக்கலாம். இச்சின்னத்தை விலங்கு என்ற நோக்கில் பார்த்தால் வளைவாகவுள்ள மேற்பகுதி, சங்ககாலச் சோழ அரசர்களின் காசுகளில் காணப்படும் புலியின் வளைந்த வால் போன்ற தோற்றத்தை ஒத்துள்ளது.

மகதமோரியப் பேரரசுகள் வெளியிட்ட காசுகள் பொதுவாக *3.3* முதல் *3.5* கி. எடையுள்ளன என்பதால் காஞ்சிபுரத்தில் கிடைத்த காசு *(2.5* கி.*)* குறைந்த எடையளவில் உள்ளது

என்பது தெளிவு. இந்தியாவின் பல பகுதிகளில் கிடைத்த பலமுத்திரைக்காசுகளும், தமிழகத்தில் போடிநாயக்கனூர் *(1.47 கி.)*, வைகை ஆற்றுப் படுகை *(2.46 கி.)* ஆகிய இடங்களிலும் கிடைத்த காசுகள் குறைந்த எடையுள்ளவை.

வணிக நோக்கத்திற்காக இக்காசு தமிழகத்தை வந்தடைந்ததாக குறிப்பிட்டாலும், இக்காசை யார், எக்காலத்தில் வெளியிட்டனர் என உறுதியாகச் சொல்ல இயலாது. இதேபோன்ற காசுகளை இதுவரை யாரும் பதிப்பிக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. தமிழக அரசுகள் வெளியிட்டதற்கான குறியீடுகள் ஏதுமில்லை. ஆயினும் மகதப் பேரரசர்களால் அல்லது அவர்களுக்கு அடங்கிய சிற்றரசர்கள் இக்காசை வெளியிட்டிருக்கலாமென்று அனுமானிக்கலாம். இக்கருத்து பிற்கால ஆய்வுகளால் தெளிவுபடுத்தப்படவேண்டும்.

# 52
# பெரியபட்டினத்தில் பாமினி சுல்தானியர் காசுகள்

**ப.சண்முகம்**, சென்னை

பெரியபட்டினம் (இராமநாதபுரம் மாவட்டம்), பாண் டியர் துறைமுகத்தில் கண்டெடுக்கப்பட்ட பல மன்னர்களின் காசுகள் பற்றிய விவரங்கள் முன் இதழ்களில் வெளியாகியுள்ளன. கி.பி. 13-14 ஆம் நூற்றாண்டுகளில் இப்பகுதியில் நடைபெற்ற வணிகத்தில் பல நாட்டு வணிகர்களும் தம் பொருள்களைப் பரிமாறிக்கொண்டுள்ளனர். இதன் முக்கிய விளைவாக அக்காலத்தில் வழக்கிலிருந்த பல நாட்டுக் காசுகள் பெரியபட்டினத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேலும் 15ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த தக்காணப் பேரரசுகளும், விசயநகரப் பேரரசும் வணிகத்தில் ஈடுபட்டுள்ளமையை இங்கு கிடைத்துள்ள காசுகளின் வழி அறியலாம். இவ் வணிகத்தில் 15 ஆம் நுற்றாண்டில் தக்காணத்தை ஆட்சி செய்த பாமினி சுல்தான்களும் ஆற்றிய பங்கு பற்றி இங்கே கிடைத்துள்ள பாமினி சுல்தான்களின் நான்கு காசுகளைக் கொண்டு குறிப்பிடலாம். இக் காசுகளில் இரண்டு, குல்பர்கா சுல்தானான அலாவுதின் அகமது ஷா (1436-58) வினாலும் மற்ற இரண்டு காசுகள் மூன்றாம் முகம்மது ஷா (1463-82) வினாலும் வெளியிடப்பட்டவை.

**(இரண்டாம்) அலாவு தின் அஹமத் ஷா (1436–1458) வின் இரண்டு வகையான காசுகள் கிடைத்துள்ளன.**

1. (படம் 1) முதல் வகைக் காசின் அடிப்படை விவரங்களாவன:

உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 15 மி.மீ., தடிமன்: 4.5 மி.மீ., எடை: 5 கிராம். இக்காசின், முன்புறத்தில் பாரசீக மொழியில் அல் முதான்சிர் பில்லா ஹில் கனி அப்துல் முஜாபர்.

பின்புறத்தில் பாரசீக மொழியில் அஹமத் ஷா பின் அஹமத் ஷா அல் பாஹ்மனி.

2. (படம் 2) இரண்டாம் வகைக் காசின் அடிப்படை விவரங்களாவன:

உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 18 மி.மீ., தடிமன்: 4.5 மி.மீ., எடை: 10 கிராம்.

இக்காசின், முன்புறத்தில், ஒரு வட்டத்திற்குள், பாரசீக மொழியில் அல்

முதாவ்க்கில் அதல் லஹில் கனி. பில்லா ஹில் கனி அப்துல் முஜாபர். வட்டத்தைச் சுற்றியுள்ள பகுதியில் உள்ள எழுத்துக்கள் தெளிவாக இல்லை.

பின்புறத்தில் பாரசீக மொழியில் அஹமத் ஷா பின் அஹமத் ஷா அல் வாலி அல் பாஹ்மனி.

## (மூன்றாம்) முகமது ஷா (1463–1482)

3. (படம் 3–4) இவர் வெளியிட்ட இரண்டு காசுகள் கிடைத்துள்ளன. இவற்றின் அடிப்படை விவரங்களாவன:

உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 12/19 மி.மீ., தடிமன்: 4/4.5 மி.மீ., எடை: 7/10 கிராம்.

இக்காசின், முன்புறத்தில் பாரசீக மொழியில் அல் முத்தசிம் பில்லாஹ் ஷமாஸ் வுத் துனிய வ தின்.

பின்புறத்தில் பாரசீக மொழியில் முஹமத் ஷா பின் ஹுமாயுமான் ஷா அல் சுல்தான்.

பாமினி சுல்தானியர் காசுகள்––பெரியபட்டினம்




1



2



3

4

1–2. (இரண்டாம்) அலாவு தின் அஹமத் ஷா, 3–4. (மூன்றாம்) முகமது ஷா

# 53
# பெரியபட்டினத்தில் மதுரை சுல்தான்களின் காசுகள்

ப.சண்முகம், சென்னை

பெரியபட்டினம் (இராமநாதபுரம் மாவட்டம்), துறை முகத்தில் கண்டெடுக்கப்பட்ட காசுகளில் சங்ககாலம், பேரரசுச் சோழர், பிற்காலப் பாண்டியர் காசுகளைப் பற்றிய விவரங்கள் முந்தைய ஆவணம் இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளன. கீழே விவரிக்கப்பட்ட காசுகள் யாவும் மதுரையை ஆண்ட சுல்தானிய அரசர்களால் வெளியிடப் பெற்றன.

மாலிக் காபூரின் தென்னகப் படையெடுப்பின் விளைவாக பாண்டியர் ஆட்சி வீழ்ச்சியுற்று சுல்தானியர் ஆட்சி மதுரையில் நிருவப்பட்டது. முகம்மது பின் துக்ளக், தன்னுடைய பிரதிநிதியாக ஜலாலுதின் ஹசன் ஷாவை மதுரையில் ஆட்சி அமைக்க அனுப்பிவைத்தான். சிலஆண்டுகளிலேயே ஜலாலுதின் புரட்சி செய்து 1333இல் தன்னாட்சியை நிறுவினான். அவனைத் தொடர்ந்து அலாவுதீன் உதௌஜி ஷா, குத்புதீன் பெரொஜ் ஷா, கயாசுதின் முகம்மத் தமகன் ஷா, முகம்மத் தமகன் ஷா, ஷம்சுதின் அதில் ஷா, பக்ருதின் முபாரக் ஷா, அலாவுதின் சிக்கந்தர் ஷா ஆகிய மன்னர்கள் ஆட்சி செய்தனர். இம்மன்னர்களில் ஐந்து பேர் வெளியிட்ட ஒரு வெள்ளி மற்றும் 23 செப்புக் காசுகள் பெரியபட்டினத்தில் கிடைத்துள்ளன. இவை யாவும் வட்ட வடிவிலானவை. அரசன் பெயர் மற்றும் இதர விவரங்கள் பாரசீக மொழியில், வலமிருந்து இடமாக உள்ளன. இக்காசுகளில் சின்னங்கள் ஏதும் இடப்படவில்லை. சிலகாசுகளில் அவற்றை வெளியிட்ட ஆண்டு ஹிஜிரி (இசுலாமியர்) ஆண்டுக்கணக்கில் தரப்பட்டுள்ளது. இதனால் அக்காசுகள் வெளியிடப்பட்ட ஆண்டையும் வெளியிட்ட மன்னர்களின் ஆட்சிக்காலத்தையும் துல்லியமாகக் கணிக்க முடியும்.

## ஜலாலுதின் ஹசன் ஷா (1335–1338)

இவர் வெளியிட்ட காசுகளில் வெள்ளிக்காசு ஒன்றும், செப்புக்காசுகள் 8ம் கிடைத்துள்ளன. இவற்றை 3 வகைகளாகப் பிரிக்கலாம். வெள்ளிக் காசில் (எண் 1) வெளியிட்ட ஆண்டு ஹிஜிரி ஆண்டுக்கணக்கில் 737 (கி.பி. 1336) என உள்ளது.



1-3. ஜலாலுதின் ஹசன் ஷா, 4-6. கயாசுதின் முகம்மது தமகன் ஷா, 7.நசிருத்தின் முகம்மது தமகன் ஷா, 8-9.பக்ருல்தின் முபாரக் ஷா, 10.அலாவுதிந் சிகந்தர் ஷா

*1.(படம் 1) உலோகம்: வெள்ளி, வடிவம்: வட்டம், விட்டம்: 12 மிமீ., தடிமன்: 2 மிமீ., எடை: 1.5 கி.*

*முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், ஹசன் ஷா 737. (கி.பி. 1336)*

*பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், அல் சுல்தான் அல் ஆஜம்.*

*2.(படம் 2) உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 16 மிமீ., தடிமன்: 2.5 மிமீ., எடை: 3.75 கி.*

*முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், ஹசன் ஷா அல் ஆஜம்.*

*பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், ஜலாலுதின் வா உத்தின்.*

*3.(படம் 3) உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 11.5 மிமீ., தடிமன்: 2 மிமீ., எடை: 1.5 கி.*

*முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், ஹசன் ஷா அல் சுல்தான்.*

*பின்புறம்: ஒரு வட்டத்த்திற்குள் பாரசீக மொழியில், அல் சுல்தான் அல் ஆஜம்.*

## கயாசுதின் முகம்மது தமகன் ஷா (1340–1344)

*இவர் வெளியிட்ட காசுகளில் செப்புக்காசுகள் 6 கிடைத்துள்ளன. இவற்றை 3 வகைகளாகப் பிரிக்கலாம்.*

*4.(படம் 4) உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 14 மிமீ., தடிமன்: 3 மிமீ., எடை: 2.75 கி.*

*முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், முகம்மது தமகன் ஷா. வட்டத்திற்கு வெளிப்புறமுள்ள எழுத்துக்கள் தெளிவில்லாமல் உள்ளன.*

*பின்புறம்: பாரசீக மொழியில், அல் சுல்தான் அல் ஆஜம் அலாவுத் துனியா வாவுதின்.*

*5.(படம் 5) உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 15 மிமீ., தடிமன்: 3 மிமீ., எடை: 3.90 கி.*

*முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், கயஸ் வுத் தின் யா வா வுத் தின்.*

*பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், அல் சுல்தான் முகம்மது தமகன் ஷா காஜி.*

*6.*(படம் *6)* உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: *14* மிமீ., தடிமன்: *3* மிமீ., எடை: *3.85* கி.

முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், கயஸ் வுத் தின் யா வா வுத் தின்.

பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், அல் சுல்தான் அல் ஆஜம்.

## நசிருத்தின் முகம்மது தமகன் ஷா (1344–1347)

இவர் வெளியிட்ட ஒரு செப்புக்காசு கிடைத்துள்ளது.

*7.*(படம் *7)* உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: *15* மிமீ., தடிமன்: *2.5* மிமீ., எடை: *2.5* கி.

முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், நசிருத் துனியா வா வு தின். வட்டத்திற்கு வெளிப்புறமுள்ள எழுத்துக்கள் தெளிவில்லாமல் உள்ளன.

பின்புறம்: பாரசீக மொழியில், அல் சுல்தான் முகம்மது தமகன் ஷா.

## பக்ருல்தின் முபாரக் ஷா (1358–1368)

இவர் வெளியிட்ட காசுகளில் செப்புக்காசுகள் *5* கிடைத்துள் ளன. இவற்றை *2* வகைகளாகப் பிரிக்கலாம். இக்காசுகளை வெளியிட்ட ஆண்டு ஹிஜிரி ஆண்டுக்கணக்கில் (கி.பி. *1362)* உள்ளது.

*8.*(படம் *8)* உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: *12* மிமீ., தடிமன்: *2* மிமீ., எடை: *1.25* கி.

முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், அல் நபி பா சாப் *764*. கடைசியில் உள்ள எண்கள் ஹிஜிரா ஆண்டுக்கணக்கில் (கி.பி. *1362)* உள்ளன.

பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், முகம்மது முஸ்தபி.

*9.*(படம் *9)* உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: *12* மிமீ., தடிமன்: *2* மிமீ., எடை: *0.80* கி.

முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், புருகுசித் அல்லா பகிர் வு துனிய வா வுத் தின்.

பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், முபாரக் ஷா ஜகன் *764*. . கடைசியில் உள்ள எண்கள் ஹிஜிரி ஆண்டுக்கணக்கில் (கி.பி. *1362)* உள்ளன.

## அலாவுதின் சிக்கந்தர் ஷா (1372–1377)

இவர் வெளியிட்ட காசுகளில் செப்புக்காசுகள் 4 கிடைத்துள்ளன. இவை யாவும் ஒரே வகையானவை. இக்காசுகளை வெளியிட்ட ஆண்டு ஹிஜிரி ஆண்டுக்கணக்கில் 779 (கி.பி. 1377) உள்ளன.

10.(படம் 10) உலோகம்: செம்பு, வடிவம்: வட்டம், விட்டம்: 11.5 மிமீ., தடிமன்: 2 மிமீ., எடை: 1.0 கி.

முன்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், சிகந்தர் ஷா அல் சுல்தான் 779.(கி.பி. 1377)

பின்புறம்: ஒரு வட்டத்திற்குள் பாரசீக மொழியில், பர்குஜித் அல்லா.

# 54

# பிரெஞ்சு இந்திய நாணயங்கள் மற்றும் காகிதப்பணம் குறிப்பு

**சு.பாலசுப்ரமணியன்,** பொள்ளாச்சி

பிரெஞ்சு மன்னன் பதினான்காம் லூயியின் நிதி அமைச்சராக இருந்தவர் ஜான் பாப்டிஸ்ட் கால்பர்ட். இவரே இந்தியாவில் பிரெஞ்சு ஆதிக்கத்தை ஏற்படுத்தியதற்குக் காரணமாக இருந்தவர். பிரெஞ்சு கிழக்கிந்திய கம்பெனியார் மொகலாயர்களிடமிருந்து இந்தியாவில் நாணயம் அச்சிடும் உரிமை பெற்றனர். இந்நாணயங்கள் டவுடோ, அரை டவுடோ மற்றும் பணம் எனப்பட்டன. இவற்றின் ஒருபக்கம் பிரெஞ்சு அரசின் சின்னமான லில்லி மலரும் மறுபுறம் புதுச்சேரி என்று தெலுங்கு மொழியிலும் பொறிக்கப்பட்டன. மலபார் பகுதியின் குடியேற்றமான மாஹியிலும் இவ்வகை நாணயங்கள் வெளியிடப்பட்டன. இவற்றுள் 1730,1733, 1793 மற்றும் 1820 ஆகிய ஆண்டுகள் பொறிக்கப்பட்டன. தெலுங்கு மொழி இந்நாணயங்களில் பிரதான மொழியாகப் பயன்படுத்தப்பட்டது. புதுச்சேரியில் ரோமன் ரோலண்ட் சாலையில் உள்ள அருங்காட்சியக வளாகம் அக்காலத்தில் நாணய அச்சுக்கூடமாக செயல்பட்டது. பிரான்சுவா மார்த்தேன காலத்திலிருந்து இது செயல்பட்டது. இங்கு அடிக்கப்பட்ட நாணயங்களில் ஆற்காடு என்ற நாணய அச்சுச் சாலையின் பெயர் காணப்படுகிறது. இது ஆர்காடு நாவப்பின் அனுமதியுடன் அச்சடிக்கப்பட்ட நாணயமாகும். இவற்றில் அராபிய எழுத்துக்கள் காணப்படுகின்றன. வராகன் எனப்படும் தங்க நாணயங்களின் ஒருபுறம் அவற்றின் மதிப்பும் மறுபுறம் திருமாலின் உருவமும் பொறிக்கப்பட்டன. ஜெஸ்யுட் பாதிரியார்கள் இதற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தமையால் திருமாலின் உருவத்திற்கு பதிலாக மீண்டும் பிரான்சின் சின்னமான லில்லி மலர் நாணயங்களில் இடம் பெற்றது.

## அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

# 55

# கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்

புலவர் செ.ராசு, ஈரோடு

### கொங்கு நாடு

சேர சோழ பாண்டிய நாடுகளைப் போலவே முன்பு தொண்டை நாட்டையும், கொங்கு நாட்டையும் சேர்த்துத் தமிழ்நாடு ஐந்து பகுதிகளாக விளங்கியது. தண்டியலங்கார மேற்கொள் பாடல் ஒன்று

நறவேந்து நங்கை நலங்கவர்ந்த நல்கா
மறவேந்தன் வஞ்சியான் அல்லன் துறையின்
விலங்காமை நின்ற வியன்தமிழ்நாடு ஐந்தின்
குலங்காவல் கொண்டொழுகும் கோ

என்று கூறுகிறது. சைவ இலகியங்களில் தொன்மையானதாகக் கருதப்பெறும் திருமந்திரம் "தமிழ் மண்டிலம் ஐந்தும் தாவிய " என்று கூறுகிறது. சங்க இலக்கியங்களில் கொங்கும், கொங்கரும் பல இடங்களில் சுட்டிக் கூறப்பட்டுள்ளனர். கொங்கு நாட்டின் நாற்புறமும் ஆண்ட அரச மரபினர் பலரும் பல சமயங்களில் கொங்கு நாட்டை வென்று அடிப்படுத்து ஆண்டுள்ளனர். கொங்குக் குறுநில மன்னர்கள் பலர் சங்க இலக்கியங்களில் சுட்டிக் கூறப்பட்டுள்ளனர். கொங்கு நாடு தனக்கெனத் தனி வரலாறு, கலை, நாகரிகம், பண்பாடு ஆகியவைகளைக் கொண்டு விளங்கியது.

### ஆவணங்கள்

கடந்த ஐம்பது ஆண்டுகளில் இருநூற்றுக்கும் மேற்பட்ட சமுதாய ஆவணங்கள் கொங்கு நாட்டில் கண்டறியப்பட்டுள்ளன. அவை செப்பேடு, பனையோலைகளில், மிகச்சில காகிதங்களிலும் எழுதப்பட்டுள்ளன. சுமார் 10 ஆவணங்கள் வழக்கின் பொருட்டு நீதிமன்றத்தில் அளிக்கப்பட்டிருப்பதால் அவற்றின் நகல் மட்டும் கிடைத்துள்ளன. இக்கட்டுரையில் கல்வெட்டுகள் சேர்க்கப்பெறவில்லை. தமிழகத்தின் பிற பகுதிகளைக் காட்டிலும் ஓலை ஆவணங்கள் கொங்கு நாட்டில் மிகுதி. இவ் ஆவணங்கள் பல்வேறு சமுதாயத்தைச் சேர்ந்தவை.

---

**பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள. தி.நா. சுப்ரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு எண் 15 நாள் 21-07-2013**

இவை 16-19 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இவை பெரும்பாலும் கோயில்களில் பலர் முன்னிலையில் எழுதப் பட்டன. மூன்றில் ஒரு பகுதி ஆவணங்களில் காலக்குறிப்புக்கள் தவறாக உள்ளன. முன்பு எப்போதோ நடைபெற்ற நிகழ்வைப் பிற்காலத்தில் எழுதிய காரணத்தாலும், தங்கள் உரிமை நெடுங்காலத்திற்கு முன்னரே இருந்ததாக நாட்ட முற்பட்ட காரணத்தாலும் காலக் குறிப்பில் தவறுகள் உள்ளன. பல ஆவணங்களில் முன்னிலை வகுத்தவர்கள், சாட்சிகள், எழுதியோர் விபரங்கள் உள்ளன. எல்லா ஆவணங்களும் தமிழில் எழுதப்பட்டுள்ளன. சில ஆவணங்களில் தொடக்கம், இடையில், இறுதியில் பாடல்கள் உள்ளன. பல ஆவணங்களில் பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.'

**கொங்கு வேளாளர்**

கிடைத்துள்ள ஆவணங்களில் பெரும்பான்மை அதாவது 70 ஆவணங்கள் கொங்கு வேளாளர் பற்றியவை. பல ஆவணங்களில் கொங்கு வேளாளர்கள் சோழநாட்டிலிருந்து குடியேறியதாகக் கூறுகின்றன. இன்றும் வேளாளர்கள் "குடியானவர்கள்" என்றே கூறப்படுகின்றனர். அவ்வாறு குடியேறியவர்கள் நற்குடி 48 ஆயிரம், பசுங்குடி 12 ஆயிரம் என்று கூறப்படுகிறது. நற்குடி என்பது வேளாளர்களும், பசுங்குடி என்பது வேளாளர்கட்கு உதவியாக வந்த பிற சமூகத்தவரும் ஆவர்.

கொங்கு வேளாளர் தலைவர்கள் பற்றிய புகழுரைகள் அதீத கற்பனையானவை. அவர்கள் பொறுமையில் தருமர், போரினில் பீமன், வில்லினில் விசயன், பரிதனில் நகுலன், சாஸ்திரத்தில் சகாதேவன், கொடையால் கர்னன், சத்தியத்தில் அரிச்சந்திரன், நடுநிலயில் எமன் என்று பலவாறு புகழப்படுகின்றனர்.

பெருங்கதை கொங்கு நாட்டு நூல். அந்நூல் பயிற்சி இடைக்காலத்தில் இல்லை. இருப்பினும் சில ஆவணங்களில் தலைவர்கள் கரிதனில் உதயணன், கரிமேல் உதயணன், மதிக்கு யூகி, மதிதனில் யூகி என்று புகழப்பட்டுள்ளனர்.

சோழர்களும், பாண்டியர்களும் சாதிக்கு ஒரு நீதி கூறும் மனு நுலின்படியே ஆட்சி செய்தாகவே எல்லா மெய்க்கீர்த்திகளிலும் காணுகின்றோம். தமிழின் தலையாய நீதி நூலான திருக்குறள்படி எவரும் ஆட்சி செய்ததாகக் கூறப்படவில்லை. ஆனால் சில ஆவணங்களில் கொங்குத் தலைவர்கள்,

**இன்சொல்லால் இனிதளத்து**
**வன்சொல்லால் மறம் கடிந்து**
**வள்ளுவர் உரைத்த முப்பால் மொழியின்படியே**

அறமே அறிந்து அல்லவை கடிந்து
கலிமெலியக் குடி தழைக்க

நிர்வாகம் செய்ததாகக் கூறப்படுகிறது. வள்ளுவர் மரபு காத்து நிர்வாகம் செய்ததாகவும் கூறப்பட்டுள்ளது.'

கொங்கு நாட்டில் குடியேறிய வேளாளர்கள் 24 நாடுகள் பிரித்து ஊர்கள் உண்டாக்கி யார் யாருக்கு எந்தெந்த ஊர்கள் காணியுரிமையுடைய ஊர்கள் என்று நிர்ணயம் செய்தனர். பிற்காலத்தில் பலர் பல்வேறு காரணங்களால் புதுக் காணியூர்கள் பெற்றனர். இவர்கள் தென்திசை வேளாளர். பெருங்குடியினர் எனப்பட்டனர்

அ) கத்தாங்கண்ணி சிவந்தி குலத்தாக் கவுண்டரின் வெள்ளைப் பிள்ளையைத் திருமணம் செய்து கொண்ட கண்ணகுல செங்கோட்டு வேலப்பன் கத்தாங்கண்ணி முழுக்காணியும் கேட்டுப் பெற்றார். சிவந்தி குலத்தார் வேறூர் சென்றனர்.

ஆ) வேட்டுவர், செட்டி சிவப்பிராமணர் ஊராகிய பெருந்துறை 500 பொன் கொடுத்து வாங்கி படை வீடு மேதி வேளாளர் காணியாளர் ஆனார்கள்.

இ) சேர மன்னன் கோரவி கோதை செல்லன், பண்ணை குல வேளாளர்கட்கு அனுமன்பள்ளியைக் காணியாக அளித்தார்.

ஈ) வல்லிஹபரம் சாத்தந்தை குலத்தார் வெள்ளை வேட்டுவன், வெள்ளை பெரிச்சி மூப்பனை வென்று வெள்ளோட்டைக் காணியாகப் பெற்றான்.

உ) பால வேளாளார்தலைவர் வீரவிக்கிரம சோழியாண்டாக் கவுண்டரின் கடனை அடைத்து எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தாரும், மருதுறை ஆந்தை குலத்தாரும், கொற்றனூர் ஆந்தை குலத்தாரும் அவிநாசியையும், திருமுருகன் பூண்டியையும் காணியூராகப் பெற்றனர்.

இவ்வாறு பல காரணங்களால் கொங்கு வேளாளர்கள் புதிய காணியூர்களைப் பெற்றதைச் செப்பேடுகள் கூறுகின்றன.

அந்துவன் குலம், செங்குண்ணி குலம், செல்ல குலம், தூரன் குலம், தேவேந்திரன் குலத்தார் கோயில், பிற மங்கல நிகழச்சிகட்கு ஆடல், பாடல் நிகழ்த்தவும், விழாச் சடங்குகளில் பங்கு பெறவும் மாணிக்கி என்ற பெயரில் பெண்களை நியமித்து சந்தனம் தெளித்து, ஆடை ஆபரணம் அளித்து, கொடை நிலம் அளித்து குலத்தின் மூத்த பிள்ளையாக நியமித்தனர்.

மோருர் எழுகரை நாட்டுச் சித்திரமேழி கந்தப்பட்டன்பேத்தி

அத்ததிப் பெண் வேளாளர் கூத்தாடிகளில் குமரமங்கலம் மரலப்பட்டன் பேத்தி முத்துவாழி ஆகியோர் மாணிக்கிகளில் சிலர்.

கொங்கு வேளாளர்கள் கலைஞர்களைச் சிறப்புடன் ஆதரித்தனர். பட்டன், புலவன், பண்பாடி, தக்கை கொட்டடி, கூத்தாடி முதலிய ஆஞ்சுபடிக்காரர் அல்லது ஐந்தமிழ் வாணர்கள் என்பவர்களை ஆதரித்தனர். ஆடினாலும் ஆடாவிட்டாலும் குடிப்பணமும் ஆடினால் படிப்பணமும் பெற்றனர்

இவர்கள் இல்லாமல் காணிப்புலவர்கள் என்போர் பல ஊர்களில் இருந்தனர். இவர்கள் முன்னிலையிலேயே சுபச்சடங்குகள் செய்யப்பட்டன. காணிப் புலவர்கட்கு அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்தனர், பல்லக்குச் சுமந்தனர், எச்சில் காளாஞ்சி ஏந்தினர். புலவர்பாளையம் என்றே சில ஊர்கள் உள்ளன. திருமணத்தில் காணிப்புலவர் பால்,பழம் சாப்பிடுவதே இறுதிச் சடங்காகும்.

முத்து மணியிலங்கும் முகசாலை மண்டபத்தே வித்வசனர் எந்நாளும் வீற்றிருக்கும் வாசலினான், என்று கூறுகிறது. இது கொங்கு வேளாளரின் மொழிப்பற்றைக் காட்டுகிறது.

காணிப் புலவர்களை மதித்தது போலவே குல குருக்களை மிகவும் மதித்துப் போற்றினர். கொங்கு நாட்டில் வேளாளர்கள் குடியேறிய போது தங்கள் குருவுடன் வந்தனர் என்று கூறப்படுகிறது. குலகுருக்களுக்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் கொடுப்பிபோம் என்றனர். வேறு எங்கு குடிபெயர்ந்து வாழந்தாலும் குலகுருவுக்கு ஆண்டுதோறும் செலுத்தும் தலைக்கட்டு வரியும், பாதகாணிக்கையும், சஞ்சாரம் வரும்போது சஞ்சாரக் காணிக்கையும் தவறாமல் அளிப்போம் என்றும், வாரிசு இல்லாச் சொத்து குருவுக்கே என்றும் செப்பேடு வெட்டித் தந்தனர். குருக்கள்புரம் என்றே சில ஊர்கள் அழைக்கப்பட்டன.

கம்பருக்கும் கொங்கு வேளாளர்கட்கும் உள்ள தொடர்பும், கம்பர் வேளாளர் பெருமக்களை மதித்த பெருமையும் சில ஆவணங்களில் உள்ளன. சோழனோடு மனம் மாறுபட்ட கம்பர் கொங்கு நாடு வந்தார். கம்பரைக் கொங்கு வேளாளர்கள் பெருமகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தனர். சோழன் அழைக்கக் கம்பர் மீண்டும் சோழநாடு சென்றார்.

சோழன் பரிசளித்தபோது கம்பர் இடது கையை நீட்டிப் பரிசைப் பெற்றாராம். காரணம் கேட்கவே கொங்கு வேளாளரிடம் நீட்டிய வலக்கையை வேறு எவரிடமும் நீட்ட

மாட்டேன் என்றாராம். வேளாளரைப் புகழ்ந்து பாடிய கம்பர் சோழனைப் பாட மறுத்தாராம். சோழனின் நேரி மலையைப் பாட மறுத்த கம்பர் அம்மலை வேளாளர் போர்ப் பட்டறைக் கல்லுக்குச் சமம் ஆகாது என்று பாட மறுத்தாராம். சோழனின் செங்கோல் வேளாளரின் உழவு மேழிக்குச் சமம் என்றார். காவிரியைப் பாடச் சொல்ல காவிரி கொங்கு நாட்டாரின் எச்சில் என்றார். எச்சில் பரிசோதனை காட்ட முடியுமா என்று கேட்க மதுக்கரையில் வந்து பார்க்கக் காவிரியில் வேளாளர் உணவு உண்ட எச்சில் இலை மிதந்து வந்ததாம்.

எச்சில் பரிசோதனை காட்டவே காவிரி பெருக்கெடுத்து சோழ நாட்டையும் அரசன் அரண்மனையையும் மூழ்கச் செய்ததாம். அடங்காத காவிரியைக் கம்பர்'

**கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்**
**பொன்னி கரைகடந்து போயினள்என்று இன்னீர்**
**உரைகடக்க லாமோ உலகுடைய தாயே**
**கரைகடக்க லாகாது காண்**

என்று பாடவே கரைக்குள் அடங்கிற்றாம். வேளாண்மை நிலங்கள் காப்பாற்றப் பட்டதால் வேளாளர்கள் அரசனுக்குக் கொடுக்க வேண்டிய திருமண வரி மாடை அரைக் கழஞ்சு பணத்தைக் கம்பருக்குக் கொடுக்குமாறு சேழன் ஆணையிடடான்.'

கம்பர் வேளாளர்கட்கு திருமணவரி பெற்றதால் மங்கல வாழ்த்து, கம்பர் வாழ்த்து, ஏர் எழுபது, திருக்கை வழக்கம் ஆகியவற்றைப் பாடிக் கொடுத்தாராம். வேளாளர் திருமண வீட்டில் கம்பருடைய இந்த நூல்கள் முன்பு படிக்கப்பட்டதாகப் பட்டயம் கூறுகிறது.

கம்பர் கொங்குநாடு வந்து பின் சோழநாடு திரும்பியபோது அவருடைய கையேட்டுக்காரர் பன்னிருவரைக் கொங்கு நாட்டிலேயே தங்குமாறு விட்டுச் சென்றார்.

காணிப்புலவர்கள் அவர்கள் வழியினர் என்பர். புலவர்களைத் தமிழ்க் கம்ப நாடர் என்றே கொங்கு மக்கள் அழைத்தனர். கம்பர் கவிதைகட்கு என்றும் அழிவிலலை என்ற பொருளில் கம்பர் தமிழ் உள்ளவரை கொடைகள் நிலைக்க என்று எழுதினர்.

ஒரு ஊருக்கு உரிமையுடைய காணியாளர் பலர் இருந்தால் காணியுரிமையை வரிசைப்படுத்தி யார் யாருக்கு என்னென்ன உரிமை என்பதை நிர்ணயம் செய்தனர்.

கொங்கு வெளாளர் செய்த அறச்செயல்கள் பல. அவற்றுள் பூந்துறை வாரணவாசி செய்த அறச்செயல் மிகச் சிறந்த ஒன்று.

சத்திமங்கலம் என்ற ஊரில் கைகால் ஊனமுற்றவர்களைப் பாதுகாக்கப் பதினேழாம் நூற்றாண்டில் முடவர் காப்பி நிலையம் ஒன்றைத் தொடங்கி அதற்கு உம்பழத்தம், செம்பத் துளூ, பன்னை மேடு, சோழனூர், ஆண்டாவந்தி, கோட்டூர்,சத்திமங்கலம் என்ற ஏழு ஊர்களில் வருவாயையும் அளிக்கச் செய்தார்

**வேட்டுவர்**

வேட்டுவர்களைக் கொங்கு நாட்டின் பூர்வ குடிகள் என்றும், காளத்தி மலைப்பகுதியிலிருந்து குடியேறியவர்கள் எனவும் ஆவணங்கள் கூறுகின்றன. இவர்கள் வேடர், வேட்டுவர், காவிலியர், மாவலியர், பூவலியர் என ஐந்து பிரிவினர். அதனால் இவர்கள் அஞ்சு சாதியார் எனவும் அழைக்கப்பட்டனர். இவர்கள் குருகுல வம்சத்தார், கண்ணப்பர் குலத்தார், வாழரச மணவாளர் என்றும் அழைக்கப்படுவர்.

வேட்டுவர்களை வேளாளர்கள் பாதிப்பங்காளிகள் என அழைத்ததைப்பட்டயலங்கள் கூறுகின்றன. நாடு காக்கும் போரிலும், எல்லைத் தகராறுகளிலும் வேளாளரும் வேட்டுவரும் இணைந்து போரிட்டுள்ளனர். பல அறச்செயல்களை இரு சமூகத்தாரும் சேர்ந்து செய்துள்ளனர். வேட்டுவர் சமுதாயத்தின் பல ஊர்கள் கொங்கு வேளாளர்கட்கு உரிமை மாற்றம் செய்யப்பட்டதைத் தென்னிலைச் செப்பேடுகள் கூறுகின்றன.

புரவிபாளையம் முத்து வேல்மணிச் சந்திர கோப்பண கவுண்டர், பரமத்திச் சீமை அல்லாள இளைய நாயகன், நாரணாபுரம் ஆதிநாராயணக் கவுண்டர், தென்னிலை வேட்டுவப் பட்டாக்காரர் ஆகியோர் கொங்கு நாட்டுச் சமுதாய வாழ்வில் பெரும் பங்காற்றியுள்ளனர். பல பட்டயங்களில் வேட்டுவ சமுதாயத்தின் பல உட்பிரிவுக் குலங்கள் கூறப்பட்டுள்ளன.

**செங்குந்தர்**

செங்குந்தர்கள் செங்குந்தை, முதலியார், கைக்கோளர் என்றும் ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் நெசவுத் தொழலில் ஈடுபட்டவர்கள். கொங்கு நாட்டின் பல பகுதிகளில் புலவர்களாகவும், கோயில் வாத்தியக் கலைஞர்களாகவும் இருந்துள்ளனர். சிலர் கணக்கு, சுங்கம் போன்ற பணிகளையும் செய்தனர். இடங்கைப் பிரிவினரான இவர்கள் இடங்கைக்குத் தலையானோர் என்று கூறப்பட்டுள்ளனர். இடகையர் வெற்றிப் பட்டயம் செங்குந்தர் வெற்றிப் பட்டயம் என்றே குறிக்கப்பட்டுள்ளது.

திருச்செங்கோடு, அலைவாய்மலை, சேவூர் போன்ற பல இடங்களில் இவர்கட்குத் தனி மடங்கள் இருந்துள்ளன.

சில ஆவணங்களில் செங்குந்தர் குலத்திற்குரிய புகழ்மிக்க மெய்க்கீர்த்திகள் உள்ளன. கண்ணதலம் பட்டயத்தில் வேளாளர் 60 காங்கேயருடன் செங்குந்தகுல நல்லய்யன் 61 ஆம் காங்கேயன் என்று அழைக்கப்படுகிறார்.

மோரூர் வேளாளர் குலத்தலைவர் காங்கேயருக்கு குழந்தைப் பேறு இல்லையென்று செங்குந்தர் குல நல்லய்யன் தன் தலையை அரிந்து பலியிட்டுக் கொள்கிறான். செங்குந்தர் சமூகத்தில் நாட்டாண்மைக்காரர், பட்டக்காரர், சமய முதலிப் பட்டக்காரர், சமய முதலிகள், பெரியதனக்காரர், காரியக்காரர், புள்ளிக்காரர் என்று பல நிலைத் தலைவர்கள் இருந்தனர். தங்கள் சமூகத்திற்கென்று தனி மாணிக்கியை நியமித்துக் கொண்டனர்.

இவர்களுக்குள் போக்கங் கூட்டம், இராசி கூட்டம், ஆறாங் கூட்டம், பூந்துறையான் கூட்டம், சூரியன் கூட்டம் போன்ற பல குலப்பிரிவுகள் ஆவணங்களில கூறப்படுகின்றன. இவர்கள் கொங்கு 24 நாடுகளிலும் பரவி வாழந்துள்ளனர்.

## வேட்கோவர்

உடையார், மண்ணுடையார், கொங்குத் திருநீலலகண்டர், சாலிவாகன வம்சத்தார், வேட்கோவர், குலாலர், குயவர் என்று பல பெயர்களில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் பாண்டிய நாட்டினர் என்றும் கொங்கு வேளாளர்கள் இவர்களை அழைத்துக் கொண்டுவந்து கொங்கில் குடியமர்த்தினர் என்றும் மதுக்கரைப் பட்டயம் கூறுகிறது.

வேட்கோவர்கள் " இவ்விடத்தில் அண்ணன் தம்பி மாமன் மைத்துணன் இவர்கள் எல்லோரையும் விட்டு நாங்கள் எப்படி உங்கள் நாட்டுக்கு வருவது" என்று கேட்க காணியாட்சிப் பட்டயமும் நாடும் ஊரும் காணிபூமி மண்ணு மனையும் எங்களுக்கு உண்டானது கொடுக்கிறோம் என்று அழைத்து வந்தனர்.

வேளாளருக்கும் வேட்கோவர்களுக்கும் " கொள்ளி கோடி இருவருக்கும் ஒண்ணு, உங்குறது திங்குறது இருவருக்கும் ஒண்ணு, கொள்ளுகிறது கொடுக்கிறது பிறத்தியம்" என்று மதுக்கரைப் பட்டயம் கூறுகிறது. ஒவ்வொரு சமுதாய மக்களும் தங்கள் வீட்டு நிகழ்ச்சிகட்கு வேட்கோவர்கட்கு எத்துணை பணம் கொடுக்க வேண்டும். அதைப் பெற்றுக் கொண்ட வேட்கோவர்கள் என்னென்ன மண்பாண்டங்கள் வழங்க வேண்டும் என்று விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

கொடுமுடியில் இரண்டு வேட்கோவர் சமூகச் சிறுவர்கள் பெற்றோரை இழந்து அனாதை ஆனார்கள். உமையாயி

என்ற கோயில் பணிப்பெண் (தேவரடியார்) அச்சிறுவர்களைப் பாதுகாத்து கல்வி கற்கச் செய்து வீட்டிலும், கோயிலிலும் உள்ள மட்பாண்டங்களையும், தெய்வ உருவங்களையும் காட்டி அதுபோல் செய்யும் திறமை உடையவர்கள் ஆ’கி ஈரோட்டு வேட்கோவப் பட்டக்காரர் வீட்டில் திருமணம் செய்வித்து ஏழு ஊர்களில் மட்பாண்டம் வனைந்து கொடுக்கும் உரிமையையும் பெற்றுத் தந்ததை அரைய நாட்டுப் பட்டயம் கூறுகிறது. சென்மப் புலவன் என்ற வேட்கோவர் குல மோடிவித்தைக்காரன் இரண்டு கைகளிலும் முறங்களைக் கட்டிக்கொண்டு ஒரு உயர்ந்த பாறை மேலிருந்து பறந்து வந்து சித்தன் ‘குளத்தில் இறங்கியதை ஒரு செப்பேடு கூறுகிறது.

சென்மப் புலவன் என்ற வேட்கோவர் குல மோடிவித்தைக் காரன் இரண்டு கைகளிலும் முறங்களைக் கட்டிக்கொண்டு ஒரு உயர்ந்த பாறை மேலிருந்து பறந்து வந்து சித்துன் குளத்தில் இறங்கியதை ஒரு செப்பேடு கூறுகிறது.

திரித்தகிரி மலையில் வேட்கோவர் குலப்பெருமக்கள் கூடி மடம் ஒன்றை ஏற்படுத்திய விபரமும், அம்மடத்திற்கு வேட்கோவர்கள் கொடுக்கும் வரி விபரங்களையும் ஒரு செப்பேடு கூறுகிறது

சாலி வாகனன் ஆன வேட்கோவர்ட்கு வரி இல்லை. ஆனால் வீரமுஷ்டிகள் என்போர் வேட்கோவர் சோலை செட்டியிடம் இரண்டு பணம் வரியும், மூன்று வேளை விருந்தும் கேட்டு ரண பாவடம் (மறியல்) செய்தனர். சோலை செட்டி (வேட்கோவர்) மகள் மீனாட்சி போராடி வரி நீக்கம் பெற்றதை ஒரு செப்பேடு கூறுகிறது.

6. பட்டம் 56 தேசம் 24 நாட்டுக்குரிய வேட்கோவர்கள் பழனியில் ஒரு பாடம் கட்டியதை ஒரு செப்பேடு கூறுகிறது. 11 செப்பேடுகள் வேட்கோவர் பற்றிப் பல அரிய செய்திகளைக் கூறுகின்றன.

**நாடார்கள்**

நாடார்களைப் பற்றிய செய்தியை எட்டுப் பட்டயங்களும், செப்பேடுகளும் கூறுகின்றன. கருமாபுரம், பூந்துறை, திருமுருகன்பூண்டி, பெருந்துறை போன்ற பல ஊர்களில் நாடார் சமூகக் குலகுருக்கள் மடங்கள் உள்ளன. கொங்கு நாடார்கள் வலங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

நாடார்கள் நாடாதி நாடார், நாட்டுவர், மதுரையார், போர்முடையார், கோனாடர், சங்கனி, கொங்கனி முதலிய ஏழு

பிரிவைச் சேர்ந்தவர்கள் என்றும், ஏழு பிரிவனர் முதல்வர்கள் நாரித்திலகன், நமனாரி குஞ்சரன், கனகரேகன், மதன சௌந்தரன், கமல கேதனன், கனக கேன், கமல லோசனன் என்றும் செப்பேடு கூறுகிறது.

இவர்கள் ஆவணங்களில் வெள்ளைக் குடையும், வெண்சாமரமும் உடையவர்கள் என்று கூறப்படுவதுடன் பல மெய்க்கீர்த்தித் தொடர்களும் கூறப்படுகின்றன. ஈழமும் இலங்காபுரியும் வென்றவர்கள், சங்கராச்சாரியாருக்கு உபதேசம் செய்தவர்கள் என்பன அவற்றுள் சில இவர்கள் 'பெரியதனம்' என்ற தலைவரை ஏற்றுக் கொண்டவர்கள். சிலர் நாயக்கர் பட்டம் உடையவர்கள்.

நாடார் என்பது நாடாழ்வார், வளநாடர் என்பதன் சுருக்கம் என்றும், சாணார் என்பது சான்றோர் என்பதன் மரூஉ என்றும் ஒரு செப்பேடு கூறுகிறது. முகப்பர் என்ற சொல்லே மூப்பர் என்று மாறியதாம். சோழ மன்னன் ஆற்று உடைப்பை அடைக்க இவர்களை அழைத்தபோது " ஏர்வரி" சுங்கம் கொடோ, கொத்து எடுத்து மண் வெட்டோம். கொற்றவரைக் கைமுகையோம். கூடை தொடோம் " என்று கூறினார்கள் என்கிறது ஒரு செப்பேடு.

**வணிகர்கள்**

25 செப்பேடு, பட்டயங்களில் வணிகர்களைப் பற்றி பல செய்திகள் கூறப்படுகின்றன. வணிகர்களில் பலர் வியாபாரம் மட்டும் செய்யாமல் நிலம், கோயில் உரிமையாளர்களாகவும் இருந்துள்ளனர். கொங்கச் செட்டியார்கட்குக் "கவுண்டர்" பட்டமும் கூறப்படுகிறது. ஆவணங்களில் கல் அரக்கு, கால்நடை, கோதும்பை, சந்தனம், சவுளி சீரகம், சேவு நவதானியம், நவரத்தினம், நீலம், நூல், பலசரக்கு புகையிலை, மஞ்சள், லவணம்(உப்பு), வெல்லம், வெற்றிலை போன்ற பல பொருள்கள் விற்கப்பட்டதாகக் கூறுகிறது. வணிக மையங்கள் பேட்டை என அழைக்கப்பட்டன. ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட்கள் ஏறுசாத்து, இறங்கு சாத்து எனப்பட்டன. நிசப்பொதி, மூலைப் பொதி, தலைச்சுமை, எருது, வண்டி மூலம் வணிகப் பொருட்கள் வந்தன. சுங்கம், பேரம், தரகு போன்றவை வணிகம் தொடர்பான சொற்கள். பல வணிகர்கள் "மகமை" மூலம் கோயில்கட்குக் கொடை கொடுத்துள்ளனர். இசுலாமியரும் வணிகராக இருந்துள்ளனர். முசிலிமான், வேடசந்தையூர், இராவுத்துமார் ஆகியோர் கூறப்படுகின்றனர். கொங்கு ஆவணங்களில் பல்வேறு வணிகச் சமுதாயங்கள் குறிக்கப்படுகின்றன.

இருபத்து நான்கு மனையார், எட்டுவகைப் பலர், கவறைச் செட்டி, கன்னடச் செட்டி, கொங்கச்செட்டி, கோமுட்டி, சாலிய செட்டி, செட்டிக்காரர், செட்டிகள், சேடசெட்டி, தேசத்தூர், தேவாங்கச்செட்டி, நகரத்தார், நான்கு திசை ஐம்பத்தாறு தேசத்துப் பலர், பட்டக்காரர், பட்டுநூல் வெட்டி, பலபட்டறைச் செட்டி, பன்னிரண்டாம் செட்டிகள், மூத்தாஞ் செட்டி, ராவுத்தமார், வர்த்தகர், வெள்ளாஞ் செட்டிகள் எனப்பல்வேறு பிரிவினர் கூறப்பட்டுள்ளனர்.

**பல சமூகத்தார்**

தேவர், ஆசாரிகள், நாயக்கர், பண்டாரம், நாவிதர், வள்ளுவர் குலத்தார் ஆகியோருக்குத் தனித்தனிச் செப்பேடுகள், பட்டயங்கள் உள்ளன. ஆவணங்களில் அகப்படியர், இடையர், உப்பிலியர், உவச்சர், ஒட்டர், கம்பளத்தார், கருணீகர், கன்னடியர், குறும்பர், கோசங்கிகள், சக்கிலியர், சவளக்காரர், சனுப்பர், சிவியார், சோழியர், திருவெம்படிக்காரர், தொட்டியர், தொம்பர், தொழுவன், தோட்டி, பச்சை மலையாளர், பள்ளர், பாஞ்சாலர், பாலிடையர், மல்லர், மலையாளர், யாதவர், வண்ணார், வன்னியர், வாணிபர், வாரியார், வீரமுஷ்டிகள், வீர முடியாளர் முதலிய பல சமூகத்தார் குறிக்கப்பட்டுள்ளனர்.

பல்வேறு சமூகத்தவர்கள் பலபட்டறை, பலபட்டறையர் என்று குறிக்கப்பட்டுள்ளனர்.

**வலங்கை இடங்கை**

இவர்கள் வலக்கை, இடக்கை, வலதுகை இடது கை, வலங்கைப் பாணத்தூர் இடங்கைப் பாணத்தூர், வலங்கையர் இடங்கையர் எனவும் குறிக்கப்பட்டுள்ளனர்.

செங்குந்தூர் வெற்றிப் பட்டயம், ஆசாரிகள் வெற்றிப் பட்டயம், மல்லிகுந்தம் பட்டயம் ஆகிய வலங்கை இடங்கை பற்றிய முழுப் பட்டயங்கள், காலிங்காரயன் அணைப் பட்டயம், சேவூர்ச் செப்பேடு, மோரூர்க் காங்கேயர் ஏடு, கன்னிவாடிப் பட்டயம், வேலூர்ச் செப்பேடு ஆகியவற்றில் வலங்கை இடங்கை பற்றிய சில செய்திகள் கூறப்படுகின்றன.

ஆசாரிகள் (பஞ்சு கம்மாளர், தட்டார், கொல்லர், தச்சர், கன்னார், கல்வேலைக்காரர்), கம்பளத்தார், செங்குந்தர், தேவேந் திரப் பள்ளர், நகரத்தார், மாதாரகள், வன்னியர் ஆகியோர் இடங்கயைர் என்றும், கவறைச் செட்டிகள், சாணார், சேனியர் முதலியவர்கள் வலங்கையர் என்றும் கூறப்படுகின்றனர்.

இவர்களுக்குள் ஏற்பட்ட உரிமை பற்றிய வழக்குகள் பூர்வம் தீர்ந்த பட்டயங்கள் மூலமாகவும், காஞ்சிபுரம் காமாடசியம்மன்

கோயிலில் கிடைத்த செப்பேடு மூலமாகவும் தீர்த்து வைக்கப்பட்டன. தோற்றவர்கள் அபராதமும், வென்றவர்கள் வெற்றிக் காணிக்கையும் அளித்துள்ளனர்.

### அலுவலர்கள்

கொங்கு ஆவணங்களில் அட்டணவை, அதிகாரி, அமுல் கார், அரண்மனை மனுஷர், இராசகரத்துக்குக் கர்த்தர், எழுத்துக்காரன், கந்தாசாரம், காரியத்துக்குக் கர்த்தர், காரியப்பேர், கணக்குப் பிள்ளை, சம்பிரதி, சுபேதார், சிரஸ்ததார், சேனபோகம், சேர்வைகாரன், சொத்துக் கணக்குப்பிள்ளை, தலத்துக் கணக்கப்பிள்ளை, தலையாரி, தண்டு, தளவாய், திவான், நோட்டம், நாட்டாமை, பட்டக்காரன், பரிசாரகர், பாளையக்காரர், பாருபத்தியம், பொக்கிஷக் கொல்லர், பாளையப்பட்டு, மணியம், மந்திரி, மெய்போகம், ராயசம், வில்லைச் சேவகர் போன்ற பல அலுவலர் பெயர்கள் காணப்படுகின்றன.

### ஊர்ப்பிரிவுகள்

நிர்வாக வசதிக்காகப் பெரிய ஊர்கள் இரண்டாகப் பிரிக்கப்பட்டன. ஒரே ஊர்கள் வடமுகம் தென்முகம், நன்செய் புன்செய், அக்கிரகாரம் சர்க்கார், முகாசி அட்டவணை, அக்கரை இக்கரை, வடக்கு தெற்கு, அவல் துய்யம் என்று பலவாறு பிரிக்கப்பட்டிருந்தன.

### செப்பேடு ஆவணங்கள்

தலத்துக் கணக்கர்கள், அய்யர், பிள்ளை, உபாத்தியாயர், கவுண்டர் ஆகியோர் ஆவணம் எழுதியுள்ளனர். ஆசாரிகள், சிற்பாசாரியர், தட்டான், பத்தன் ஆகியோர் செப்பேடு தயார் செய்துள்ளனர்.

**இச்செப்பேட்டுச் சாசனம் கரூர் அருணாசல ஆசாரி**
**மகன் நாகாசாரி கை எழுதி அடிச்சுது**
**இச்செப்பேடு எடப்பாடி ராமசாமிப் பத்தன் செய்தது**
**இந்தத் தர்ம சாசனம் திராவிட அட்சரத்தின் தாம்பர**
**சாசனத்தில் எழுதியவன் தானப்ப முதலியார்**
**குமாரன் நீலகண்டம். இந்த அட்சரம் கொத்தியவன்**
**கோயம்புத்தூரில் இருக்கும் விசுவகர்ம வங்கிஷத்தில்**
**வீரப்ப ஆசாரி மகன் ஆனந்தசாரி**
**என்பன சில செப்பேட்டுத் தொடர்கள்.**

பல ஆவணங்கள் மீண்டும் எழுதப்பட்டுள்ளன. அவை பிரிநகல், புதுப்பட்டயம் சபாது எனக்குறிக்கப்பட்டுள்ளன.

“பட்டயம் அனாதியாய் ஏடு பழையதாய்ப் போனபடியினாலே குன்னத்தூரில் இருக்கும் பிராமணரில் வடமலைப் பிள்ளை மகன் ரங்கநாத நல்லய்யன் புதுப் பட்டயம் எழுதினேன், பெரியோர்கள் பொறுத்தருளவும்”

“நம்ம நாட்டு ஓலை ரொம்பக் காலம் பழகிப்போனபடியால் நாங்கள் அந்த ஓலைக்குப் பதில் புது ஓலை போட்டு எழுதியிருக்கிறோம். ஏட்டுக் குற்றம், எழுத்துக் குற்றம், வாசகப் பிழை, வரி மாராட்டம் இருந்தால் நீங்கள் அனைவோரும் பொறுத்துக் கொள்ளவும்” எனச் சில ஆவணங்களில் எழுதப்பட்டுள்ளன.

### வரி இல்லாதவர்கள்

இந்த ஆவணங்கள் எழுதப்பட்ட காலத்தில் குறவர், கூத்தாடி, சக்கிலியர் (தொட்டியச் சக்கிலியர், மதுரைச் சக்கிரியர், அனுப்பச் சக்கிலியர், காணக்காட்டுச் சக்கிலியர்), தொட்டியர், தொம்பர், பட்டர், பறையர், புலவர், மறவர், மாணிக்கி, வலையர், வேட்கோவர், ஆண்டிகளில் குறுப்பாண்டி ஆகியோருக்கு வரி இல்லை என்று கூறப்பட்டுள்ளது. முடவர்கட்கும் வரி இல்லை.

வரி இல்லாதவர்கட்கு வரி விதிக்கப்பட்டால் போராடி வரி நீக்கம் பெற்றுள்ளனர். வரி இல்லாதவர்கள் ஊரார் ஏவின ஊழியம் செய்ய வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

### வரலாற்றுக் குறிப்புகள்

சோழர்கள் கலிங்கம், கடாரம், கலியாணி, கங்கைக் கரை, ஈழம் ஆகியவற்றை வென்றார்கள். அவ்வெற்றிப் படையில் நாடார், கைக்கோளர் இருந்திருக்க வேண்டும் அச்சமுதாயச் செப்பேடுகளில்

**கலிங்க மண்டலம் கட்டறுத்துக்**

**கடகமும் கலியாணியும் கொண்டோர்**

**கங்கை மண்டலம் குறும்பறுத்துக்**

**கலிங்க மண்டலம் கட்டறுத்தோர்**

**கருணாகரர்க்குச் கிளைஞராதியன்**

**கலிங்கமும் கொண்டு பரணியம் ஏற்று**

**என்று பல தொடர்கள் காணப்படுகின்றன.**

### சில குறிப்புகள்

சில காரணங்களால் சிலருக்குச் சிறப்புச் செய்யப்பட்டுள்ளது. அவை சமயப்பட்டயம் கொடுத்தல், சமயம் கொடுத்தல், சாதிப்

பட்டயம் கொடுத்தல், சாதிப் பிள்ளை ஆக்குதல், பொட்டுக் கட்டுதல், காணியாட்சி அளித்தல், பரதேசி முத்திரை அளித்தல், பரிவட்டம் கட்டல் என்பன.

நாகரம், பூநாகரம், பொன்நாகரம், திருவையாற்று நாகரம், வீரராயன் பணம், ராஜகோபாலிப்பணம், கெண்டிராயன்பணம், மாடைப் பணம், பொன், கழஞ்சு, வராகன் போன்ற பல நாணயப் பெயர்கள் ஆவணங்களில் காணப்படுகின்றன.

அடிமை முறை இருந்துள்ளது. ஆண்களும் பெண்களும் விலைக்கு வாங்கப்பட்டும், விற்கப்பட்டும் உள்ளனர். நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. தங்கள் கழுத்தைத் தாங்களே அரிந்து கொண்டு காளிக்கு தங்களைப் பலி கொடுத்துக் கொண்டுள்ளனர்.

கணவன் இறந்தால் மனைவியர் மட்டும் அல்ல குடிபடைகளின் மகளிரும் தீப்பாய்ந்துள்ளனர். அவர்கள் வீரமாத்திகள் எனப்பட்டனர். தோல்வியடைந்தோர், பழி வாங்கப்பட்டோர், அவமானப்பட்டோர், பேரிழப்புக்கு ஆளானவர்கள் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு செத்துள்ளனர்.

கொங்கு ஆவணங்கள் தரும் அரிய செய்திகள் பற்பல இவை முறையாகத் தொகுக்கப்பட்டு வரலாற்று நூலில் இடம்பெற வேண்டும். பலர் தங்கள் பரம்பரை உரிமை பறிபோய் விடுமோ என்ற அச்சத்தில் ஆவணங்களைக் காட்ட மறுக்கின்றனர். இன்னும் பல ஆவணங்கள் கிடைக்க வாய்ப்புள்ளது.

# 56
# வேலூர் மாவட்டத்தில் எழுவர் அன்னையர் சிலைகள்

**ம.காந்தி, வேலூர்**

இந்தியாவில் பல தெய்வங்களின் வழிபாட்டில் பெரும்பாலும் எல்;லா ஊர்களிலும் நீக்கமற இருக்கும் வழிபாடு எழுவர் அன்னையர் வழிபாடு. பெண் தெய்வ வழிபாடு என்பது வளமை வழிபாடாகும். இதில் பயிரிடுவோர், செல்வம் பெருக, குழந்தைகள் நோயின்றி வளர, அரசர்கள் பிற நாட்டை வெற்றி கொள்ள இன்ன பிற நன்மை கருதி தாய்த் தெய்வங்களை மக்களும் அரசர்களும் வழிபட்டனர். இன்றும் வழிபட்டுவருகின்றனர். பெண் தெய்வங்களுக்கு உயிர் பலி இடுதல் வழக்கமாக இருக்கிறது. பொ. ஆ. 9ஆம் நூற்றாண்டில் போளூர் வட்டத்தில் இருக்கின்ற காப்பலூரில் இருக்கும் கல்வெட்டில் முதலில் எழுவர் கன்னியருக்கு பூசை செய்த பின்பு காடுகாளுக்கு வழிபாடு செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளனர். எனவே, ஓர் ஊரிலுள்ள கோயில்களுக்குச் செய்யப்படும் வழிபாடுகளில் சப்த மாதாக்களுக்கு வழிபாட்டில் முதலிடம் அளிக்கப்படுகின்றது.

சப்த மாதாக்கள் வழிபாடு இல்லாத ஊரே தமிழ் நாட்டில் இல்லை எனலாம். கற்சிலைகள் இல்லையெனினும் குறைந்த அளவு ஏழு செங்கற்கள் அல்லது ஏழு சாதாரண கூர்மையான கருங்கற்கள் ஓர் இடத்தில் வழிபடுபவர்களுக்கு விருப்பமான அல்லது பொது இடத்தில் வைத்து மக்கள் வழிபடுகின்றனர்.

**தொல்லியல் சான்றுகள்:** பெண் தெய்வ வழிபாடு எகிப்து முதல் கிழக்கில் மங்கோலியா வரை பரவியிருந்திருக்கிறது. அரப்பாவில் வரி;சையாக நிற்கும் பெண் தெய்வங்கள் கொண்ட பலகை கிடைத்திருக்கிறது. ஆதிச்சநல்லூரிலும் தாய்த் தெய்வ உருவம் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இந்தச் சான்றுகளால் பெண் தெய்வ வழிபாடு சுமார் 3000 ஆண்டுகளாக வழக்கிலிருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. சென்னையை அடுத்த குன்றத்தூரில் பல்லவ மன்னன் மகேந்திர வர்மனின் காலத்தைச் சேர்ந்த எழுவர் அன்னையர் சிலைகள் காலத்தால் முற்பட்டவை என்று தொல்லியல் அறிஞர் நடன காசிநாதன் தெரிவிக்கிறார்.

---

**கோவிலூர் ஆதினத் தலைவர் தவத்திரு நாச்சியப்பன் ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 13ஆவது சொற்பொழிவு நாள் 20-07-2013**

எஸ். கே. இராச்சந்திர ராவ் அவர்கள் எழுவர் அன்னையர் குழுவில் முதலில் இடம் பெறுபவர் வீரபத்திரர் என்கிறார். இந்தக் கூற்றைக் காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலின் திருச்சுற்றில் உள்ள எழுவர் அன்னையர் குழுவில் வீரபத்திரர் உள்ளார் என்கிறார்.

**இலக்கியச் சான்றுகள்:** தமிழின் தொன்மை இலக்கண நூலான தொல்காப்பியம் கொற்றவை நிலை என்று கொற்றவையை நமக்கு அறிமுகப்படுத்துகிறது. அதன் பின் சங்க இலக்கியங்களான திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கலித்தொகை, குறுந்தொகை, சிலப்பதிகாரம் மற்றும் மணிமேகலை தாய்த்தெய்வ வழிபாட்டைக் காட்டுகின்றன. இவற்றுள் சிலப்பதிகாரத்தின் மதுரைக் காண்டத்தில், இளங்கோவடிகள் அன்னையர் எழுவரை அறிமுகப்படுத்துகின்ற பொழுது பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**“அறுவர்க்கிளைய நங்கை, இறைவனை**
**ஆடல் கண்டருளிய அணங்கு, சூருடைக்**
**கானகம் உகந்த காளி, தாருகன்**
**பேருரங் கிழித்த பெண்”**

என்று காளியை நமக்கு விளக்குகின்றார். “தொன்மங்கள் வளர்ந்து கிளைத்த நிலையில், காளி எழுவர் அன்னையர் குழுவிலிருந்து விலகித் தனிப் பெருந்தெய்வமாகிறாள். அந்த வெற்றிடத்தை அப்பர் தம்முடைய பதிகத்தில் “சாமுண்டி சாமவேதம் கூத்தொடும் பாடவைத்தார்” என்று சாமுண்டியைக் காட்டுகிறார். எனவே, சாமுண்டி தலைகாட்டி அறுவருடன் இணைகிறாள்.” என்று நளினி தெரிவிக்கிறார்.

சோழப் பேரரசன் முதலாம் குலோத்துங்கன் கலிங்கத்தின் மீது போர்த்தொடுத்ததைப் பாடிய சயங்கொண்டார் தம்முடைய கலிங்கத்துப் பரணியில் கடவுள் வாழ்த்துப் பகுதியில் அன்னையர் எழுவரையும் அவர்களுடைய கொடிகளையும் இணைத்துப் பாடியுள்ளார்.

**“மேதி புள்ளலகை தோகை யேவணம் வேழம் என்ற கொடி ஏழுடைச்**
**சோதி மென்கொடிகள் ஏழின் ஏழின் ஏர்இருதுணைப் பதந் தொழ நினைத்துமே”**

என்கிறார்.

சோழ அவையில் வீற்றிருந்த கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் தாய் வழிபாட்டை தக்கயாகப்பரணியாகப் பாடினார் என்று கருதுகின்றனர். அவருடைய தக்காயாகப்பரணியில் அன்னையர் எழுவரையும் பின்வருமாறு பாடியுள்ளார்.

“எறிபடை விசயை யிசைகெழு தெய்வமகளிர்
எழுவரும் வெள்ளை முளரி யினிதுறை செல்வ மகளும்
மறிகடல் வையமகளு மலர்கெழு செய்ய திருவும்
வரவிரு மெல்லவுரகன் மணியணி பள்ளியருகே”

*என விவரிக்கிறார்.*

*சமய இலக்கியங்களில் சிறப்பானதாகக் கொண்டாடப் படும் திருமந்திரத்தில் திருமூலர் கன்னியர்களை எண்மர் என்று கூறுகிறார்.*

“பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேயோர்
ஆரியத் தாளுண்டங்கு எண்மர் கன்னியர்
பாரித்த பெண்கள் அறுபத்து நால்வரும்
சாரித்துச் சக்தியைத் தாங்கள் கண்டாரே.”

*என்றும்,*

“இருத்தினர் சக்திகள் அறுபத்து நால்வர்
இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மர்
இருந்தனர் சூழ எதிர்ச் சக்கரத்தே
இருந்த கரமிரு வில்லம்பு கொண்டே”

*என்றும் பாடியுள்ளார்.*

அவரே வராகியைப் போற்றும் முகத்தான்
“ஆன வராக முகத்தி பதத்தினள்
ஈன வராகம் இடிக்கும் முசலத்தோடு
ஏனை உழுபடை ஏந்திய வெண்ணகை
ஊனம் அறவுணர்ந் தாருளத் தோங்குமே.”

*என வழுத்தினார்.*

**வடமொழி இலக்கியங்கள்:** *மகாபாரதமும் அரிவம்சமும் புராணங்களும் பண்டைய காலத்தில் பலவகையான பெண் தெய்வங்கள் ஆரியரல்லாத சவரர், புலிந்தர், கிராதர் போன்றோரரால் வழிபடப்பட்டன. சிலவற்றில் சக்திகள் தம்முடைய துணைவருடன் காணப்பட்டாலும் பெரும் பான்மையானவை கன்னியர்களாகவே கருதப்பட்டனர். அரிவம்சம் தேவியை விந்தியாவசினி என்று கூறுகிறது. அவள் சவரர்களாலும் பார்பரர்களாலும் புலிந்தரர்களாலும் வழிபடப்படுகிறாள். விந்தியாவாசினியுடன் சேவல்கள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள், சிங்கங்கள் மற்றும் புலிகள் உடனிருந்தன. துர்கையின் பல வடிவங்கள் வேத சம்கிதங்களிலும் பிராமணங்களிலும் இடம் பெறவில்லை. சண்டியைப் பற்றிய புராணங்கள் பின்வருமாறு: 1. பிரம வைவார்த்த புராணம்,2. மார்கண்டேய புராணம், 3. தேவி பாகவத புராணம், 4. பிரகத்*

தர்ம புராணம், 5. தேவி புராணம், 6. காளிகா புராணம். சண்டியை திராவிட தெய்வம் என்று சோமநாத் மொகபத்யாய் கருதுகிறார்.

கன்னியர் எழுவரும் கன்னிகளா? பெண் தெய்வங்களை திருமூலர் கன்னியர் என்றே காட்டுகிறார். அதேபோல சிலப்பதிகார வேட்டுவரியில் கொற்றவை குமரி என்று பல இடங்களில் அழைக்கப்படுகிறாள். குமரி என்றாலே கன்னியாவாள். கன்னிப் பருவம் அளவற்ற பெரும் சக்தியைப் பெற்றது. கன்னிமைக் கற்புடைமையை விட திறமை வாய்ந்தது. கன்னியிடம் இதுவரையில் பயன்படாத திறன் வெளிப்படவில்லை. ஆகவே கன்னியை வழிபட்டால் பல அரும்பொருள்கள் கிடைக்கும். வெற்றியும் பெறலாம் என்ற நம்பிக்கையைப் பற்றி ஜியார்ஜிஸ் டுமிசில் சொல்லுகிறார்.(இர. பூங்குன்றன்). ஆகையால் அழிக்கும் குணம் கொண்ட அதிதி மற்றும் காசியப்பர் வழிவந்தவனான அந்தகாசூரனை அழிக்க முதலில் சிவன் தன்னுடைய வாயிலிருந்து வந்த தீயிலிருந்து யோகேஸ்வரியை அனுப்பினார். அதே போல பிரம்மா, முருகன், திருமால், வாராகர், இந்திரன், யமன் ஆகியோர் தங்களுடைய சக்திகளை அனுப்பினர். அந்தகாசூரனின் போரின் போது அவனுடைய குருதி தரையில் சிந்தியதால் பல அந்தகா சூரர்கள் தோன்றினர். இதைத் தடுக்க மேலே தெரிவித்த ஏழு ஆண்தெய்வங்கள் அனுப்பிய சக்திகள் போரின் போது அவனுடைய குருதியைக் குடித்ததால் அனைத்து சூரர்களும் மாண்டனர். ஆண் தெய்வங்கள் அனுப்பியவர்கள் அவர்களுடைய துணைவியர் அல்லர். சக்திகள் ஆவர். அவர்கள் கன்னியரே. மத்திய பிரதேசத்திலும் பிகார் மாநிலத்திலும் இக்கன்னியர் சிலைகளின் மடிகளில் குழந்தைகளை வைத்திருப்பதால் மாதாக்கள் என்று அழைக்கப்படும் வழக்கம் வந்திருக்கலாம். தமிழ்நாட்டில் இருக்கின்ற எழுவர் கன்னியர் கோயில்களைக் கன்னிக் கோயில்கள் என்றுதான் அழைக்கின்றனர். அதேபோல தமிழ்நாட்டில் வாழும் இருளர்கள் வணங்கும் தெய்வம் கன்னிகள் தான். பொது மக்களும் கன்னிக் கோயிலைத் தங்களுடைய குலதெய்வம் என்றும் அதனையும் வணங்கிவருகின்றனர்.

**சோழவரம் எழுவர் அன்னையர் சிலைகள்:** சோழவரத்தில் மூன்று வெவ்வேறு காலங்களில் செதுக்கப்பட்ட சிலைகள் காணப்படுகின்றன. அவை பல்லவ மன்னன் கம்பவர்மன் காலத்திலும், அவன் மறுவிய காலத்திற்கும் முதலாம் பராந்தக சோழன் ஆட்சித் தொடக்கத்திலுமாக இரண்டு குழு அன்னையர் எழுவர் சிலைகள் செதுக்கப்படுட்டுள்ளனர். பல்லவ மன்னன்

கம்ப வர்மனின் கீழ் ஆட்சி செய்த கங்க குறுநில மன்னன் பிரிதிவி கங்கரையர் துணைவியும் அரிகண்டகனின் மகளுமான நங்கை மானி என்பவள் சோழவரத்தில் ஒரு பிடாரி கோயில் கட்டினாள் என்று ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. இந்தச் செய்தியை அளிக்கும் கல்வெட்டு பிடாரி கோயிலின் வளாகத்தில் நடப்பட்டுள்ள சூலக்கல்லின் பின் புறத்தில் உள்ளது. திருச்சிராப்பள்ளி மாவட்டம், ஆலம்பாக்கம் எழுவர் கன்னியர் (எழுவர் தாய்கள்) கோயில் கல்வெட்டு வடக்கில் சப்தமாதிரிகள் என்று தெரிவிப்பது போல் சோழவரம் கன்னியர் (பிடாரி காளி) கோயில் தற்பொழுதுள்ள சிவன் கோயிலுக்கும் ஊருக்கும் வெளியில் வடக்கில் தனியே இருக்கிறது. இதையே தாராபுரம் வட்டத்தைச் சேர்ந்த பொன்வாடி என்ற ஊரில் இருக்கும் கொங்கு சோழர் கல்வெட்டு "கோட்டையின் வடக்கு வாயில் செல்வி" என்றழைப்பதும் ஆலம்பாக்கம் கல்வெட்டும் ஊருக்கு வடக்கில் இந்தக் கன்னியர் கோயில் தனியாக அமைந்திருப்பதையும் உறுதி செய்கிறது. இந்தத் தாய் தெய்வங்கள் சிவன் கோயிலின் முதல் சுற்றில் வடக்குப் பார்த்தவாறு அமைப்பது என்று காசியப்பரின் சில்ப சாஸ்திரம் கூறுகிறது. இந்நூல் தெரிவிக்கும் சிற்ப அமைதி காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. இந்த முறை பிற்காலச் சோழர் ஆட்சியில் தவறாது பின்பற்ற பட்டுள்ளது. எனினும் தனிக் கோயில்கள் சோழர் காலமான பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டில் தொடர்ந்திருந்தன என்பதற்கு சோழவரம், திருமலைச்சேரி, கீழ் மொணவூர், காப்பலூர், பழைய வாணியம்பாடி, காவேரிப்பாக்கம், வேலூர் வட்டத்தில் சதுப்பேரி, பெருங்காஞ்சி மற்றும் விளை போன்ற ஊர்களில் காணலாம்.

சோழவரத்தில் பல்லவர் காலத்தைச் சேர்ந்த சிலைகளில் மகேஸ்வரி, கௌமாரி மற்றும் வைணவி சிதைந்ததாலோ திருடு போனதாலோ இவைகளுக்குப் பதிலாக பொ.ஆ. 17 அல்லது 18ஆம் நூற்றாண்டுடிற்குப் பிறகு செதுக்கி வைத்து வழிபட்டுவருகின்றனர். எனவே, சோழவரத்தில் மூன்று காலக் கட்டங்களில் வடிக்கப்பட்ட சிலைகள் காணப்படுகின்றன. பல்லவர் காலத்தைச் சேர்ந்த அன்னையர் சிலைகள் கனமற்ற பலகை கற்களில் செதுக்கப்பட்டிருப்பதால் சிலைகளின் உருவங்கள் உருண்டையாக இல்லாமல் சற்று தட்டையாகச் செதுக்கப்பட்டிருகின்றன. எனினும் பல்லவர் காலத்து இருப்பில் உள்ள அன்னையர் சிலைகள் உயிரோட்டத்துடன் இருக்குமாறு செதுக்கப்பட்டிருக்கின்றன. சிலைகள் சாய்ந்து இலலிதாசனத்தில் அமர்ந்திருக்கின்றன. பீடங்களின் முன்

பக்கத்தில் அவ்வவ் அன்னையரின் வாகனங்கள் செதுக்கப் பட்டுள்ளன பிராமியின் சிலை இடுப்பிற்கு மேலே உடைந்து அதன் பகுதி காணப்படவில்லை. எனினும் பீடத்தில் அன்னம் காணப்படுவதால் அச்சிலையை பிராமி என்ற முடிவிற்கு வர ஏற்புடையதாக இருக்கிறது.

**சாமுண்டி:** சாமுண்டி பீடத்தில் வலது காலைத் தொங்கவிட்டுகொண்டு அமர்ந்திருக்கிறார். பெரிய முகம். தலையில் சடாபாரம் இருக்கிறது. காதுகளில் பெரிய வட்ட கம்மள்கள் அணிசெய்கின்றன. நான்கு கைகள். வலது பின் கை பெரிய சூலத்தைப் பிடித்திருக்கிறது. வலது முன் கை காக்கும் கையாகக் காணப்படுகிறது. இடது முன் கை தொடை மீது வைத்திருக்க பின் கை கபாலத்தைப் பிடித்திருக்கிறது. அனைத்துக் கைகளிலும் நான்கு நான்கு வளையல்கள் அணிந்திருக்கின்றன. குச பந்தத்திற்கு பட்டைகள் தோளிலிருந்து வருகின்றன. கீழாடை தொடையை மட்டும் மறைக்கிறது. பீடத்தில் வாகனம் இல்லை.

**பிராமி:** தற்காலத்தில் செய்யப்பட்டது. தலையில் கிரீட மகுடம். வலது கையில் பாசம். இடது கையில் உடுக்கை. மற்றது காத்தல். தொடை மீது. பீடத்தில் அன்னம் செதுக்கப்பட்டுள்ளதால் பிராமி என்ற முடிவிற்கு வரவேண்டியுள்ளது.

**கௌமாரி:** தற்காலச் சிலை. பீடத்தில் மயில் உருவம் உள்ளதால் கௌமாரி எனலாம்.

**வைணவி:** வைணவியும் தற்கால சிலை. இவருடைய ஆயுதங்கள் சரியாகச் செதுக்கப்பட்டுள்ளன. வாகனமும் உள்ளது.

**வராகி:** வராகி சிலை பீடத்தில் இலலிதாசனத்தில் அமர்ந்து வலது பக்கம் சாய்ந்திருக்கிறது. வராகியின் முகம், கைகள் ஆகியன தேய்ந்துள்ளன. தன்னுடைய முகத்தை இடது பக்கம் திருப்பியுள்ளது. ஒரு வாளை வலது முன் கையில் பிடித்திருக்கிறது. இடது பின் கையில் சக்தி போன்ற ஆயுதத்தைப் பிடித்திருக்கிறது. சிலை சிதைந்துள்ளதால் வலது பின் கை பெற்றுள்ள படை என்னவென்று தெரியவில்லை. வலது காதில் பத்ர குண்டலம் தொங்குகிறது. கு.ச பந்தத்திற்குத் தோளிலிருந்து பட்டைகள் வருகின்றன. கழுத்தில் எளிய ஆரம் அணி செய்கிறது. கீழ் ஆடை கணுக்கால் வரைச் செல்லுகிறது.

**இந்திராணி:** இந்திராணியும் இலலிதாசனத்தில் அமர்ந்து வலது பக்கம் சாய்ந்திருக்கிறார். இரண்டு; கைகள் உள்ளன. வலது காலில் காப்புத் தெரிகிறது. சிற்றிடையின் வலது பக்கத்தில் பூணூல் வலது கையின் மீது ஏறுவது தெரிகிறது.

**கணேசர்:** கணேசரும் முன்பு அறிமுகப்படுத்தப்பட்ட சிலைகளைப் போல் வலது பக்கம் சாய்ந்து அமர்ந்துள்ளார். தலையில் கரண்ட மகுடம் அதிகம் சிதையாமல் இருக்கின்றது. ஆனால் பீடம் கைகள் எல்லாம் சிதைந்துள்ளன. நான்குகைகள். ஆயுதங்கள் தெளிவாகத் தெரியவில்லை. சன்னமான தும்பிக்கை வலது பக்கமாக வளைந்திருக்கிறது. உடைந்த தந்தத்தை வலது முன் கைப் பிடித்திருக்கிறது.

**சாமுண்டி:** சாமுண்டி பீடத்தில் அமர்ந்து கொண்டு ஒரு வலது கையில் நெடிய சூலத்தைப் பிடித்து அந்தகாசூரனைக் குத்திக் கொல்வது போன்று செதுக்கப்பட்டிருக்கிறது. அந்தகாசூரன் பீடத்தில் கிடையாகப் படுத்துக் கிடக்கிறான். வேறு வலது கையில் பரசு போன்ற படையைப் பிடித்திறார். மற்ற கைகளில் உள்ள படைக்கலங்கள் சிதைந்துள்ளன. ஓவ்வொரு கையிலும் முறையே மூன்று வளையல்கள் அணிசெய்கின்றன. சடை மகுடம், முகம், மார்பு ஆகியன முற்றிலும் சிதைந்தன. இந்தக் குழுவில் இரண்டு சாமுண்டி சிலைகள் இடம் பெற்றுள்ளன.

இவ்வூரின் சிவன் கோயில் வளாகத்தில ஆறு அன்னையர் சிலைகள் மட்டும் உள்ளன. மகேசுவரி சிலை இல்லை. இங்குள்ள வீரபத்திரரும் ஆறு அன்னையர்களின் உருவங்கள் தனித்தனிக் கற்பலகைகளில் செதுக்கப்பட்டிருப்பினும் உடல் அமைப்பு உருண்டையாகத் திரட்சியாகச் செதுக்கப்பட்டிருக்கின்றது. எனினும் உடலின் பாகங்கள் சற்றுத் தட்டையாகச் சிற்பி காட்டியுள்ளார். அனைத்து அன்னையர்களும் வீரபத்திரரும் இலலிதாசனத்தில் அமர்ந்துள்ளனர். பீடங்களின் முன் பக்கங்களில் வாகனங்கள் செதுக்கப்படவில்லை. இங்குள்ள அறுவருடைய வலது கைகளும் ஒரே மாதிரியாகக் காக்கும் நிலையில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இடதுகைகள் வழக்கமாக இடது தொடை மீது இருத்தப்பட்டுள்ளன. இங்குள்ள அன்னையர்களின் இடுப்பில் இடுப்புப் பட்டை முன் பக்கத்தில் முடிச்சிட்டு அதன் முனைகள் தொங்குகின்றன. அனைவருடைய கைகளிலும் இரண்டிரண்டு வளையல்கள் உள்ளன. சாமுண்டியின் மேற்கைகளில் மட்டும் பாம்புகள் கேயுரமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. அதேபோல குச பந்தமாக பாம்பு காணப்படுகின்றது. சாமுண்டிசுவரியின் முண்ட மாலைத் தெளிவாகத் தெரிகிறது. வீரபத்திரருடைய முப்புரி நூல் மட்டும் வலது கையின் மீது ஏறிச் செல்லுகிறது. மற்ற சிலைகளில் அவ்வாறல்ல. அன்னையர்களின் இடுப்புகள் சிறியனவாகக் காட்டப்பட்டுள்ளன. அனைவருக்கும் மென்மையான குச பந்தங்கள் உள்ளன.

**வீரபத்திரர்:** வீரபத்திரருடைய சடாபாரம் தெளிவாகச் செதுக்கப்படவில்லை. காதணியும் தெளிவில்லை. கழுத்தில் கலைநுட்பமற்ற பெரிய கழுத்தணியுள்ளது. உதரபந்தம் காணப்படுகிறது. கேயுரங்களும் உள்ளன. வலது கையில் பெரிய தடியைப் பெற்று கம்பிரமான தோற்றத்தில் காணப்படுகிறார்.

**சாமுண்டி:** சாமுண்டியின் தலையை சடைகள் அலங்கரிப்பதற்காக விரிந்த இடம் உள்ளது. ஆனால் சடைகள் விளக்கமாக செதுக்கப்படவில்லை. தலையின் உச்சியில் ஒரு மண்டை ஓடும் அதன் இரண்டுப் பக்கங்களிலும் பாம்புகளும் உள்ளன. காதுகளில் பத்ர குண்டலமும் ஆந்தைக் குண்டலமும் அழகு செய்கின்றன. சாமுண்டியின் வாயின் ஓரங்களில் கோரைப்பற்கள் மிளிர்கின்றன. பின் வலது கையில் பாசமும் இடது கையில் கபாலமும் ஏந்தப்பட்டுள்ளன. முண்ட மாலையும் பாம்புக்குச பந்தமும் தெளிவாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. பின் வலது கை பாசத்தையும் பின் இடது கை பெரிய கபாலத்தையும் பெற்றிருக்கின்றன.

**பிராமி:** பிராமியின் பின் வலது கையில் சுவடி தெளிவாகக் காட்டப்படவில்லை. ஆனால் இடது கை குண்டிகையை சிம்மகரன முத்திரையில் தாங்கியிருக்கிறது. தலையை ஜடா மகுடம் அலங்கரிக்கிறது.

**வைணவி:** தலையில் கிரீட மகுடமும் காதுகளில் மகர குண்டலங்களும் எழிலூட்டுகின்றன. பின் கைகள் சக்கரத்தையும் சங்கையும் கர்த்தரி முக முத்திரையில் பிடித்துள்ளன. வைணவியின் கைகளில் மூன்று மூன்று வளையல்கள் இருக்கின்றன.

**இந்திராணி:** முந்தைய குழுவில் இடம் பெற்றுள்ள இந்திராணி சிலையைப் போன்று இந்தச் சிலைக்கும் இரண்டு; கைகள் இருக்கின்றன.

**கௌமாரி:** கௌமாரிக்கு சன்னவீரம் காட்டப்பட்டுள்ளது. கௌமாரிக்கு உரிய அழகிய சிறிய கிரீடம் தலையில் இருக்கிறது. சன்னவீரம் தெளிவாக செதுக்கப்பட்டிருக்கிறது. காதுகளில் பத்ர குண்டலங்கள் அலங்கரிக்கின்றன. பின் இரண்டு கைகளிலும் பாசம் காணப்படுகின்றன.

**வராகி:** வராகி சிலை சாய்வாக அமர்ந்து தலையில் சிறிய கிரீட மகுடம் எழிலுடன் உள்ளது. பின் கைகளில் சக்கரமும் சங்கும் பாங்குடன் திகழ்கின்றன. ·பொதுவாக அனைத்து சிலைகளின் இடைகள் சிறியனவாகவும் வயிற்றுப் பகுதியில் தசை மடிப்புகள் கோடிட்டும் காட்டப்பட்டுள்ளன. இந்தச் செதுக்கல் வகை, சிலைகளின் அழகை மேன்மைபடுத்துகின்றது எனலாம்.

சிலைகளின் முகங்கள் சற்றே நீளவாட்டில் இருக்கின்றன. இவை அமைதி தவழும் முகங்கள்.

**வேலூர் அரசு அருங்காட்சியகத்தில் சிலைகள்:** வேலூர் நகருக்கு மேற்கில் முள்ளிப்பாளையம் என்ற ஊரின் தேசிய நெடுஞ் சாலையில் இருந்து கௌமாரி மற்றும் சாமுண்டி கற்சிலைகள் வேலூர் அரசுஅருங்காட்சியகத்திற்குக் கொண்டு வரப்பட்டன. இந்த இரண்டுச் சிலைகளும் பச்சை கருங்கல்லில் புடைப்பாகச் செதுக்கப்பட்டவை.

**கௌமாரி:** கௌமாரி தன்னுடைய இடது காலை தொங்கவிட்டு வலது காலை பீடத்தின் மீது மடக்கி வைத்திருக்கிறார். சிலையின் பலகைக்கல் கௌமாரியின் இடுப்பிற்கு மேல் வட்டமாகக் காண்பிக்கப்பட்டுள்ளது. அந்த வட்டத்தின் உள்ளேயே தலையைச் சுற்றிலும் ஒளி வட்டம் வடிக்கப்பட்டிருக்கிறது. சிலையின் கிரீடம், முகம் மற்றும் வலது முன் கை சிதைந்துள்ளன. காதுகளில் மகர குண்டலங்கள் தொங்குகின்றன. வலது பின் கை சக்தியையும் இடது பின் கை வச்சிரத்தையும் இடது தொடை மீதுள்ள இடது முன் கை வட்டமான பொருளையும் பெற்றுள்ளன. கழுத்தில் பட்டையான ஆரம் அணி செய்கிறது. வயிற்றுப் பகுதியில் வயிற்றுக் கட்டு உள்ளதே தவிர சன்னவீரம் இல்லை. கீழ் ஆடையை பட்டைத் துணியால் கட்டப்பட்டு அவற்றின் முனைகள் பீடத்தின் மேல் வீழ்ந்து கிடக்கின்றன. பீடத்தின் முன் பக்கத்தில் மயில் கோட்டுருவமாகத் தீட்டியுள்ளனர். மயிலின் வாயின் அருகில் “பூமி” என்ற பொறிப்பு உள்ளது. “வைரி” என்ற பொறிப்பும் காணப்பட்டது. ஆனால் தற்பொழுது சிலையின் பீடத்தை சிமெண்ட் கொண்டு பூசியதால் “பூமி” என்ற சொல் மட்டும் நமக்குத் தெரிகிறது. இந்தப் பொறிப்பின் எழுத்தமைதியையும் சிலையின் அமைப்பையும் நோக்கினால் இந்தச் சிலை பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டில் செதுக்கப்பட்டிருக்கலாம் என்ற கருத்திற்கு வரமுடிகிறது.

**சாமுண்டி:** இந்தச் சிலையும் ஒரு சாதாரண பீடத்தில் அமர்ந்து கொண்டு வலது காலை மடக்கி பீடத்தில் வைத்துக் கொண்டு இடது கால் தொங்குகிறது. தலையில் சடைகள் செதுக்கப்பட்டுள்ளன. முன் பக்கத்தில் பாம்பு தலையில் கட்டப்பட்டிருப்பது தெளிவாகத் தெரியவில்லை. தலையைச் சுற்றிலும் சுடர் முடி காட்டப்பட்டிருக்கிறது. சுடர் முடியின் சிறு பகுதியும் மூக்கும் காக்கும் கையும் மார்பகங்களும் சிதைந்துள்ளன. பின் கைகளில் வலதில் உடுக்கையும் இடதில் பாம்பும் பிடித்திருக்கின்றன. இடது தொடை மீதிருக்கும் இடது

முன் கையில் கபாலம் தெரிகிறது. கழுத்தில் வட்டமான ஆரம் அலங்கரிக்கிறது. மார்பகங்கள் ஒரு பாம்பால் கட்டப் பட்டிருக் கின்றன. சன்னவீரம் உள்ளது. பாம்புகள் தோள் வளையாகத் திகழ்கின்றன. கீழ் ஆடையைக் கட்டிய துணிப்பட்டையின் முனை மடித்த கால் மீது தொங்குவது இயல்பாகக் காணப்படுகிறது. கலைப்பாணியை நோக்கினால் இந்தச் சிலையும் பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கூறலாம். இரண்டுச் சிலைகளும் சற்று சிதைந்திருப்பினும் எழில் மிக்கவை.

**பெருங்காஞ்சி:** முதலில் கணேசர், இந்திராணி, தொடர்ந்து கௌமாரி, வராகி, வைணவி, மகேஸ்வரி, பிராமி, சாமுண்டி, தட்சணாமூர்த்தி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். அமர்ந்திருக்கிற அனைத்து அன்னையர்களும் தட்சிணாமூர்த்தி சிலைகளும் வலது கீழ்க்கைகள் காக்கும் கையாகவும் இடது முன் கைகள் தொடை மீதும் வைத்திருக்கின்றன. சாமுண்டியும் தட்சிணாமூர்த்தியும் தவிர மற்றவர்கள் மூன்று திரி கொண்ட பூணூலும் குச பந்தமும் அணிந்திருக்கின்றனர். கீழாடை சாதாரணமாகக் கட்டப்பட்டுள்ளன. பாம்பு போன்ற தோள்வளைகள் இருக்கின்றன. கைகளுக்கு வளையல்கள் இரண்டிரண்டு அணியப்பட்டுள்ளன.

**வீரபத்திரர்:** வீரபத்திரர் சிலை புடைப்பான சிலை என்றாலும் தலை அலங்காரம் உருண்டையானது. தலையின் சடைகள் பின் பக்கம் தள்ளப்பட்டிருக்கின்றன. முகம் மிகவும் தேய்ந்திருக்கிறது. காதுகளில் பெரிய மகர குண்டலங்கள் கழுத்தில் எளிய அணி உள்ளன. பட்டையான புணூல் தட்டையான உடல் மேல் செல்லுகிறது. வலது முன் கை உடைந்திருக்கிறது. பின் கை சூலத்தைத் தாங்கியுள்ளது. இடது முன் கை தொடை மீது இருக்க பின் கை மழுவை நளினமாகப் பெற்றிருக்கிறது.

**கணேசர்:** கணேசர் சிலையில் சிறிய கரண்ட மகுடம் உள்ளது. மகுடத்தின் முன் பக்கத்தில் பட்டத்தில் இருந்து பொற்பூ நெற்றியில் தொங்குகிறது. தும்பிக்கை வலது பக்கம் திரும்பியிருக்கிறது. அதன் முனையில் ஒரு மோதகம் உள்ளது. வலது கீழ்க்கையில் ஒரு மோதகம் இருக்கிறது. பின் கைகளில் பாசமும் அங்குசமும் காணப்படுகின்றன. தோள்வளை பாம்பு தோற்றமுடையது. பட்டையான பூணூல் உதர பந்தத்தின் மேல் செல்லுகிறது.

**இந்திராணி:** தற்பொழுது இந்த எழுவர் அன்னையர் குழுவில் இந்திராணி முதலிடம் பெறுகிறார். இந்தச் சிலை இரண்டாக உடைந்து பின்னர் ஒட்டியுள்ளனர். காதுகளில் மகர

குண்டலங்கள் தொங்குகின்றன. இவருக்கு இரண்டுக் கைகள் இருக்கின்றன. கைகளில் படைகள் இல்லை.

**கௌமாரி:** இவருக்கு நான்கு கைகள் இருக்கின்றன. மேற்கைகளில் ஆயுதங்கள் இருக்கின்றன. வலது கீழ்க் கை காக்கும் நிலையிலும் இடது கை தொடை மீதும் உள்ளன. காதுகளில் பத்ர குண்டலங்கள் காணப்படுகின்றன.

**வராகி:** வராகி சிலையின் மேல் கைகளில் படைகள் காணப்படுகின்றன. முகம் தெளிவாகத் தோன்றுகிறது.

**வைணவி:** வைணவி நேர்க் கொண்ட பார்வையுடன் தம்முடைய மேல் கைகளில் ஆயுதங்களை முஸ்டி முத்திரையில் பெற்றுள்ளார்.

**மகேஸ்வரி:** மகேஸ்வரி வலது மேல் கையில் அக்க மாலையையும் இடது கையில் பாம்பையும் பற்றியுள்ளார்.

**பிராமி:** பிராமியின் பின் கைகளில் அக்க மாலையும் குண்டிகையும் முஸ்டி முத்திரையில் உள்ளன.

**சாமுண்டி:** விரிசடையாகத் தோன்றுகிறார். காதுகளில் பத்ர குண்டலங்கள் தொங்குகின்றன. வலது மேல் கையில் சூலமும் இடது கையில் கபாலமும் இருக்கின்றன.

சோழவரம் சிவன் கோயில் உள்ள எழுவர் அன்னையர் கற்சிலைகளும் பெருங்காஞ்சி எழுவர் அன்னையர் கற்சிலைகளும் தோற்றத்தில் ஒரே மாதிரியாக விளங்குகின்றன. இந்த இரண்டு ஊர் சிலைகளும் பிற்காலப் பல்லவர்கள் காலத்தில் படைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**காவேரிப்பாக்கம்:** காவேரிப்பாக்கத்தில் மூன்று எழுவர் அன்னையர் கோயில்கள் இருக்கின்றன. இவற்றுள் முக்கியமானது மாரியம்மன் கோயில் தெருவில் அமைந்துள்ள செல்லியம்மன் கோயிலாகும். இங்கு எழுவருடன் கணேசர் மற்றும் தட்சிணாமூர்த்தி சிலைகள் இடம் பெற்றுள்ளன. இவை முற்காலச் சோழர் பாணியில் இருக்கின்றன. அன்னையர்களின் பீடத்தில் அவரவர் வாகனங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. மற்ற இரண்டு சிற்பத்தொகுதிகள் ஏரிக் கரையின் கீழ்ப் பக்கத்தில் இருக்கின்றன. இலலிதாசனத்தில் அன்னையர்கள் அமரும் நிலை பிற்கால் வழக்காக மாறியதை தியோடர் பாஸ்கரன் அவர்கள் தம்முடைய பெருங்காஞ்சி கட்டுரையில் விளக்கியுள்ளார்.

**வேலூர் இந்தியத் தொல்லியல் அருங்காட்சியகம்:** இந்த அருங்காட்சியகத்தில் வந்தவாசி வட்டத்தில் இருக்கின்ற சீயமங்கலத்தில் இருந்து எழுவர் அன்னையர் கற்சிலைகளைச்

சேகரித்துக் காட்சியில் வைத்திருக்கின்றனர். அவற்றின் கலைப் பாணியைப் பார்த்தால் பிற்காலப் பல்லவ ஆட்சியில் வடிக்கப்பட்டவையாகத் தெரிகின்றன.

**கணேசர்:** இந்தக் குழுவில் முதலில் இடம்பெறுபவர் கணேசர் சிலை. இவர் தாமரை மலர் மிசை மகாலீலாசனத்தில் அமர்ந்திருக்கிறார். தலையில் கிரீட மகுடம் அணிந்திருக்கிறார். கண்கள் பெரியனவாகக் காட்;டப்பட்டுள்ளன. தும்பிக்கை வலம்புரியாக நெளிந்து வயிற்றுப் பகுதியில் முடிகிறது. தும்பிக்கையின் மீது கோடுகள் வரிவரியாகச் செதுக்கப்பட்டுள்ளன. கழுத்தில் உள்ள பட்டையான ஆரம் கற்கள் பதிக்கபட்டது. மூன்றுத் திரி பூணூல் தொப்பை வயிற்று மேல் சென்று பின் பக்கம் செல்லுகிறது. எளிமையான வயிற்றை உதர பந்தம் கட்டுகிறது. பின் வலது கை உத்திராட்ச மாலையையும் பின் இடது கை தாமரை மொட்டையும் முஸ்டி முத்திரையில் பற்றியுள்ளன. முன் வலது கை வலது கால் முட்டியின் மீது வைத்திருக்கிறது. இடது கை இடது தொடை மீது வைத்துக் கொண்டு இனிப்பு உருண்டையை ஏந்தியுள்ளது. இந்தச் சிற்பம் ஒரு கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.

**மகேஸ்வரி:** சீயமங்கலம் அன்னையர் சிலைகள் இலலிதாசனத்தில் அமர்ந்திருக்கின்றனர். அனைவருக்கும் நான்கு கைகள். இந்திராணிக்கு மட்டும் இரண்டுக் கைகள். தலையில் உயரமான ஜடாமகுடம் அழகுடன் செய்யப்பட்டிருக்கிறது. பின் கைகள் இரண்டும் மேல் நோக்கியுள்ளன. ஆனால் ஆயுதங்கள் கைகளுக்கு மேலே செதுக்கியுள்ளனர். ஆனால் கைகள் மூடியுள்ளன. கழுத்தில் பட்டை ஆரம் அணிந்திருக்கிறார். மார்பகங்கள் கழுத்துப்பட்டையுடன் சேர்ந்த மார்புக் கச்சையால் கட்டப்பட்டிருக்கின்றன. இந்தப் பட்டையில் அலங்காரம் செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். பூணூல் சன்னமாகச் செல்லுகிறது. சீயமங்கலத்து அன்னையர்களின் இடை சிறியன. அதேவேளையில் முதல் ஐந்து சிலைகளின் வயிற்றுப் பகுதியில் மூன்றுக் கோடுகள் செதுக்கப்பட்டு பெண்மைக்கு அழகு செய்கின்றன. முதல் ஆறு சிலைகளின் முன் கைகள் முறையே காத்தல் நிலையிலும் தொடை மீதும் இருக்கின்றன. அன்னையர்களின் கீழ் ஆடையை ஒரு துணிப்பட்டையைக் கொண்டு கட்டிள்ளனர். முடிச்சியின் மேல் ஒரு சிறிய பூ அலங்காரம் தெரிகிறது. முடிச்சியின் முனைகளும் வட்டமாக வரும் துணியும் மடித்த கால்களின் மேல் விழுகின்றன. இந்த அழகு அனைத்துச் சிலைகளிலும் இருக்கின்றது. ஆனால் சாமுண்டி சிலையில் மட்டும் முடிச்சியின் மேலேயே துணியின்

முனைகள் வந்து கால் மீது விழுக்கிறது. மகேசுவரியின் பீடத்தில் வாகனம் செதுக்கப்படவில்லை.

**வைணவி:** தலையில் உயரமான கிரீட மகுடம் உள்ளது. கர்த்தரி முகத்தில் ஆயுதங்கள் இருப்பது போல் பின் கைகள் செதுக்கப்பட்டுள்ளன. சீயமங்கலத்தின் அனைத்து சிலைகளுக்கும் முட்டை வடிவ முகங்கள். அனைத்து சிலைகளின் கைகளிலும் மூன்று மூன்று வளையல்கள் அணியப்பட்டுள்ளன. அவ்வாறே கேயுரங்களும் புஜங்களில் எழிலூட்டுகின்றன. இந்தக் அன்னையின் பீடத்தில் வாகனம் தெளிவாகத் தெரியவில்லை.

பிராமி: இந்தக் குழுவில் அனைத்து அன்னையர்களுடைய தலையணிகளும் நெடியன. அதே போல பிராமியின் தலையணியும் உயரமானது. பின் கைகள் ஆயதங்களை கர்த்தரி முகத்தில் பெறுகின்றன. வலது ஆயுதம் தாழம்பூப் போலத் தெரிகிறது. இடதில் குண்டிகை. காதுகளில் மகரகுண்டலங்கள் தொங்குகின்றன. எளிய பூணூல் உடலில் அணியப்பட்டுள்ளது. வாகனம் தெளிவாகக் காணவில்லை.

கௌமாரி: சாந்த முகம். தலையணியின் கீழ்ப்பாகம் கௌமாரிக்கே உரிய எடுப்பான அல்லது உருண்டையான வேலைபாடு செய்யப்பட்டுள்ளது. பின் கைகள் சிம்மகரனத்தில் இருக்க சக்தியும் சூலமும் தனித்திருக்கின்றன. காதில் பூக்கம்மள்கள் இருக்கின்றன. இரண்டுத் தோள்கள் மீதும் சிறிய பூமாலைகள் உருளுகின்றன. சன்னவீரம் தெளிவாக வயிற்றுப் பகுதியில் செல்வதை நோக்கலாம். இவருடைய பீடத்தில் உள்ள மயில் மிகைபடுத்தி செதுக்கியுள்ளனர்.

வராகி: வராகியின் வலது பின் கை சிம்மகரனத்தில் இருக்க வாள் மேலே இருக்கிறது. இடது பின் கை பாசத்தை பற்றியிருப்பதைத் தெளிவாகச் செதுக்கியுள்ளனர். பீடத்தில் இவருடைய வாகனம் தெளிவாகத் தெரியவில்லை.

இந்திராணி: இந்திராணியின் தலை உடைந்துவிட்டது. தலைக்கு வலது பக்கத்தில் சக்தியின் பகுதி தெரிகிறது. கல் பதித்த பட்டையான பெரிய ஆரம் மார்பகங்களுக்கு மேல் விழுந்திருப்பதைக் காணலாம். இவருடைய பீடம் வாகனமான யானையைப் பெற்றிருக்கிறது.

சாமுண்டி: சாமுண்டியின் சிலை இடுப்பிற்கு மேல் உடைந்துள்ளது. பீடத்தில் வாகனம் வடிக்கக் காணோம்.

தட்சிணாமூர்த்தி: பீடத்தில் இடுப்பிற்கு மேல் உடல் நேராக நோக்க கால்களை இடது பக்கமாகத் திருப்பி இராசலீலாசனத்தில் அமர்ந்திருக்கிறார். தலையில் ஜடாபாரம் வட்டமாகச் செதுக்கிக்

காட்டப்பட்டுள்ளது. பின் கைகள் சிம்மகரனத்தில் இருக்க வலதில் ஒரு பூவும் இடதில் மழுவும் தனித்தனியே உள்ளன. வலது காதில் பெரிய பத்ர குண்டலம் இருக்க இடது காதில் சுண்ணாம்பு மறைத்திருப்பதால் தெளிவாகத் தெரியவில்லை. வலது முன் கை உத்ராட்ச மாலையை வைத்துக் கொண்டு இடுப்பில் தங்கியிருக்கிறது. இடது காலில் காப்பு நெளிவாக இருக்கிறது. எளிய கழுத்தணியும் பூணூலும் யோக பட்டமும் இருக்கின்றன.

**மேல்பாடி:** மேல்பாடிக் குழுவில் வீரபத்திரன் முதல் கணேசர் வரை மொத்த சிலைகளும் மேல்பாடி சோமநாதீசுரர் கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் தெற்குச் சுவர் ஓரத்தில் உள்ள அனைத்துச் சிலைகளும் புடைப்பாகச் செதுக்கப்பட்டவை. சாதாரண பீடத்தில் தனித்தனியாக அமர்ந்து இலலிதாசனத்தில் காட்சித் தருகின்றனர். ஒவ்வொருவருடைய தொங்கும் காலுக்கு சிறிய தாமரைப் பீடம் இதழ்கள் தெரியுமாறோ இதழ்களின்றியோ செதுக்கியுள்ளனர். ஆனால் கடைசியாக இருக்கும் கணேசர் உருண்டையாக செதுக்கியிருப்பது மட்டுமல்ல தொங்கும் காலுக்கு சிறிய பீடம் இல்லை. வீரபத்திரரைத் தவிர்த்து மற்றவர் களுக்கு அவரவர் பீடத்தில் அவரவர் வாகனம் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது.

**வீரபத்திரர்:** புராணங்களில் அன்னையர் எழுவரின் குழுவில் முதலில் வீரபத்திரர் சிலை இடம் பெறுகிறது. இவருக்குச் சிரித்த முகம். தலையில் சடை மகுடம். மகுடத்தின் முன் பக்கத்தில் பெரிய வட்டமான அழகிய பூவேலைப்பாடு தென்படுகிறது. நான்கு கைகளிலும் படைகள். பின் கைகளில் வலதில் மழுவும் இடதில் சூலமும் கர்த்தரி முகத்தில் தங்கியுள்ளன. காதுகளில் தெளிவற்ற குண்டலங்கள் தொங்குகின்றன.

கழுத்தை அணைத்தவாறு உருத்திராட்ச மாலையும் அதனை அடுத்து வேலைப்பாடற்ற பெரிய சிறிய இரண்டு அணிகள் இருக்கின்றன. பட்டையான பூணூல் மார்பகத்தில் செல்லுகிறது. ஊதரபந்தம் உண்டு. கீழ் வலது கை பாசத்தை ஏந்தியிருக்க இடது வெட்டப்பட்ட தலையைப் பற்றியிருக்கிறது. இடுப்பாடை எளிமையானது.

**பிராமி:** பிராமியின் பின் கைகளில் கர்த்தரி முகத்தில் முறையே உத்ராட்ச மாலையும் கூசாவும் இடம்பெற்றுள்ளன. காதுகளை மகர குண்டலங்கள் அணிசெய்ய கழுத்தில் பட்டையான ஆரம் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இவருடைய கீழாடை காலின் கணுக்கால்கள் வரை மறைக்கிறது. இதே அளவில் அனைவரின் கீழ் ஆடைகள் கால்களை மறைக்கின்றன.. பீடத்தில் வாகனம் அன்னம் உயிரோட்டத்தில் நிற்கிறது.

**மகேஸ்வரி:** சடாமகுடம் மணிகளுடன் நன்கு அலங்கரிக்கப்பட்டதாகும். பின் கைகள் மழுவையும் சூலத்தையும் கர்த்தரி முக முத்திரையில் பெற்றுள்ளன. எளிய பூணூல் நெளிந்து செல்லுவது அழகு. மகேஸ்வரிக்கு உரிய மகர குண்டலமும் பத்ர குண்டலமும் காதுகளில் தொங்க காணலாம். பீடத்தில் நந்தி இருக்கிறது.

**கௌமாரி:** கௌமாரிக்கே உரிய மகுடம் தலையில் இருக்க சன்னவீரம் இடுப்பில் புரள காதுகளில் அகன்ற கம்மள்கள் அணி செய்ய அவள் புன்னகையுடன் காணப்படுகிறாள். பின் கைகளில் வச்சரமும் சக்தியும் கர்த்தரி முக முத்தரையில் திகழ்கின்றன. கௌமாரியின் பீடத்தில் மயில் இடது பக்கம் பார்க்கிறது.

**வைணவி:** திருமாலுக்குரிய கிரிட மகுடத்தைத் தலையில் அணிந்திருக்கிறாள். கர்த்தரி முக முத்திரையில் பின் கைகளில் சக்கரமும் சங்கும் இடம்பெற்றுள்ளன. மகர குண்டலங்களை காதுகளில் காணலாம். பீடத்தில் கருடன் வணங்கும் தன்மையில் அமர்ந்திருக்கிறான்.

**வராகி:** வராகியின் பின் கைகளில் வாளும் பாசமும் கர்த்தரி முக முத்திரையில் விளங்குகின்றன. சன்னவீரம் தெளிவாகச் செல்லுகிறது. பீடத்தில் வராகியின் வாகனம் காண்டா மிருகம் இருக்கிறது. கேயுரங்கள் வனப்புடையவை.

**இந்திராணி:** இங்கு இந்திராணிக்கு நான்கு கைகள். பின் கைகளில் சக்தியும் வச்சிரமும் கர்த்தரி முக முத்திரையில் இருக்கின்றன. இந்திராணிக்கும் சன்னவீரம் வயிற்றுப் பகுதியில் தெரிகிறது. அதன் இடையில் ஒரு சுங்கு தொங்குகிறது. இந்திராணியின் வாகனம் யானை இடது பக்கம் பார்க்கிறது.

**சாமுண்டி:** தலையில் சுடர் முடி நடுவில் சிறிய கபாலம். சுருக்கிய நெற்றி. நெற்றியின் நடுவில் நெற்றிக்கண். வலது காதில் பிணக்குண்டலம் தொங்குகிறது. பின் கைகளில் உடுக்கையும் சூலமும் கர்த்தரிமுக முத்திரையில் தலைக்கு இரண்டுப் பக்கங்களிலும் தோற்றமளிக்கின்றன. கோபம் கொண்டவளாக இருப்பினும் முகத்தில் அருள் தன்மை ஒளி வீசுகிறது. பாம்பு மார்புக் கச்சையும் முண்ட மாலையும் தெளிவாகத் தெரிகின்றன. பிணம் வாகனமாக இருப்பதை பீடத்தில் காணலாம்.

**கணேசர்:** இடமாக தும்பிக்கை திரும்பியவர். பின் கைகளில் மழுவும் உத்ராட்ச மாலையும் முஸ்டி முத்திரையில் பெற்றிருக்க முன் கைகள் உடைந்த தந்தத்தையும் இனிப்பு உருண்டையையும்

பெற்றிருக்கின்றன. வாகனமான பெருச்சாளிக்கு ஆடை அலங்காரம் செய்யப்பட்டிருப்பதைக்காணலாம்.

**ஒழுகூர்:** சிவன் கோயில் வளாகத்தில் வடக்குப் பார்த்தவாறு கோயிலின் தெற்கில் ஒரு சாதாரண மேடையில் அமர்த்தப்பட்டது எழுவர் மாதாக்கள் கோயிலாகும். இந்தத் தொகுதியில் பிராமியும் மகேசுவரியும் கணேசரும் இல்லை. இங்குள்ளவை அனைத்தும் புடைப்புச் சிற்பங்களே. மாதாக்கள் இலலிதாசனத்தில் அமர்ந்திருக்கின்றனர். இவர்கள் யாருக்கும் மார்புக் கச்சை இல்லை. கீழாடை இவர்களின் கணுக்கால்கள் வரை சென்று மறைக்கின்றது. முன் கைகளில் வலது காக்கும் நிலையிலும் இடது வழங்கும் முறையிலும் செதுக்கப்பட்டிருக்கின்றன. மார்பகங்கள் சற்றுச் சரிந்தும் மென்மையாகவும் காட்டப்பட்டிருக்கின்றன. யாருக்கும் வாகனம் காட்டவில்லை.

**தட்சிணாமூர்த்தி:** முதலில் தட்சிணாமூர்த்தி உட்குடிகாசனத்தில் அமர்ந்திருக்கிறார். இவருடைய தலையில் சுருள் முடிகள் சடாபாரமாக விளங்குகின்றன. நடுவில் கபாலம் உள்ளது. வலது பின் கையில் உத்ராட்ச மாலையைப் பிடித்திருக்கிறார். வலது முன் கையில் மழுவை ஏந்தியுள்ளார். இடது பின் கையின் விரல்கள் சிதைந்துள்ளதால் படைக்கலம் என்ன என்று தெரியவில்லை. சதுர முகத்தில் ஆழ்ந்த சிந்தனைத் தெரிகிறது. வளமான கழுத்தணிகள் காட்சிகொடுக்கின்றன. வலது காதில் மகர குண்டலமும் இடது காதில் பத்ர குண்டலமும் தொங்குகின்றன. இடைக்கச்சைக்கு பூட்ட கொக்கி இல்லை. இடுப்பணியில் உள்ள முத்து சரங்கள் தொடை மீது வரிசையாக விழுகின்றன. கால்களில் காப்புகள் உயர்வை தருகின்றன.

**கௌமாரி:** தலையில் அணி செய்யும் தலையணியைக் கொண்டுதான் கௌமாரி என்று அறிந்து கொள்ள முடியும். சன்னவீரம் இல்லை. பின் கைகளில் உத்ராட்ச மாலையும் குண்டிகையும் கர்த்தரி முக முத்திரையில் இருக்கின்றன. கழுத்தில் இருக்கும் ஆரம் எளிமையானது. ஆனால் வண்ணக்கற்களுடையது.

வராகி: வலது பின் கை வாளைப் பிடித்திருக்கிறது. இடது கை சக்தியைப் பற்றியுள்ளது. வயிற்றில் சன்னவீரம காணப்படுகிறது.

**சாமுண்டி:** சாமுண்டிக்கு தலையில் சுடர் முடியும் கண்களில் கோப ஒளியும் கோபத்தின் தன்மையைக் காட்டுகின்றன. நெற்றிக் கண் தெரிகிறது. சுடர் முடியின் நடுவில் கபாலம் காட்சியளிக்கிறது. வாயின் ஓரங்களில் கோரைப்பற்கள் வெளியில் எட்டிப்பார்க்கின்றன. இடது மேல் கை சிதைந்திருக்கிறது.

**இந்திராணி:** தலையில் கிரீட மகுடம் அலங்காரமின்றியுள்ளது. வலது பின் கை கதையைப் பிடித்திருக்கிறது. இடது பின் கை அங்குசத்தை பெற்றுள்ளது. வலது முன் கை உடைந்திருக்கிறது.

**வைணவி:** இந்தச் சிலையில் கிரீட மகுடம் தலையில் உயர மாகக் காணப்படுகிறது. காதுகளில் மகர குண்டலங்கள்.பின் கைகளில் கர்த்தரி முக முத்திரையில் சக்கரமும் சங்கும் நிற்கின்றன.

**தேவதானம் குழு:** இந்தக் கற்சிலைகள் ஊருக்கு வடக்கில் தென்னந்தோப்பின் நடுவில் இருக்கின்றன. எல்லா பெண் தெய்வங்களும் இலலிதாசனத்தில் இருக்கின்றனர். அனைவருக்கும் மார்புக் கச்சைகள் இருக்கின்றன. முதல் ஐந்து சிலைகளுக்கு வாகனங்கள் பீடங்களில் காட்டப்பட்டிருக்கின்றன. இந்த ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட எல்லா தெய்வங்களுக்கும் காக்கும் கையும் அருளும் கையும் விளங்குகின்றன. கீழாடை காலின் கணுக்கால் வரையிலும் மறைத்தல் மட்டுமின்றி மடிப்புகள் காட்டப்பட்டிருக்கின்றன.

**பிராமி:** பிராமியின் சடா மகுடம் உயரமாக இருப்பினும் சடைகள் காட்டப்படவில்லை. முன் தலை நேராகத் தெரிகிறது. ஆனால் இங்கு பக்கத்து இரண்டுத் தலைகளும் சற்று அதிகமாக நமக்குக் காட்டப்பட்டுள்ளன. ஆரம் பட்டையானது. வயிற்றுப் பகுதியில் சன்னவீரம் அதன் நடுவில் ஒரு குஞ்சமும் தெரிகிறது. வலது பின் கையில் உத்ராட்ச மாலை கைப் பிடியிலிருந்து தொங்குகிறது. இடது பின் கையில் குண்டிகை மடக்கிய விரல்களுக்கு மேல் இருக்கிறது. அன்னத்தின் தலை பிராமியின் காலை நோக்கி இருப்பதாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.

**மகேசுவரி:** மகேசுவரியின் சடா மகுடம் உயரமானது. மழுவும் மானும் பின் கைகளில் சிம்ம கரன முத்திரையில் இருக்கின்றன. இரண்டுத் தோள்களின் மீதும் பூ மாலைகள் வளைந்தும் தொங்கலுமாகத் தெரிகின்றன. முந்தைய சிலைக்கு இருக்கும் ஆரத்தைவிட அகலத்தில் சற்று சிறியது. சன்னவீரம் தெளிவாக இருக்கிறது. கேயுரங்கள் நன்கு பூ வேலைப்பாட்டுடன் இருக்கின்றன. முந்தைய சிலையின் வாகனத்தைப் போன்று நந்தியும் மகேசுவரியின் பாதத்தை நோக்கி இருக்கிறது.

**கௌமாரி:** இவருடைய மகுடம்; சிறியதாகக் காட்டப்பட்டி ருக்கிறது. பின் கைகளில் படைகள் சிம்ம கரனத்தில் இருக்கின்றன. தோள்செறி நீளமாகத் தோளில் தொங்குகின்றன. சன்னவீரம் நடுத் தொங்களுடன் வயிற்றுப் பகுதியில் நளினமாகச் செதுக்கப்பட்டுள்ளது. இவருடைய் வாகனம் மயில் தன்னுடைய தலையை வெளிப்பக்கமாத் திருப்பியுள்ளது.

**சாமுண்டி:** சாமுண்டியை இந்த ஊரில் மிகவும் கோபத்தில் இருக்கும் பொழுது காணப்படும் உடல் நிலையைப் போல் செதுக்கியிருக்கின்றனர். இவருக்கு எட்டுக் கைகள். வலது கையில் மேலிருந்து கீழ் சூலம், வாள், மற்றொன்று தெளிவாத் தெரியவில்லை. கடைசி கை வலது தொடை மீது பாசத்தைப் பிடித்துக் கொண்டு தாங்கியிருக்கிறது. இடது கைகளில் மேல் கை விஸ்மயத்தில் இருக்க அடுத்தது கேடயத்தைப் பெற்றிருக்கிறது, மூன்றாவது கை அம்பைப் பிடித்திருக்கிறது. கடைசி கை தொடை மீது இருத்தி கபாலத்தை ஏந்தியிருக்கிறது. தலையை சுடர் முடி அணி செய்கிறது. கழுத்தில் இரண்டு வகையான ஆரங்கள் அழகூட்டுகின்றன. மார்பகங்களை பாம்பு கட்டுகிறது. முண்ட மாலை இரண்டு மார்பகங்களுக்கு இடையில் சென்று வலது பக்க இடுப்பருகே பின் பக்கம் செல்லுகிறது. சாமுண்டியின் கீழ் ஆடை தொடையின் மேல் பகுதியை மட்டும் மறைக்கும் வண்ணம் இருக்கின்றது. இவருடைய பெரும்வீரத்தைச் சுட்டுவதற்காக இவ்வாறான ஆடையாக இருக்கலாம். சாமுண்டியின் வாகனம் பிரேதம் தலையை வெளிப்பக்கம் இருக்க படுத்துக் கொண்டிருக்கிறது.

**வைணவி:** வைணவி சிலைக்குப் பின் பக்கத்தில் பிரபை போன்று காட்டப்பட்டிருக்கிறது. கிரீட மகுடம் உயரமானது. நடுவில் மகரத்தின் தலை அலங்காரம் செதுக்கப்பட்டுள்ளது. வலது பின் கை சுடர் விடும் சக்கரத்தையும் இடது கை சங்கையும் பிடித்திருக்கின்றன. இந்தச் சிலையிலும் சன்னவீரம் உள்ளது. கழுத்தில் இரண்டு வகையான மெல்லிய ஆரங்கள் அணி செய்கின்றன. பீடத்தில் கருடன் அஞ்சலி முத்திரையில் காணப்படுகிறார்.

**வராகி:** இவருக்கு கரண்ட மகுடம் அணிந்துள்ளனர். கூர்மத்தின் முகம் போதுமான நீளம் இல்லை. மற்றவற்றில் அளவு சரியாகச் செதுக்கி காட்டியுள்ளனர். பின் கைகள் முறையே தடியையும் பாசத்தையும் பிடித்திருக்கின்றன. எண்ணெய் அழுக்கு படிந்திருப்பதால் பீடத்தில் வாகனம் தெளிவாகத் தெரியவில்லை.

**இந்திராணி:** இந்திராணிக்கு கரண்ட மகுடம் முந்தைய சிலையைப் போன்று தோற்றமளிக்கிறது. தலைக்குப் பின் பக்கத்தில் ஒளி வட்டமா அல்லது பெரிய சிரசக்கரமா என்று விளங்கவில்லை. இந்த ஒளி வட்டம் மலரின் இதழ்கள் போன்று காணப்படுகின்றன. வலது பின் கை ஒரு வாளை கர்த்தரி முக முத்திரையில் பெற்றிருக்கிறார். ஆனால் இடது பின் கை சிதைந்து காணப்படுகிறது. இங்கு வாகனம் காட்டப்படவில்லை.

**வீரபத்திரர்:** வீரபத்திரருக்கு முகம் சிதைந்துவிட்டது. தலையைச் சுற்றிலும் சடாபாரம் காட்டப்பட்டுள்ளது. வலது பின் கையில் மழு உள்ளது. இடது கையில் இருப்பதை அறிய முடியவில்லை. இவர் தன்னுடைய கால்களை இடது பக்கமாகத் திருப்பியுள்ளார். இவ்வகை மற்ற குழுக்களிலும் இருப்பதைக் கவனிக்கலாம். உதர பந்தம், கழுத்தணிகள் நுணுக்க வேலைப்பாடுகளற்றவை. இவை யாவும் பொ.ஆ. பத்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் செதுக்கப்பட்டவை.

**கணேசர்:** கணேசர் சிலை முற்றிலும் சிதைந்துள்ளது.

இதே இடத்தில் ஒரு கௌமாரி சிலையும் சண்டிகேசுவரர் சிலையும் காணப்படுகின்றன. இவற்றின் செதுக்கள்; பாணியே வேறானது.

**கௌமாரி:** புடைப்பான சிற்பம். தலையில் சிறிய கிரிடம். வலது காதில் பத்ர குண்டலம் தொங்குகிறது. முகம் சிதைந்துவிட்டது. மார்பகங்கள் சற்று தளர்ந்துள்ளன. அவற்றை கச்சைக் கட்டுகிறது. கச்சைக்கு தோளில் இருந்து பட்டைகள் வருகின்றன. வலது கை சக்தியையும் இடது மேல் கை உத்ராட்சத்தையும் பிடித்துகொண்டிருக்கின்றன. சன்னவீரம் உள்ளது. இடுப்பில் இருந்து தொங்கும் துணிப் பட்டை பெரிய வளையமாகத் தொடை மீதும் பீடத்தின் மீதும் செல்லுகிறது. கீழ் ஆடையைக் கட்டும் பட்டை முடுச்சிட்டதாகும். கை கால்கள் சன்னமானவை.

**சண்டிகேசுவரர்:** இவர் நீண்ட பீடத்தில் மகாராச லீலாசனத்தில் இருக்கிறார். வட்ட முகம். தலையில் சுருள் முடிகள் சடாபாரமாகத் தோற்றமளிக்கின்றன. வலது கையில் பெரிய மழுவை நளினமாகப் பெற்றிருக்கிறார். இடது கையையும் வலது கையையும் தொடைகள் மீது வைத்துள்ளார்.

கடைசி இரண்டுச் சிலைகளும் வெள்ளைக் கருங்கல் பலகையில் செதுக்கப்பட்டவையாகும். பூணூல் இரட்டையாகச் செல்லுவது இடது மார்பு அருகில் இணைப்பைப் பெற்றுள்ளது. கைகள் தடிமனாக இருக்கின்றன. கனத்த பத்ர குண்டலங்கள் காதுகளை அலங்கரிக்கின்றன. வெள்ளைக் கருங்கல்லில் வடிக்கப் பட்டிருக்கும் இரண்டுச் சிலைகளும் பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வடிக்கப்பட்டிருக்க வேண்டும்.

**தேவதானம் அதிதீசுவரர் கோயில் குழு:** பழைய வாணியம்பாடி என்ற தேவதானத்தில் இந்தக் கோயிலில் முதல் திருச்சுற்றில் தெற்குப் பக்கத்தில் எழுவர் அன்னையர் சிலைகள் இருக்கின்றன. இந்தக் குழுவின் தொடக்கத்திலும் இறுதியிலும் பொதுவாக இருக்கின்ற ஆண் சிலைகள் இங்கு இடம்பெறவில்லை. சிற்ப

கலை நுணுக்கத்தைக் கொண்டு ஆய்வு செய்தால் இந்தத் தொகுதி சிலைகள் பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டிற்குரியது எனலாம். இந்தத் தொகுதியில் இருக்கின்ற சிலைகள் எல்லாம் புடைப்புருவங்கள். எனினும் மேடையில் அமர்ந்திருப்பதைக் காட்டியுள்ளனர். அனைத்து சிலைகளும் இலலிதாசனத்தில் இருக்கின்றன. சாமுண்டி பாம்பு குச பந்தம் பெற்றிருக்க மற்றவர்கள் அனைவரும் சாதாரண குச்ச பந்தம் அணிந்திருக்கின்றனர். அனைவரும் கழுத்தில் அகலமான ஆரத்தினால் கழுத்தை அழுகு செய்கின்றனர். முன் வலது கைகள் காக்கும் கையாகவும் இடது கை அளிக்கும் கையாகவும் நிற்கின்றன. பின் கைகள் தங்களுடைய படைக்கலங்களைப் பெற்றிருக்கின்றன. தொங்கும் வலது கால்களுக்கு சிறிய பீடம் செதுக்கப்பட்டுள்ளன. யாருக்கும் வாகனம் இல்லை. பின் பக்கத்தில் இருக்கின்ற மீதமான கல் பலகையை அரை வட்டமாகச் செதுக்கி சிலையின் தோற்றத்தின் அழகைக் கூட்டியுள்ளனர்.

இதே போல இதே ஊரில் தென்னந் தோப்பில் இருக்கின்ற குழுவின் சிலைகளின் பின் பக்கங்களும் தோற்ற மேன்மையை உயர்த்தியிருக்கின்றனர். வழிபாட்டில் இருப்பதால் சிலைகள் எண்ணெய்யால் அழுக்கு அடைந்து சிற்ப நுணுக்கங்கள் தெரியவில்லை. இந்தக் குழுவில் சாமுண்டி நடுவில் வைத்திருக் கின்றனர். இதேபோல தென்னந் தோப்புக் குழுவிலும் சாமுண்டி நடுவில் இடம் பெற்றுள்ளாள். திருமலைச்சேரியிலும் காவேரிப்பாக்கத்திலும் குழுவின் நடுவில் சாமுண்டி இடம்பெற்றிருக்கிறாள்.

**பிராமி:** வலது பின் கையில் சிம்ம கரன முத்திரையின் மேல் உத்திராட்ச மாலை உள்ளது. இடது கையில் குண்டிகை அழுக்கு படிந்து தெரியவில்லை. வயிற்றில் உதர பந்தம் உள்ளது.

**மகேசுவரி:** வலது காதில் மகர குண்டலம் தொங்க வலது பின் கை முஸ்டி முத்திரையில் மழுவை கொண்டுள்ளது. இந்தச் சிலையிலும் உதர பந்தம் காணப்படுகிறது. இந்தச் சிலையின் எதிரில் திருச்சுற்றின் கம்பம் இருப்பதால் இடது மேல் கையில் இருக்கும் ஆயுதத்தை அறியமுடியவில்லை.

**இந்திராணி:** கௌமாரியின் வலது பின் கையில் வச்சராயுதம் தெளிவற்ற நிலையில் இருக்கிறது. இடது கையில் இருப்பது விளங்கவில்லை. வயிற்றுப் பகுதியில் சன்னவீரம் செல்லுகிறது.

**சாமுண்டி:** சாமுண்டியின் தலை சுடர் முடியால் எழிலாகி யுள்ளது. நடுவில் இருக்கும் மனித தலையைப் பக்கத்திற்கு பாம்பு தலையைக் காட்டுகின்றன. காதுகளில் அணிகலன் தெளிவாகத் தெரியவில்லை பின் வலது கை சூலத்தை பிடித்திருக்கிறது.

இடது கை கபாலத்தை நன்கு பற்றியுள்ளது. முண்ட மாலை மார்புக் கிடையில் நெளிந்து செல்லுகிறது. மார்பகங்களுக்குக் கீழ் சன்னவீரமும் உள்ளது. சாமுண்டியின் கீழாடை பீடத்தின் மீது சற்று விரிந்திருக்கிறது.

**வைணவி:** வைணவியின் வலது காதில் மகர குண்டலம் நீண்டு தொங்குகிறது. பின் கைகளில் கர்த்தரி முக முத்திரையில் முறையே வலதில் சக்கரமும் இடதில் சங்கும் இருக்கக் காணலாம்.

**வராகி:** வராகி சிலை சற்று முன் நோக்கி சாய்ந்திருப்பது போல் செதுக்கப்பட்டிருக்கிறது. முகம் தெளிவாகவும் கூர்மையானதாவும் இருக்கின்றது. வலது பக்கத்தைக் கல் கம்பம் மறைப்பதால் வலது ஆயுதம் தெரியவில்லை.

**கௌமாரி:** கௌமாரியின் மகுடத்தில் இருந்து இந்தச்சிலையை கௌமாரி என்று அறிவதற்கு வாய்ப்பில்லை. பின் கைகளில் குண்டிகையும் உத்ராட்சமும் இருக்கின்றன. வயிற்றுப் பகுதியில் சன்னவீரம் தெரிகிறது.

**திருவலம்:** திருவலம் அருள்மிக வில்வநாத ஈஸ்வரர் திருக்கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் தெற்குப் பக்கத்தில் பிராமி மட்டும் இருக்கிறது. இந்தசிலை பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. வனப்பு மிக்க சிலையாகும். மற்ற தலைகளை ஆடை மறைத்திருக்கிறது. வலது பின் கையிலும் இடது பின் கையிலும் முறையே உத்ராட்ச மாலையும் குண்டிகையும் சிம்மகரன முத்திரையில் காட்சிதருகின்றன.

**பள்ளிகொண்டா:** பள்ளிகொண்டா ஊருக்கு ஈசான்யத்தில் சிவன் கோயில் இருக்கிறது. அந்தக் கோயிலுக்கு மேற்கில் செல்லியம்மன் பெயரில் எழுவர் அன்னையர் கோயில் அமைந்திருக்கிறது. இந்தச் செல்லியம்மன் கோயிலின் அடித்தளத்தில் மேற்கிலும் வடக்கிலும் முதலாம் இராசராசனின் கல்வெட்டுப் பொறிப்புள்ளது.

இந்தப் பொறிப்பு இங்குள்ள பட்டாரியாருக்கு திருவிழா நடத்துவதற்குத் தேவையான செல்வத்தை குறிப்பிட்ட சிலரிடம் மட்டும் நீர் வரியாக பெற்றுக் கொள்ள வேண்டும் என்று ஊரின் கனம் முடிவெடுத்திருக்கிறது. இதே அடித் தளத்தில் மேற்படி கன உறுப்பினரான கழூமூர் கோவிந்த காடகா சர்வக்ராதுயாஜூயார் என்பவர் அளித்த அன்பளிப்பிலிருந்து இந்த பட்டாரியாருக்கு வழிபாடும் பலிபொருள்களும் அளிக்க வேண்டும் என்று மேற்படி கனப்பெருமக்களுடன் ஒப்பந்தம்; ஏற்பட்டிருக்கிறது.

கலைப்பாணியை நோக்கும் போது இந்த சிலைகள் பிற்காலப் பல்லவர் காலத்தைச் சேர்ந்தது என்ற முடிவிற்கு வரமுடிகிறது. இந்தக் குழுவில் அனைத்துச் சிலைகளும் இடம் பெற்றிருக்கின்றன. அனைத்தும் புடைப்புச் சிற்பங்கள். மீதியான பின்பக்க கற்பலகையை திருவாசி போன்ற உருவம் கொடுத்து சிலைக்கு எழிலூட்டியுள்ளனர். அனைவரும் இலலிதாசனத்தில் அமர்ந்திருக்கின்றனர்.

பீடங்களின் முன்பக்கத்தில் அதன் வாகனம் செதுக்கப்பட்டிருக்கிறது. இருப்பினும் எண்ணெய் அழுக்கால் சில வாகனங்கள் இன்று தெளிவில்லை.

கன்னியர்களின் கீழாடையைக் கட்டும் துணிப் பட்டை முடுச்சியுள்ளது. இந்தப் பட்டையின் ஒரு அரை வட்டமும் நுனிகளும் பீடத்தின் மீது வீழ்ந்துள்ளன. காக்கும் கையின் உள்ளங்கை செங்குத்தாக இல்லாமல் வலது பக்கம் சாய்ந்துள்ளது. முன் இடது கை இடது தொடை மீது இருக்கிறது. பின் கைகளில் ஆயுதங்கள் முஸ்டி முத்திரையில் பெற்றுள்ளனர். ஒவ்வொரு கையும் இரண்டு வளையல்களை அணிந்திருக்கிறது.

**கணேசர்:** கணேசரின் இடுப்புப் பகுதிக்குக் கீழ் சிதைந்திருக்கிறது. தும்பிக்கை சன்னமானது. அதன் முனை தேய்ந்துள்ளது. வலது பின் கை அங்குசத்தை உடையது. இடது கையில் மலர் உள்ளது.

**பிராமி:** பிராமியின் பக்க முகங்கள் தெளிவில்லை. வலது பின் கை குண்டிகையையும் இடது கை உத்ராட்ச மாலையையும் பிடித்துள்ளன. சன்னவீரம் உள்ளது. அன்ன வாகனம் தெளிவற்றுள்ளது.

**மகேசுவரி:** அகன்ற திரிசூலத்தை வலது பின் கை பிடித்திருக்கிறது. இடது கை துள்ளும் மானைப் பற்றியிருக்கிறது. பீடத்தில் நந்தி வாகனம் வலது பக்கம் தலையை நீட்டியிருக்கிறது.

**கௌமாரி:** கௌமாரி பின் வலது கையில் வச்சிரத்தைப் பெற்றிருக்கிறது. இடது குண்டிகையைப் பெற்றிருக்கிறது. சன்ன வீரம் தெளிவானது. தலையில் இவருக்குரிய சிறிய மகுடம் இல்லை.

**வைணவி:** வைணவியின் தலையில் நெடிய கிரிட மகுடம் காணப்படுகிறது. வலது பின் கையில் பிரயோக சக்கரமும் இடதில் சங்கும் இருக்கின்றன. பீடத்தில் கருட வாகனம் செதுக்கப்பட்டிருக்கிறது

**வராகி:** வராகியின் காது மடல்கள் சிறியன. வலது பின் கை பிரயோக சக்கரத்தையும் இடது ஒரு விலங்கையும் பெற்றிருக்கின்றன.

**இந்திராணி:** இந்திராணி பின் கைகளில் வச்சரத்தையும் குண்டிகையையும் பிடித்திருக்கிறாள். பீடத்தில் வாகனம் தெளிவில்லை.

**சாமுண்டி:** ருத்ரன் பெற்றிருக்கிற தலையலங்காரமே சாமுண்டியும் பெற்றிருக்கிறாள். படைக்கலன்கள் தேய்ந்துள்ளன. அதனால் தெளிவில்லை. சாமுண்டியின் வீரத்தைக் காண்பிக்க சன்னவீரம் காண்பிக்கப்பட்டுள்ளது.

**உருத்திரன்:** உருத்திரனின் சடைமுடி தலையின் பக்கங்களில் விரிந்திருக்கிறது. சிறிய சடை மகுடத்தின் நடுவில் கபாலம் காணப்படுகிறது. காதுகளில் மகர குண்டலங்கள் வெளிப்பக்கமாகத் தெரிக்கின்றன. பின் வலது கையில் மகேசுவரிக்குள்ளது போன்ற சூலம் உள்ளது. இடது கையில் துள்ளும் மான் உருத்ரனைப் பார்க்கிறது. வாகனம் நந்தி தெளிவற்றிருக்கிறது. இந்தக் கோயிலுக்குள்ள பூசாரி இந்தச் சிலையை ருத்திரன் என்று அழைக்கிறார்.

**திருமலைச்சேரி:** திருமலைச்சேரி வாலாசாபேட்டை வட்டத்தில் இருக்கின்றது. திருமலைச்சேரியின் சிவன் கோயிலுக்கு வடகிழக்கிலும் ஊருக்குக் கிழக்கிலும் எழுவர் அன்னையர் கோயில் அமைந்துள்ளது. இந்தக் கோயில் சிறிய கட்டடமாகக் கிழக்கு நோக்கியுள்ளது. வரிசையில் எழுவருக்கு முன்னதாக கணேசர் உள்ளார். அதனை அடுத்து தட்சிணாமூர்த்தி உள்ளார். தட்சிணாமூர்த்தியைக் கடந்து பிராமி துவங்கி சண்டிகேஸ்வரியில் முடிகிறது.

சண்டிகேஸ்வரியை அடுத்து பைரவர் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இந்தச் சிலைகள் பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டிற்குரியதாகும். அனைவருடைய பீடத்தி லும் வாகனங்கள் செதுக்கப்படவில்லை. நான்குக் கைகளுடன் அமர்ந்திருக்கின்றனர்.

**தக்கோலம்:** தக்கோலம் அரக்கோணம் வட்டத்தில் இருக்கின்றது. இந்த ஊரில் ஜலநாதர் கோயிலின் முதல் திருச்சுற்றில் தெற்குப் பக்கத்தில் வடக்குப் பார்த்தவாறு அமைக்கப்பட்டிருக்கின்றனர். இந்தக் குழுவில் எழுவர் அன்னையர் மட்டும் இடம் பெற்றுள்ளனர். உருத்தரனோ பிள்ளையாரோ இந்தக் குழவில் இடம் பெறவில்லை. சிலைகள் பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகலாம். பீடங்களில் வாகனங்கள் செதுக்கப்படவில்லை.

**சதுப்பேரி:** சதுப்பேரி வேலூர் மாநகருக்கு மேற்கில் அருகாமையில் அமைந்திருக்கிறது. ஊருக்கு வடக்கிலும் பெரிய ஏரிக்கரைக்குக் கிழக்கிலும் உலகாத்தம்மன் கோயில்

அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கோயிலுக்கு உலகாத்தம்மன் என்ற பெயர் இருப்பினும் கருவறையில் எழுவர் அன்னையர் சிலைகள் இருக்கின்றன. இவை கி. பி. 0ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இந்தக் குழுவில் பிள்ளையார் மற்றும் உருத்தரன் இடம்பெற்றுள்ளனர்.

**சத்துவாச்சாரி:** சத்துவாச்சாரியில் பாலாற்றின் தென் கரையில் பொன்னியம்மன் கோயில் என்ற பெயரில் எழுவர் அன்னையர் கோயில் இருக்கின்றது.

**கீழ்மொணவூர்:** வேலூருக்கு மேற்கில் பாலாற்றின் தென் கரையில் அமைந்திருக்கிறது. இந்த ஊரின் கிழக்கில் குளக்கரையின் மேற்குக் கரையில் பொன்னியம்மன் என்ற பெயரில் எழுவர் அன்னையர் கோயில் அமைந்திருக்கிறது. இந்தக் கோயிலில் எழுவர் அன்னையர் சிலைகள் உள்ளன. அவை பிற்காலப் பல்லவர் காலப் பாணியில் காட்சியளிக்கின்றன. இந்தக் கோயிலின் வெளியில் ஒரு வராகி சிலை உள்ளது. அந்தச் சிலையும் பிற்காலப் பல்லவர் பாணியில் செதுக்கப்பட்டிருக்கிறது.

**விரிஞ்சிபுரம்:** விரிஞ்சிபுரம் வழித்துணைவர் கோயிலின் முதல் திருச்சுற்றில் தென்மேற்குப் பகுதியில் எழுவர் அன்னையர் சிலைகள் வடக்கு நோக்கிய வண்ணம் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் குழுவில் பிள்ளையார் சிலையும் வீரபத்திரர் சிலையும் இடம் பெற்றுள்ளன. இவையும் பிற்காலப் பல்லவர் கலைப்பாணியில் தொன்றுகின்றன.

# 57
# செய்தித் திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்



**57:1 ஜேஷ்டை சிற்பம்:** காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டம் பெரும்பேர் (பெரும்பெறூர்) தான் தோன்றீசுவரசுவாமி திருக்கோயில் வீரராஜேந்திர சோழன் (1063–1070) 7வது ஆட்சி ஆண்டு கல்வெட்டில் இக்கோயில் பெரும்பேறூரரான திரிபுவன நல்லூர் திருத்தான்தோன்றி மகாஸ்ரீ கரணீசுவர முடையார் கோயில் எனக்குறிக்கப் படுகிறது. கோயிலின் எதிரே அமைந்துள்ள நந்திக்கு அருகில் உள்ள மண்டபத்தில் சேட்டை தேவியின் சிற்பம் வழிபடப்பெறுகின்றது. தேவி பத்மாசனத்தில் அமர்ந்தகோலம் தலையில் கரண்ட மகுடம். தலைக்கு மேலே இருபக்கங்களில் சாமரம் காணப்படுகிறது. தேவிக்கு வலது கோடியில் காக்கைக் கொடியும், மாந்தி வழிபடும் காட்சியைக்காணலாம். தேவியின் இடப்புறம் பெண் ஒருத்தி நிற்கும் கோலமும் காணப்படுகிறது. சேட்டை தேவியின் அமர்ந்த கோலம் மாறுபட்டு பத்மாசனத்தில் காட்சி அளிப்பதால் இச்சிற்பம் மாறுபட்ட தன்மையுடன் விளங்குவது சிறப்பானது.



**57:2 கொற்றவை சிற்பம்:** இக்கோயிலில் காணும் பிற்கால சோழர்கால கல் வெட்டில் பெரும்பேறூரரான திருபுவன நல்லூர் தான்தோன்றி மகாஸ்ரீ கரணீசுவர முடையார் கோயில் என அழைக்கப் படுகிறது.

இக்கோயிலில் வடமேற்கு மூலையில் மகிடன் தலைமேல் நின்றவண்ணம் காட்சி தரும் கொற்றவையின் சிற்பத் திருமேனி மக்களால் சிறப்பாகப் போற்றி வணங்கப்படுகிறது. எட்டு கரங்களில் சக்கரம், சூலம், வாள், வில், குறுவாள், கேடயம், மணி தாங்கிய கோலம். தேவியின் பின்புறம் வாகனமான மான் அமைந்துள்ளது. காலின் அருகில்

இருபுறங்களிலும் அடியவர்கள் போற்றுகின்றனர். பல்லவர்கால கலை அம்சத்துடன், பலகைச் சிற்பமாக இக்கொற்றவை திருமேனி அமைந்துள்ளது குறிப்பிடதக்கது. இதன் காலம் பொ.ஆ. 9ம் நூற்றாண்டாகும்.

**கி.ஸ்ரீதரன்,** சென்னை

**57:3 திருக்கச்சூர் அய்யனார்:** காஞ்சிபுரம் மாவட்டம், செங்கல் பட்டு வட்டம் திருக்கச்சூர் மருந்தீஸ்வரர் கோயிலுக்குச் செல்லும் வழியில் கிழக்கில் சிறிய கட்டிடம் ஒன்றில் வழிபாடற்ற அய்யனார் சிற்பம் உள்ளது. அமர்ந்த நிலையில் குத்திட்ட கால்களுடன் உள்ள இவ்வையனாரின் இடக்கை அவரது தொடையில் இருத்தியும் வலக்கையை வலக்கால் முட்டியில் தொங்கவிட்டும் காட்சியளிக்கின்றார். உதரபந்தம், பாதசாரம், யக்ஞோபவீதம் ஸ்கந்தமாலா, வளையம் ஆகியவற்றுடன் தலை ஜடாபந்தமுடன் உள்ள இச்சிற்பம் சோழர் காலத்தைச் சேர்ந்தது.

**ந.தனசேகரன்,** தஞ்சாவூர்

**57:4 கொற்றவைச்சிற்பம்:** விழுப்புரம் மாவட்டம், மைலம் அருகில் கள்ளக்கொத்தூர் ஊரின் ஏரிக்கரையில் 4 1/2 அடி உயரம் 2 3/4 அடி அகலமுள்ள கற்பலகையில் புடைப்புச் சிற்பமாக கொற்றவை சிற்பம் உள்ளது. கரண்ட மகுடம், தட்டைக் காதணிகள் கழுத்தணி மார்புக்கச்சை ஆகியவற்றுடன் உள்ள இச்சிற்பம் சமபங்க நின்ற நிலையில் எட்டு கைகளுடன் காட்சியளிக்கின்றாள். கைகளில் பிரயோக சக்கரம், சங்கு, வாள், அம்பு, இடுப்பில் கை, வில், கேடையம், ஊரு முத்திரை ஆகியவற்றுடன் விளங்குகிறாள். கொற்றவையின் வலப் பக்கம் மான், இடப்பக்கம் சிங்கம் உள்ளன. மான் உருவத்தின் கீழ் தன் தலையை அரிந்து பலியிடும் பக்தன் சிற்பம் மற்றொரு பக்கம் கொற்றவையை வியந்து கை உயர்த்திப் பாடும் பக்தனின் சிற்பமும் புடைப்புகளாக உள்ளன. பல்லவர்கால 9 ஆம் நூற்றாண்டுச் சிற்ப அமைதியை உடையது.



**57:5 எழுத்துப்பொறிப்புக் கொற்றவைச் சிற்பம்:** விழுப்புரம் மாவட்டம், எசாலம் ஊரிலுள்ள இராமநாத ஈஸ்வரர்

ஆலயத்தின் தெற்குத் திருச்சுற்றுச் சுவருக்கு அருகிலுள்ள விநாயகர் கோயிலுக்கு எதிரில் பலகைக்கல்லில் கொற்றவைச் சிற்பம் உள்ளது. எட்டு கைகளுடன் நின்ற நிலையில் உள்ள இச்சிற்பத்தின் கைகளிலில் முறையே சங்கு, சக்கரம், அம்பு, வாள், கண்டாமணி, வாள், கேடயம், நாகம், ஆகியவை உள்ளன. மணிக்கட்டுக்கு மேல் கிளி ஒன்றும் காணப்படுகிறது. கழுத்தில் அணிகளும் காதுகளில் குண்டலங்களும் கைகளில் வளையல்களும் கால்களில் சிலம்புகளும் காணப்படுகின்றன. இச்சிற்பத்தின் வலப்பக்கம் கீழ்ப்பகுதியில் வீரன் ஒருவன் காட்டப்பட்டுள்ளான்.அவனது கால்களுக்குக் கீழ் இரு வரிகளில் "இளமக்கள் நிறுத்த.." என்ற 7 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் கல்வெட்டு காணப்படுகிறது.

**மங்கை இராகவன், வீர ராகவன், விழுப்புரம்**

**57:6 நேமம் தொல்லியல் சின்னங்கள்:** தஞ்சாவூர் மாவட்டம், தஞ்சாவூர் வட்டம் நேமம் ஊரில் கோவிந்தசாமி என்பவர் வீட்டின் முன்பகுதியில் இரும்புக்கால கறுப்பு சிவப்பு மட்கல ஓடுகள், சுடுமன் மணி ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வூரில் பரவலாக மேற்குறித்த ஓடுகள் பெருமளவில் காணப்படுகின்றன.



**57:7 நெற்குதிர் மட்கலன்:** மேற்படி வீட்டில் இந்த நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்த நெற்குதிர் 185 செ.மீ நீளமும் 120 செ.மீ. அகலமும் 200 செ.மீ. சுற்றளவும் கொண்டதாக உள்ளது. சந்திரா என்பவர் வீட்டிலும் இது போன்ற நெற்குதிர் ஒன்று காணப்படுகிறது.

**மா.சைலேஷ், ஆத்தூர், சே,சுதா, தஞ்சாவூர்**

**57:8 களத்தூர் தொல்லியல் சின்னங்கள்:** திருவாரூர் மாவட்டம், வலங்கைமான் வட்டம் களத்தூர் தெற்குத் தெருவில் சரோஜா என்பவர் வீட்டில் பெருங்கற்கால மட்கல ஓடுகள் கிடைக்கின்றன.

**நா.ராஜலட்சுமி,** பாபநாசம், **மா.சைலேஷ்,** ஆத்தூர்

**57:9 அக்னீஸ்வரர் சிற்பத் தொகுதி:** நாகப்பட்டினம் மாவட்டம், வட்டம் புகலூர் அக்னீஸ்வரர் கோயிலில் கலசம் வழங்கும் சிற்பத்தொகுதி ஒன்று காணப்படுகிறது. நின்ற நிலையில் உள்ள மூவரில் முதல் சிற்பம் பெண் ஆவார். இரண்டாவது சிற்பம் கலசம் ஏந்தியபடி இருக்க அதனை வாங்கும் நிலையில் மற்றொருவர் நிற்கின்றார், இவ்விருவருக்கும் இடையில் சேவகன் போன்ற குள்ள உருவம் கையில் ஆயுதம் ஏந்தி காணப்படுகிறது. அவர்களுக்குப் பக்கத்தில் நால்வர் நிற்க நால்வர் அமர்ந்த நிலையில் மந்திரம் ஓதுகின்ற காட்சி இச்சிற்பத்தொகுதி பஞ்சவன் மாதேவி மற்றும் இராஜராஜனின் சதையத் திருனாளாளில் 108 கலசம் கொடுக்கும் விழாவாக இருக்ககூடும் எனத் தெரிகிறது.



**57:10 காளபிடாரி:** தஞ்சாவூர் மாவட்டம், பாபநாசம் வட்டம், கள்ளர் பசுபதிக்கோயில் ஆலயத்திற்கு எதிரில் களத்து மேட்டில் காளபிடாரி சிற்பம் ஒன்று காணப்படுகிறது. அமர்ந்த நிலையில் உள்ள இச்சிற்பத்தின் தலையில் அரவம் அதன் மேல் கபாலம், விரிசடை காணப்படுகிறது. வல முன்கை உடைந்தும் பின் கையில் சூலமும் இட முன் கை வரதமும் பின்கை காபாலமும் பெற்றுள்ளது. மார்பில் பாம்புக்கச்சை பெற்றுள்ளது.

**57:11 தூங்குதலைச் சிற்பங்கள்:** நாகை மாவட்டம், வட்டம், திருப்புகலூர் எல்லையில் உள்ள மதகருகில்இரண்டு தூங்குதலைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. சிற்பங்களில் ஒன்று நேராக நின்ற நிலையில் இடக்கையில் தலைக்கொண்டையைப்பிடித்து வலக்கையில் உள்ள வாளில் தன் தலையை அரிந்து கொள்வது போன்று காணப்படுகிறது. மற்றொரு சிற்பம் கால்களை விரித்த நிலையில் இடக்கையில் வாளின் உறை ஏந்தி வலக் கையைத் தலையில் பிடித்து வாளால் தலை அரிந்து கொள்வது போல் உள்ளது. வாள் வலப் பக்கமிருந்து இடப்பக்கம் செல்வதாக அமைந்துள்ளது.பிற்காலச் சோழர் 13 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.



**கோ.தில்லை கோவிந்தராஜன், தஞ்சாவூர்**

**57:12 ஏழு கன்னியர் சிற்பத்தொகுதி:** திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், தெள்ளாற்றில் உள்ள அங்காள பரமேஸ்வரி கோயிலின் பின்புறம் ஏழு கன்னியர் (சப்தமாதர்) சிற்பங்கள் வழிபாட்டில் உள்ளன. பலகைக் கல்லில் சப்தமாதர் எழுவரும் புடைப்பு சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளனர். இவற்றில் பிராமி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டா ஆகிய எழுவரும் வரிசையாக வீற்றிருக்கின்றனர்.

**பிராமி:** இவ்வுருவம் உயர்ந்த பீடத்தின் மீது வலது காலை மடித்து, இடது காலைத் தொங்கவிட்டு நான்கு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறது. மேல் வலக்கை கடக முத்திரையில் அக்க மாலையும் மேல் இடக்கை கடக முத்திரையில் பற்றியுள்ள பொருள் தெளிவாகவும் இல்லை. கீழ் வலக்கை முன் தோளை ஒட்டி அபயமாக உள்ளது. முன் இடக்கை தொடையின் மீது ஊரு முத்திரையில் உள்ளது. பிராமி மூன்று தலையுடன் காட்டப்பட்டுள்ளாள், தலைகளின் மேல் ஜடா மகுடம் அலங்கரிக்கிறது. கண், மூக்கு, வாய் அடையாளம் காணாதவாறு தேய்ந்துள்ளன. காதுகளில் குண்டலங்கள் அலங்கரிக்கின்றன. கழுத்தில் பிறை வடிவிலான கழுத்தணி அணிசெய்கிறது. தனங்களில் மார்பு கச்சையும், மார்பில் பூநூலும், இடுப்பில் இருந்து தொடை வரை ஆடை மடிப்புகளுடன் காட்டப்பட்டுள்ளன. ஆடையின் குஞ்சங்கள் கீழ்புறம் அரைவட்ட வடிவில் அமைந்து அலங்கரிக்கிறது. தோள்களில் உருட்டையான தோள் மாலையும், முன் கைகளில் தடித்த காப்பும், கால்களில் இரு தண்டைகளும் அலங்கரிக்கின்றன.

**மகேஸ்வரி:** பிராமியை அடுத்து மகேஸ்வரியின் சிற்ப வடிவம் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறது. இவ்வுருவம் உயர்ந்த மேடை மீது வலது காலை மடித்து, இடது காலைத் தொங்கவிட்டு, நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறது. மேல் வலக்கரம் கடக முத்திரையில் நாகத்துடன் கூடிய உடுக்கையையும் பற்றியுள்ளது. கீழ் இடக்கரம் கடக முத்திரையில் மழுவைப் பிடித்துள்ளது. கீழ் வலக்கரம் அபய முத்திரையில் அருள்பாலிக்கிறது. கீழ் இடக்கரம் தொடைமீது ஊரு முத்திரையில் அமைந்துள்ளது. ஜடா மகுடம் தலையிலும், வட்டக் குழைகள் காதிலும், அரைவட்ட வடிவக் கழுத்தணி மார்பிலும், தனங்களில் கச்சையும், தோள்களில் தோள்வளையும், மேல் புஜங்களிலும், முன் கைகளிலும் வளைகள் அணி செய்கின்றன. இடது தோள்களில் இருந்து இரு தனங்களின் ஊடே முப்புரிநூல் இறங்கி வலப்புறம் திரும்பி வலது கைமேல் ஏறுகிறது. இடையைச் சுற்றிலும் தடித்த பளுவான மடிப்புடைய

ஆடை மேல் தொடைவரையிலும் அலங்கரிக்கிறது. இடையின் முன்புறம் தடித்த கடிபந்தமான இடைவார் அலங்கரிக்கிறது. இடையைச் சுற்றியுள்ள ஆடைக்கட்டு கீழ்புறம் அரைவட்டமாக வீழ்ந்து வனப்பூட்டுகிறது. கால்களில் உருண்டையான தடித்த தண்டை ஒன்று அலங்கரிக்கின்றது. மகேஸ்வரி முகம் அடையாளம் காணமுடியாதவாறு தேய்ந்துள்ளது. இடது காதில் வட்டமான பத்ர குண்டலம் மட்டும் தெளிவாக தெரிகிறது. இச்சிற்பத்தில் உருவம் கரியநிறக் கல்லில் புடைப்புச் சிற்பமாக உள்ளது.

**கௌமாரி:** இவ்வுருவம் உயர்ந்த பீடத்தின் மீது வலது காலை மடித்து, இடது காலை பக்கவாட்டில் தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் காட்சியளிக்கின்றது. மேல் வலக்கரம் கடக முத்திரையில் ஏந்தியுள்ள சக்திப்படை அடையாளம் காணமுடியாதவாறு தேய்ந்துள்ளது. மேல் இடக்கரம் வஜ்ரப்படையை கடக முத்திரையில் கொண்டுள்ளது. கீழ் வலக்கரம் வலது முன்தோளை ஒட்டி அபய கரமாக உள்ளது. முன் இடக்கரம் இடது தொடைமீது ஊரு முத்திரையில் அமைந்துள்ளது.

கௌமாரியின் தலையை கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. மேல் நெற்றியைச் சுற்றிலும் கண்ணிமாலை அணி செய்கிறது. இரு காதுகளிலும் வட்டமான பத்ர குண்டலங்கள் அலங்கரிக்கின்றன. முகத்தில் கண்கள் மட்டும் தேய்ந்துள்ளது. மூக்கும், திருவாயும் தெளிவாகத் தெரிகின்றன. கழுத்தைச் சுற்றிலும் பிறை வடிவில் அணிகலன் காட்டப்பட்டுள்ளது. மார்புக் கச்சையுடன் கூடிய தனங்கள் அடையாளம் காணமுடியாதவாறு சிதைந்துள்ளது. இடது தோளில் இருந்து கீழ்நோக்கி ஓடிவரும் புரிநூல் வலது புஜத்தின் உட்புறம் ஏறுகின்றது. இடையைச் சுற்றிலும் மடிப்புடைய பளுவான தடித்த ஆடை கீழ் தொடை வரை அலங்கரிக்கிறது. இடையைச் சுற்றி[illegible] ஆடைகட்டு வலப்புறம் வனப்புடன் வளைந்து காணப்படு[illegible]. இடையின் முன்புறம் தடித்த இடைவார் என்னும் கடிபந்தம் காட்டப்பட்டுள்ளது. ஆடைக்கட்டின் குஞ்சங்கள், கீழ்புறம் அறைவட்ட வடிவில் அமைந்து அலங்கரிக்கிறது. தோள்களில் தோள்வளையும், முன்கையில் கைவளையும், கால்களில் இரு தண்டைகளும் அலங்கரிக்கிறது. கரண்ட மகுடம், வட்டமுகம், தேய்ந்த கண்கள், எடுப்பான கீழ் நாசி, பிரிந்த இதழ்கள் அளவான மேல் உடல், வலுவான ஆடைகளுடன் கீழ் உடல், உருண்டு தடித்த அணிகலன், வலது புஜத்தில் ஏறும் தடித்த பூநால்.

**வைஷ்ணவி:** சப்தமாதர் வரிசையில் வைஷ்ணவியின் சிற்ப வடிவம் நான்காவதாக இடம்பெற்றுள்ளது. இவ்வுருவம் உயர்ந்த பீடத்தின் மேல் வலது காலை மடித்து, இடது காலைப் பக்கவாட்டில் மடித்து தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறது. மேல் வலக்கரம் கடக முத்திரையில் பிரயோக சக்கரத்தைப் பக்கவாட்டில் கொண்டுள்ளது. மேல் இடக்கரம் கடக முத்திரையில் சங்கினை செங்குத்தாகப் பற்றியுள்ளது. கீழ் வலக்கரம் வலது முன் தோளை ஒட்டி அபய கரமாக அபய முத்திரையில் காணப்படுகிறது. கீழ் இடக்கரம் இடது மேல் தொடையில் ஊரு முத்திரையில் அமைந்துள்ளது. வைஷ்ணவியின் தலையை கிரீட மகுடம் அலங்கரிக்கிறது. வலது காதில் வட்டமான பத்ர குண்டலம் அலங்கரிக்கிறது. கழுத்தில் அரைவட்ட வடிவ கழுத்தணி அலங்கரிக்கிறது. இடது தோளிலிருந்து கீழ் வயிற்றை அடையும் பூநூல் வளைந்து வலது புஜத்தின் உட்புறம் ஏறுகிறது. மேற்கரங்களிலும், முன் கையிலும் தோள்வளையும், கை வளையும் அலங்கரிக்கின்றன.

இடையைச் சுற்றிலும் பளுவான மடிப்புடைய தடித்த ஆடை மேல்தொடைவரை அணி செய்கிறது. இடையின் முன்புறம் தடித்த இடைவார் என்னும் கடிபந்தம் அமைந்துள்ளது. ஆடைக்கட்டின் குஞ்சங்கள் இடையின் இருபுறமும் முடிச்சுடன் காட்டப்பட்டுள்ளது. அவ்வாறு காலின் கீழ் அரைவட்ட வடிவில் ஆடைக்கட்டு அலங்கரிக்கிறது.

மகுடத்தின் தோற்றம், நீள்வட்ட முகம், கோடிட்ட புருவம், மலர்ந்த கண்கள், எடுப்பான மூக்கு, குவிந்த திருவாய், குறுகிய கழுத்து, விரிந்த தோள், அளவான மேலுடல், ஆடைக்கட்டுகளுடன் கூடிய அழகிய கீழுடல், அளவான அங்கங்கள், கரங்களில் பற்றியுள்ள ஆயுதங்கள் யாவும் பல்லவர் கால சிற்பக் கலையை அடையாளம் காணமுடிகிறது.

**வராகி:** இவ்வரிசையில் வராகியின் சிற்ப வடிவம் ஐந்தாவ தாக இடம் பெற்றுள்ளது. இவ்வுருவம் உயர்ந்த பத்ர பீடத்தின் மேல் வலது காலை மடித்து, இடதுகாலைத் தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறது.

மேல் வலக்கரம் பிரயோக சக்கரம் இடம்பெற்றுள்ளது. இது சாய்வாக உள்ளது. சங்கு ஒன்றினை கடக முத்திரையில் பிடித்துள்ளது. கீழ் இடக்கரம் தொடைமீது ஊரு முத்திரையில் உள்ளது. இக்கரம் கீழிருந்து முழங்கை வரை சிதைந்துள்ளது. பன்றி முகமும், மானிட உடலும் கொண்டு வராகியின் உடல் செதுக்கப்பட்டுள்ளது. வராகியின் தலையில் கிரீட

மகுடம் அலங்கரிக்கிறது. வராகியின் காதுகள் பக்கவாட்டில் விரிந்துள்ளது. முகம் முன்புறம் தாழ்ந்துள்ளது.

மேற்கரங்களில் தோள் வளையங்கள் காட்டப்பட்டுள்ளன. முன் கைகளில் கைவளைகள் தேய்ந்துள்ளன. கால்களில் உருண்டு தடித்த தண்டைகளும் தேய்ந்துள்ளன. இடையின் பக்கவாட்டில் கொசவங்கள் காட்டப்பட்டுள்ளது.

**இந்திராணி:** இவ்வரிசையில் இந்திராணியின் சிற்ப வடிவம் ஆறாவதாக இடம்பெற்றுள்ளன. உயர்ந்த பீடத்தின் மீது வலது காலை மடித்து, இடது காலைப் பக்கவாட்டில் மடித்துத் தொங்கவிட்டு நான்கு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்கிறாள். நான்கு கரங்களில் மேல் இரு கரங்களில் கடக முத்திரையில் வஜ்ஜிரத்தையும், போர்வாளையும் பற்றியுள்ளன. கீழ் வலது கரம் அபய முத்திரையில் அருள்பாலிக்கிறது. இடது கரம் ஊரு முத்திரையில் தொடையின் மீது அமைந்துள்ளது.

கரண்ட மகுடம், குண்டலங்கள், பிறை வடிவான கழுத்தணி, வலது புஜத்தில் ஏறும் தடித்த முப்புரி நூல், பளுவான இடைக்கச்சை கீழ் தொடை வரை அலங்கரிக்க, இடையைச் சுற்றிலும் இடைவாறும், இடையின் பக்கங்களில் முடிச்சுடன் கூடிய ஆடைக்கட்டும், அரைவட்ட வடிவமான ஆடை சரிந்தும், இவ்வுருவை அலங்கரிக்கின்றன.

**சாமுண்டா:** இவ்வரிசையில் ஏழாவதாக இடம்பெறுவது சாமுண்டா. சாமுண்டாவின் இவ்வுருவம் அமாந்த கோலத்தில் இடம்பெற்றுள்ளது. மேல் இரு கரங்களும் கடக முத்திரையில் உரிய ஆயுதங்களை பற்றியுள்ளன. ஆயுதங்களை சரியாக அடையாளம் காணமுடியவில்லை. கீழ் வலக்கரம் அபய முத்திரையிலும், இடக்கரம் தொடையின் மீது ஊரு முத்திரையிலும் அமைந்துள்ளன. இடது கால் எழிலாக மடித்தும், வலது கால் பக்கவாட்டில் மடித்து தொங்கவிட்டு காட்சியளிக்கிறது. தலையை விரிந்த ஜுவாலா மகுடம் அலங்கரிக்கிறது. முகம் தேய்ந்துள்ளது. காதுகளில் பிரேத குண்டலம் காட்டப்பட்டுள்ளது. கழுத்தை சுற்றிலும் பிறை வடிவிலான அணிகலன்கள் அலங்கரிக்கிறது. தனங்களின் மீது இறுக கட்டப்பட்டுள்ள மார்புக் கச்சை தேய்ந்துள்ளது.

இடது தோளில் இருந்து இறங்கி வலது கரத்தில் ஏறும் நிலையில் கபாலமாலை அலங்கரிக்கிறது. இடையைச் சுற்றி பளுவான ஆடை மேல் தொடை வரை காட்டப்பட்டுள்ளது. மேல் கைகளில் தோள் வளையமும், கீழ் கைகளில் கை வளையும், கால்களில் தண்டையும் அலங்கரிக்கின்றன.

சப்தமாதர் சிற்ப வடிவங்கள் அனைத்தும் நீண்ட ஒரே பலகைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன. இப்பலகைக்கல் 11 வு3/4 அடி நீளமும், 2 1/4 அடி உயரமும், கல்லின் கனம் 4 அங்குலம் கொண்ட ஒரே பலகைக் கல்லாகும். இவ்வுருவம் ஒவ்வொன்றும் சுமார் 2 1/4 அடி உயரமும், 1 1/4 அடி அகலமும், தோள் 3/4 அடியும் கொண்டது. இச்சிற்பங்கள் பொ.ஆ.8–9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**ஆயுத புருஷர்:** சப்தமாதர் தொகுப்பில் உள்ள சிவனது உருவம் தனித்து தனிக்கல்லில் காணப்படுகிறது. இது உயர்ந்த பீடத்தின் மேல் வலது காலை மடித்து, இடது காலைத் தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் சுகாசனத்தில் அமர்ந்துள்ளது. மேற்கரங்கள் இரண்டும் கடக முத்திரையில் ஆயுதங்களைப் பற்றியுள்ளன.

ஆயுதங்கள் யாவும் அடையாளம் காண முடியவில்லை. கீழ் வலக்கரம் அபய முத்திரையில் அருள்பாலிக்கிறது. கீழ் இடக்கரம் ஊரு முத்திரையில் தொடைமீது அமைந்துள்ளது.

தலையின் பின்புறம் விரிந்த ஜடாபாரம் அலங்கரிக்கிறது. வலது காதில் மகர குண்டலமும், இடது காதில் பத்ர குண்டலமும் அலங்கரிக்கின்றன. கழுத்தில் பிறைவடிவான அணிகலன் உள்ளது. இடது தோளில் இருந்து சரியும் தடித்த பூநூல் வலது புஜத்தின் உட்புறம் ஏறிச் செல்கிறது.

இடையில் இருந்து மேல் தொடை வரை பளுவான ஆடை அலங்கரிக்கிறது. பீடத்தின் முன்புறம் அறைவட்டமான ஆடைக்கட்டு அணிசெய்கிறது. மேற் கையிலும், முன் கையிலும் உருளை வடிவான வகைகளும், காலில் உருளை வடிவான கழல்கள் அலங்கரிக்கிறது. இச்சிற்பத்தொகுதிகள் யாவும் கி.பி.89 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர் காலத்தவையாகும்.

**மா.சந்திரமூர்த்தி, த.காமாட்சி,**
**க.ஆ.கவிதா, சென்னை**

**57:13 கவிநாட்டில் சமணர் சிலை:** புதுக்கோட்டை மாவட்டத்தில் கட்டியாவயல் அருகே உள்ள கவிநாடு கண்மாயில் 3.5 அடி உயரமும், 3 அடி அகலமும் உள்ள சமணர் சிலை தலை, மார்பு, உடல் என்ற நிலையில் மூன்று பகுதிகள் தனித்தனியாக இணைக்கப்பட்ட அந்த சிலையின் முகம் தேய்ந்த நிலையில் உள்ளது. இரு கைகளின் பகுதிகள் உடைந்த



நிலையில் உள்ளன. அமர்ந்த நிலையில் தியான கோலத்தில் உள்ள இச்சிலை ஆடையின்றி காணப்படுகிறது.

**பா.ஜம்புலிங்கம், தஞ்சாவூர்.**

**57:14 குதிரை வீரன் சிற்பங்கள்:** மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டம் கொடிக்குளம் என்ற இடத்தில் நாயக்கர்கால இரு புடைப்புச் சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றுள் ஒன்றில் குதிரையின் மீது வீரன் ஒருவன் அமர்ந்தும் அவனது அருகில் மற்றொரு வீரன் குதிரையைக் கட்டுப்படுத்துவது போன்றும் அருகில் பெண் ஒருவர் நின்ற நிலையிலும் அவள் அருகில் நாய் ஒன்றும் காட்டப்பட்டுள்ளது. அருகிலுள்ள மற்றொரு சிற்பத்தில் வில்லின் நாணினை இழுத்து அம்பினை எய்யும் வீரர் காட்டப்பட்டுள்ளார். வலப்பக்கத்தோளில் பின்பகுதியில் அம்பாரத்தூணி காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பத்திலும் பெண் ஒருவர் காணப்படுகின்றார்.



**பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

**57:15 கொற்றவைச் சிற்பம்:** திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், தெள்ளாற்றில் செல்லியம்மன் கோயிலின் பின்புறம் எண் தோள் காளியின் சிற்ப வடிவம் இடுப்பு வரை புதைந்த நிலையில் காணப்படுகிறது.

எண் கரங்களில் ஆயுதம் பற்றி நின்ற கோலத்தில் இச்சிற்ப வடிவம் பல்லவர் கால பொ.ஆ. 8–9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. காளியின் வல,இடக் கரங்களில் முறையே சங்கு, பிரயோகச் சக்கரம், போர் வாள், கேடயம், அம்பு, வில் ஆகிய ஆயுதங்கள் கடக முத்திரை, கட்டிய வலம்பிதம் போன்றவை உள்ளன. காளியின் தலையில் அகன்ற கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. ஓலை வடிவில் காதுகளில் பத்ர குண்டலம் அணிசெய்கிறது. தனங்களின் மேல் மார்புக் கச்சை என்னும் குஜபந்தம் உள்ளது. இரு தனங்களின் ஊடே தனசூத்திரம் சரிந்துள்ளது. பிறைவடிவான கழுத்தணியுடன் காட்சியளிக்கிறது.

**மா.சந்திரமூர்த்தி, க.ஆ.கவிதா, சென்னை**

**57:16 கொற்றவைப் புடைப்புச் சிற்பம்:** விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் சிங்கவரத்தில் வேளாண் நிலத்தை பன் படுத்தியபொழுது 3மீX2மீ நீள, அகலத்தில் கொற்றவையின் புடைப்புச்சிற்பம் கண்டு பிடிக்கப்பட்டது. திரிபங்க நின்ற நிலையில் எட்டு கைகளுடன் விளங்கும் இச்சிற்பம்



மேலிரு கைகளில் முறையே பிரோயகச் சக்கரம், சங்கும் கீழிரு கைகள் இரண்டில் நீண்ட வாளின் கைப்பகுதியையும் நுணிப்பகுதியையும் பிடித்த நிலையிலும் மற்றிரு கைகளில் ஒன்றில் வில்லும் ஒரு கையில் அம்பும் இடைப்பட்ட இரண்டு கைகளில் ஒன்றில் மண்டையோடும் காணப்படுகிறது. எட்டாவது கை தெளிவாகக் காட்டப்படவில்லை. இவரது காலின் கீழ் எருமைத்தலையும் இரு பக்தர்கள் பக்கத்திற்கு ஒருவராக அமர்ந்த நிலையில் காணப்படுகின்றனர். இவர் கைகளிலே குறுவாள்கள் உள்ளன. கொற்றவையின் மேல் பகுதியில் மான் ஒன்றும் சிங்கம் ஒன்றும் பக்கத்திற்கு ஒன்றாக இருபக்கங்களிலும் காட்டப்பட்டுள்ளது. முகம் சிதைந்த நிலையில் உள்ள கொற்றவையின் கால்களில் சிலம்புகளும் இடையில் இடைக்கச்சும் மார்பில் கச்சும் கழுத்திலே அணியும் காதுகள் தொங்க கரண்ட மகுடத்துடன் காட்டப்பட்டுள்ளாள். பல்லவர்கால சிற்பமைதியை இச்சிற்பம் கொண்டுள்ளது.

**பெ.லெனின், செஞ்சி**

**57:17 தாமரைபாக்கம் திருமால் சிற்பம் :** திருவண்ணாமலை மாவட் டம் போரூர்வட்டம் தாமரைப்பாக்கத்தில் குளம் அருகில் திருமால் சிற்பம் நின்றநிலை வடிவில் மண்ணில் புதைக்கப்பட்ட மணலில் தலையில் கூம்புவடிவில் மகுடத்துடன் காதுகளில் மகர காதணிகளுடனும் காணப்படுகிறது. மார்பில் முப்புரிநூல் பட்டையாக காட்டப்பட்டுள்ளது. திருமாலின் கண்கள் மூடியநிலையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. நான்கு கைகளைக் கொண்டு விளங்கும் இச்சிற்பம் வலது மேல் இருகரங்களில் வலதுகரத்தில் சக்கரமும், இடதுகரத்தில் சங்கும், கீழ் இரு கரங்களின் வலது கரம் அபயமுத்திரையும், இடது கரம் மண்ணில் புதைந்தும் காணப்படுகின்றது. இச்சிற்பம் சோழர் காலச் சிற்ப அமைதியை உடையதகலாம்.



**செங்கம் தூங்குதலைச் சிற்பம்:** திருவண்ணாமலை மாவட்டம், செங்கம், காளியம்மன் கோயிலின் முன்பகுதியில் நடப்பட்டுள்ள



தூங்குதலைச் சிற்பம் நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளார். தலைமுடி மேலே தூக்கி உச்சிக் கொண்டையாக அமைக்கப்பட்டுள்ளது. ஆரம், சன்னவீரம், கனமான வட்டவடிவ காதனிகளோடு விளங்குகிறது. எளிய சிறிய கீழாடையானது அறைக்கால் சட்டையாக காணப்படுகிறது. வீரர் அணிந்துள்ள கீழாடையின் இடைக்கச்சையில் குஞ்சங்கள் இவரின் இரு கரங்களின் கீழ் இருபுறமும் பறந்தவாறு காட்டப்பட்டுள்ளது. இவ்வீரர் முருக்கிய நிலையில் வடிக்கப்பட்டுள்ளார். நீண்ட வாலை தன்னுடைய கழுத்திற்குப் பின்பக்கம் வைத்து தலையை அறிந்து கொடுக்கும் விதமாக காட்சியளிக்கின்றார். இச்சிற்பம் பொ.ஆ.16–17 ஆம் நூற்றாண்டை சார்ந்தவையாகலாம்.

**பல்லவர்கால சிற்பம்:** திருவண்ணாமலை மாவட்டம், கலசபாக்கம் வட்டம், பூண்டி அரசு தொடக்கப்பள்ளி மதில் சுவரின் வெளிப்பக்கத்தின் வடக்குத்திசையில் நடப்பட்டுள்ள இடம் சிற்பம் உய்ரமான கிரீடமும் கேயுரம், கீழ்வலதுகரம் கடிகஸ்தநிலையிலும், மேல் கரம் அக்கமாலையைப் பிடித்தவாறும் காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பம் பொ.ஆ. 8–9 நூற்றாண்டைச் சார்ந்த தாகலாம்.



**ப. கலைச்செல்வன்,**
**ஜே.ஆர்.சிவராமகிருஷ்ணன்,**
**சு. கண்ணன், அண்ணாமலைநகர்**

**57:18 வீரன் சிற்பம்:** மதுரை திண்டுக்கல் தேசிய நெடுஞ் சாலையில், மதுரையிலிருந்து 16. கி.மீ. தொலைவில் நகரில் என்னும் ஊரின் பேருந்து நிறுத்தம் அருகில் காணப்படுகிறது. கற்சிற்பம் வீரன் ஒருவன் குதிரையின் பின்புறத்தில் ஈட்டியால் குத்துவது போன்று புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. மேலும் இக்கல்லின் இரு புறங்களிலும் தனியாகச் சிங்க உருவம் பொறித்த புடைப்புச் சிற்பங்களும் வைக்கப்பட்டுள்ளன. இச்சிற்பத் தொகுதிகள் நாயக்கர் கால கலைப் பாணி ஆகும்.

**இலிங்கம்:** மதுரை திண்டுக்கல் தேசிய நெடுஞ்சாலையில் 19 கி.மி. தொலைவில் உள்ள அய்யங்கோட்டை மற்றும்

தனிச்சியம் ஆகிய ஊர்களுக்கிடையே அய்யனார் கோவில் உள்ளது. அதன் அருகில் கண்மாய்கரை ஓரமாக இலிங்கத்தடி என அழைக்கப்படும் இடத்தில் ஐந்து வருடங்களுக்கு முன்பு மண்ணில் புதையுண்டிருந்த சிவலிங்கம் ஒன்றினைத் தோண்டி எடுத்துள்ளனர்.

இது பிற்கால பாண்டியர் காலத்தினை சார்ந்ததாக உள்ளது. இதன் அருகில் கண்ணிமார் புடைப்புச் சிற்பமாக உள்ளது.

**இரா.சந்தனம், தஞ்சாவூர்**

**57:19 மட்கலஓடுகள்:** திருப்புறமபியம் பகுதியின் தொல்லியல்: கும்பகோணம் வட்டத்தில் திருப்புறம்பியம் வரலாற்றுப் புகழ்பெற்றது. இவ்வூரின் சாட்சிநாதர் சிவன் கோயிலின் மேற்குப் பகுதியில் மேலத்தெருவில் கருப்பு சிவப்பு மட்கல ஓடுகள் வண்ணம் தீட்டப்பட்ட சிவப்பு நிற மட்கலன்கள் ஆகியவை காணப்படுகின்றன. மேலத் தெருவில் உதிரப்பட்டி தோப்பில் மண்மேட்டில் அரு மணிகலான கார்ணீலியன், மட்கல ஓடுகள் மண்விளக்கு போன்றவை கிடைத்தன.



**மா.சைலேஷ், ஆத்தூர்**

**57:20 காவனூர் சமணக் கோயில் மற்றும் பார்சுவநாதர் சிற்பம்:** வேலூர் மாவட்டம் அரக்கோணம் வட்டம் காவனூரில் சிவன் கோயில் அருகில் இடிந்த சமணர்கோயில் ஒன்று உள்ளது. இக்கோயிலை மக்கள் ஹரிபுத்திரர் கோயில் என வழங்குகின்றனர். கிழக்கு நோக்கிய நிலையில் உள்ள இக்கோயில் கருங்கற்களால் கட்டப்பட்டு அதிட்டான உறுப்புகளைப் பெற்றுள்ளது. கருவறையின் மேல் ஒரு தள விமானமாக இருந்திருக்கவேண்டும்.

இக்கோயிலிலிருந்த பார்சுவநாதர் சிற்பம் தற்பொழுது பெருமாள் கோயில் வளாகத்தில் உள்ளது. 4 அடி உயரமுள்ள இச்சிற்பம் தாமரைப் பீடத்தில் புடைப்பாக நின்ற நிலையில் உள்ளார். தொங்கவிடப்பட்ட கைகள் தலையின் பின்பகுதியில் ஐந்தலை நாகம் அதன் மேல் முக்குடை காணப்படுகிறது. இச்சிற்பம் பொ.ஆ. 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்.

**கி.குமார், சென்னை**

## 57:21 குடியாத்தம் பகுதியில் சிற்பங்கள்:

**கொற்றவை:** வேலூர் மாவட்டம், குடியாத்;தம் வட்டம், குடியாத்தம் நகரிலிருந்து 10 கி.மீ. தொலைவில், போகலூர் சாலையிலிருந்து 100 மீ உள்ளடங்கி சிறு வனப்பகுதியில், கற்பலகையில் புடைப்புச் சிற்பமாக கொற்றவைச் சிற்பம் ஒன்று கண்டறியப்பட்டுள்ள.

இச்சிற்பம் 60 செ.மீ உயரம் மற்றும் 40 செ.மீ அகலத்தில் சமபங்க நிலையில் நின்று நான்கு கரங்களுடன் இருக்கின்றது. கொற்றவையின் மேற்கரங்களில் பிரயோக சக்கரமும், சங்கும் உள்ளன. வலதுபுறம் கீழ்கையில் அபய முத்திரையும், இடது புறம் ஊருகஸ்த முத்திரையும் காணப்படுகிறது. இந்த சிற்பத்தின் காலம் 9ம் அல்லது 10வது நூற்றாண்டாக இருக்கக்கூடும்.

**நடுகல்:** வேலூர் மாவட்டம், குடியாத்தம் நகரிலிருந்து வடமேற்கே 8 கீ.மீ தொலைவில் அமைந்துள்ள செம்பேடு கிராமத்தில் இரண்டு அடி உயரமும் 7.1 அடி நீளமுடன் கிடைநிலையில் உள்ள நடுகல்லில், குதிரை மீது அமர்ந்துள்ள வீரன் மற்றும் நான்கு பெண் உருவங்கள் உள்ளன. அடுத்து இருக்கும் நடுகல்லில் ஒருவர் குடை பிடிதது மாவீரனை வரவேற்கின்றார்.

இந்த குடை பிடித்தல் சிற்றரசன் அல்லது தளபதிக்கு மட்டும் செலுத்தக்கூடிய சிறப்பு மரியாதையாகும்.

கிடைநிலை நடுகல்லில் உள்ள நான்கு பெண்களும் ஒரே தோற்றத்திலிருக்கிறார்கள். இவர்கள் நால்வரும் குதிரையில் அமர்ந்துள்ள சிற்றரசர் அல்லது தளபதிக்கு மனைவி மார்களாக இருந்திருக்கக்கூடும்.

இவர் உள்ளூர் அல்லது எல்லையில் நடந்த சிறு போரில் வீரமரணமடைந்தவராக இருக்கக்கூடும். மேலும் இந் நடுகல்லின் இடப்பக்கம் சிதிலமடைந் துள்ளது. இவ்விரு நடுகற்களும், 14ம் நூற்றாண்டின். விஜய நகர அரசு காலத்தைச் சேர்ந்ததாக தெரிகிறது. இந்த நடுக்கல்லை குண்டாலம்மா தேவதையாக இக்கிராமவாசிகள் கும்பிடுகிறார்கள்.

**த.மகேந்திரன், சென்னை**

**சிறுத்தைப்புலி குத்துக்கல்:** கொங்கு நாட்டின் மேற்குத் தொடர்ச்சி மலையில் அடிவாரத்தில் உள்ள மத்தியபாளையம். ஊரின் தென்மேற்குப் பகுதியில் 1 கி.மீ தொலைவில்

வீரனும் சிறுத்தைப்புலியும் சண்டையிடுகின்ற நடுகல் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்நடுகல் பொது ஆண்டு 16–17ம் நூற்றாண்டின் நாயக்கர்கால கலைப்படைப்பை எடுத்துக் காட்டுவதாக அமைகிறது.

**ச.இரவி,கோவை**

# 58

# குடிமங்கலம் விடுபட்ட கல்வெட்டின் இரண்டாம் பகுதி

**சி.வீரராகவன்,** விழுப்புரம்
**து.சுந்தரம்,** கோவை

*கோயம்புத்தூர் மாவட்டம் உடுமலை வட்டம் பல்லடம் உடுமலை சாலையில் உள்ள குடிமங்கலத்தில் அரசு மருத்துவ மனை வளாகத்தில் உள்ள தனிப்பாறைக் கல்வெட்டின் ஒரு பகுதி ஆவணம் தொகுதி 22 இல் என் 37 பக்கம்.123 இல் வெளியிடப்பட்டது. அதன் இரண்டாவது பகுதி தற்பொழுது படிக்கப்பட்டு வெளியிடப்படுகிறது. விசயநக்ர அரசர் அச்சுதராயர் பொ.ஆ. 1528*

*தென்பொங்கலூர்க்கா நாட்டு பூளையபாடியான பெரியமங் கலத்தில் உள்ள பிராமண சத்திரத்துக்கு மகாமண்டலேசுவரர் வாலையதேவ மகாராசர் நிலம் கொடையளித்தது.சத்திரம் அமைந்துள்ள ஊரையும் பிராமனரே அனுபவிக்கலாம் என்றும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இரண்டாம் பக்கத்தின் பகுதி பின்வருமாறு:*

1. றும் எற்பேற்பட்ட சகல சுவாமியங்களும் பெரி-
2. ய மங்கலத்தில் பிராமண சத்திரத்துக்கு நடந்துவ
3. ரக்க டவதாகவும் இந்த தன்மம் சந்திராதித்தவரையும்
4. செ ல்லக்கடவதாகவும் என்று ஸ்ரீமன் மகாமண்ட
5. லேசுர வாலையதேவ மகாராச நம்முடைய சுவா-
6. மி அச்சுத்தராயற்குப் புண்ணியமாக பிராமண
7. சத்திரத்துக்கு வைத்த தென்பொங்கலூற்கா
8. நாட்டுப்பெரியமங்கலத்துப் பிராமண சத்தி-
9. ரத்து தன்மம் சாதனம் இந்த சத்திரத்தை பிராம-
10. நால் ஆராகலும் நன்றாக நடத்திவந்தான் அ-
11. ந்த பிராமணனே இந்தக்கிறாமத்தையும் அனு-

12. பவித்துக்கொண்டு இந்த பிராமண சத்திரத்தையும்
13. நன்றாக நடத்திகொண்டு வரக்கடவானாக[வும்]
14. இந்த தன்மத்துக்கு யாதொருவர் அகிதம் பண
15. ணினவர்கள் கெங்கைக்கரையிலே கபிலை
16. ப்பசுவையும் பிராமணரையும் மாதாபிதா[வை]
17. [யும்கு]ருக்களையும் கொன்ற பாவத்திலே போ
18. கக்கடவராகவும்
19. சுவத$_3$த்தா திடி$_3$கு$_3$ணம் புண்யம் பர
20. த$_3$த்தநுபாலநம் பரத$_3$த்த பஹாரெண ஸ்வத$_3$த்தம் நிஷ்ப
21. லம் ப$_3$வெத்: தா$_3$ந பாலந யொர்ம்மத3ய தாநாஷ்யெ
22. யொந் பாலநம் – தா$_3$நாத் ஸ்வர்க$_3$ம் வாப்நொத் பால
23. நாத$_3$ம் யதம் பத3ம்–– சு$_3$ப$_3$மஸ்து––– (தெலுங்கு கையெழுத்து)
24. பூவிரியுங்காவறை தென்பொங்கலூற்[கா] நாட்
25. டில் வாவிதெறியும் பெரியமங்கலத்[தைக்] கூவ
26. நகாமன்னிளையாந் தென்னுறையும் ..........
27. அருளால் மறையோற்கன்னமி ..................
28. கண்டான்

# 59

# அலங்கியம் சக்ரவர்த்தி விநாயகர் கல்வெட்டு மீள்பார்வை

**சி.வீரராகவன்,** விழுப்புரம்
**து.சுந்தரம்,** கோவை

திருப்பூர் மாவட்டம்,தாராபுரம் வட்டம், அலங்கியம் ஊர், பேருந்து நிறுத்தம்

வினாயகர் கோவிலில் உள்ள கல்வெட்டு. கலியுக ஆண்டு *5013*, கார்த்திகை மாதம் *27*ஆந்தேதி *(12.12.1911)*.சார்ந்தது.இதனை தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினர் வெளியிட்ட " திருப்பூர் மாவட்டக் கல்வெட்டுகள்" நூலில் ( நூல் பதிப்பு: *2012*, கல்வெட்டு தொடர் எண் : *83/2010*) இவ்வூர் இந்து மக்கள் ஒன்றுகூடி இந்த விநாயகர் கோவிலைக்கட்டியதாகக் குறிக்கப்படுகிறது. நேரில் சென்று மீள் வாசிப்புச் செய்ததில், இங்கிலாந்து ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டுவிழா நினைவாக " சக்கரவர்த்தி வினாயகர்என்னும் பெயரில் கோவில் எழுப்பப்பட்டது என்பது தெரிகிறது.(முடிசூட்டு விழா (தி)ல்லியில் நடைபெற்றது.சரியான பாடம் இங்கே தரப்படுகிறது.

| முதல் பக்கம் | | இரண்டாம் பக்கம் | |
|---|---|---|---|
| பழைய பாடம் | திருத்திய பாடம் | பழைய பாடம் | திருத்திய பாடம் |
| 1. கலியு | கலியு | 13. விசேத | பிசேகஞ் |
| 2. காதி | காதி | 14. செய்தி | செய்த |
| 3. 5010 | 5013 | 15. ஞாபககர்த்தி | ஞாபகத்தி |
| 4. வரு.கார் | வரு. காத் | 16. ற்க்கு இந்த | ற்கு இந்த |
| 5. திகை மீ | திகை மீ | 17. வூர் இந்துக்கள் | வூர் இந்து |
| 6. 12 தேதி | 27 தேதி | 18. செய்து வை | க்கள் செ |
| 7. | சார்சு | 19. த்த பிரஸ் | ய்து வை |
| 8. சக்கிர | சக்கிர | 20. ணம் சத்தி | த்த பிரஸ் |
| 9. வாகை | வர்த்தி' | 21. ராத்து | டை சக்கி |
| 10. சிளா | கி டில் | 22. விநாயகர் | ரவர்த்தி |
| 11 | | | வினாய |
| 12 | | | |

# 60

# நீர்நிலை தொடர்பாக இரண்டாம் சரபோசி மன்னர் எழுதிய கடிதக்குறிப்பு

**த.கலாஸ்ரீதர், தஞ்சாவூர்**

*18 ஆம் நூற்றாண்டு ஆவணங்களில் நீர்நிலை ஆதாரங்களும், விவசாயமும் நாட்டு வருமானத்தில் முக்கிய இடம் வகித்துள்ளதை அறியும் வகையில் மராட்டியர் காலத் தமிழ் ஆவணங்கள் சான்றுகளாக அமைந்துள்ளன. அரசாங்கத்திற்கு பொதுமக்கள் எழுதிய கடிதங்கள், அரசு எடுத்த முடிவுகள், பற்றிய செய்திகள் அதிகம் ஆவணங்களில் காணப்படுகின்றன. இரண்டாம் சரபோசி மன்னர் காலத்தில் மாயூரம் வட்டத்தில் உள்ள மல்லீயம் பகுதியில் உள்ள அசிக்காடு என்ற கிராமத்தில் ஏற்பட்ட வாய்க்கால் நீர்ப் பிரச்சனையை தீர்க்கும்படி மாயூரம் தாலுக்கா தாசில்தார் சுப்பபிள்ளைக்கு இரண்டாம் சரபோசி மன்னர் எழுதிய கடிதமாக இந்த ஆவணம் திகழ்கிறது. தமிழ்ப் பல்கலைக் கழக சேகரிப்பில் இவ்வாவணம் உள்ளது.*

ஆவண எண் 484

| | | |
|---|---|---|
| மூட்டை எண் | : | 6கி |
| காலம் | : | 27111827 |
| நீளம் | : | 27.5 செ.மீ. |
| அகலம் | : | 18 செ.மீ. |
| பக்கம் | : | 1 |
| வரிகள் | : | முதல் பக்கம் 27 |

நாகப்பட்டினம் அசிக்காடு கிராமத்து மக்களுக்கு வாய்க்கால் வழியாகத் தண்ணீர் விடும்படிக் கூறிய விண்ணப்பக் கடிதம்.

**மூலம்**

**முதற்பக்கம்**

**உ**

மாயூரம தாலுககா தாசீல சுபபபிளளைகது யெனன வெனறால ஸ்ரீ மகாராஜா சாயபு அவாகள இலாகா சததிரததைச சொநத மலலியம கிராமதது சலம அசிககாடு கிராமதது பாயிவாயி ககால தலபபை அடைதது காவெரி வாயிககால வழியாக[2] கால மறிசலை தீரதது விடடு வடியுமபடி[3] செயிகுற மாமுலாயிருகக

*அளதபபடி அளத வாயககால வழியாய தணணீர வடிய ஓடடாமல அசிககாடு கிராமநதான தொநதிரவு செயிகிரதாயி4 தெரிய வளததீன*[5] *பெரில மாமுலபடி தணணீ*[6] *வடியுமபடி திடடம செயயச சொலலி செபடமபா மீ எயில உததிரவு அனுபபி இருகக இபபொ அசிககாடு வாயககால எனகிற வடிகால மரிசலை தீரதது விடாமல இருககுதெரயும அதனாலெ மலலீயம கிராமதது தணணீ விடாமல இருக்குரதாயி மகாராசா சாயெபபு அவாகள சீறஸதாதாறால தெரிய வருகுறபடியால மரிசல தீரநது*[7] *விடடு கணணீ வடிகிர மாமூலாயிருநதால இபபொ அதில யாதொரு தடஙகல இலலாமல உடனெ தீரநது விடடு தணணீ வடியும படியாயி திடடம செயயவும8 அதில ஏதாவது தகரா இருநதால அது விபரம உடனெ தெரியபபடுத்தவும்*

நாகபபடடிணம

1827 மவிதா நெலிசன அவாகள

நவமபற மீ 27

ஒபபம

1.ஸ்ரீமகாராஜா சாயபு = இரண்டாம் சரபோசி மன்னர்

2.காவெரி வாயிககால வழியாக = காவிரி வாய்க்கால் வழியாக

3.வடியூம்படி = வடியும்படி

4. தொநதிரவு செயிகுரதாயி = தொந்தரவு செய்வதால்

5. தெரிய வநததீன = தெரிய வந்ததன்

6. தண்ணீ = தண்ணீர்

7. தீரநது = தீரந்து

8. வடியும படியாயி திடடம் செயயவும = வடியும்படியாய்த் திட்டமிடவும்

9. 1827 = 1827 இங்கிலிஷ் வருடம்

**விளக்கம்**

மாயூரம் தாலுக்கா தாசில்தார் சுப்பபிள்ளைக்கு என்னவென்றால் ஸ்ரீ மகாராஜா சாயபு அவர்கள் இலாக்கா சத்திரத்தைச் சேர்ந்த மல்லியம்கிராமத்து சலம் அசிக்காடு கிராமத்து பாய்வாய்க்கால் தலைப்பை அடைத்து

காவேரி வாய்க்கால் வழியாக கால் மரியலை (தடையை) தீர்த்துவிட்டு வடியும்படி செய்வது மாமூலாக இருக்க அந்தப்படி அந்த

வாய்க்கால் வழியாக தண்ணீர் வடிய விடாமல் அசிக்காடு கிராமந்தான் தொந்தரவு செய்கிரதாக தெரிய வந்ததன்பேரில் மாமூல்படி தண்ணீர் வடியும்படி திட்டம் செய்யச் சொல்லி செப்டம்பர் மாதம் 7ந் தேதியில் உத்தரவு அனுப்பி இருக்க தற்போது அசிக்காடு வாய்க்கால் என்கிற வடிகால் மரியல் திரந்து விடாமல் இருக்கிரதாகவும் அதனால் மேற்படி மல்லியம் கிராமத்து தண்ணீர் விடாமல் இருக்குரதாக மகாராசா சாயெப்பு அவர்கள் (இரண்டாம் சரபோசி மன்னர் அவர்கள்) சீறஸ்தாதாரால் தெரிய வருகிரபடியால் மேற்படி அடைப்பை திரந்து விட்டு தண்ணீர் வடிகிர மாமூலாயிருந்தால் தற்போது அதில் யாதொரு தடங்கலும் இல்லாமல் உடனே திரந்து விட்டு தண்ணீர் வடியும்படியாய் திட்டம் செய்யவும் அதில் ஏதாவது தகராறாய் இருந்தால் அது விபரம் உடனடியாக தெரியப்படுத்தவும்.

நாகப்பட்டிணம்

1827 இங்கிலீசு வருடம் — மவிதர் நெல்சன் அவர்கள்

நவம்பர் மாதம் 27ந் தேதி — ஒப்பம்.

# 61

# புதிய வெயியீடுகள்

**இல.தியாகராஜன், வேட்டவலம் வரலாறு, இலட்சுமணன் அரங்கநாயகி பதிப்பகம், வேட்டவலம், 2014, பக்கம் 28+530 படங்கள் 240 விலைரூ.400.**

**மு**னைவர் இல. தியாகராஜன் தமிழக வரலாற்றாய்வாளர் களுக்கும் ஆர்வலர்களுக்கும் நன்கு பழக்கமானவர். பேராசிரியர் தங்கவேலுவும் இவரும் இணைந்து எழுதிய சம்புவராயர் வரலாறு ஓர் அரிய படைப்பாகும். மேலும் அரியலூர் வட்டார வரலாற்றுக்கு புத்தொளி கொடுத்தவர் இவர். புதுவை பிரெஞ்சு நிறுவனம் ஏற்று நடத்திய கங்கை கொண்ட சோழபுர வரலாற்றாய்வுத் திட்டத்தில் இவருக்கும் முக்கிய பங்கு உண்டு. இவர் எழுதியுள்ள ”வேட்டவலம் வரலாறு ” வட்டார வரலாற்றிற்கு அளித்துள்ள இன்னொரு பெரிய பங்களிப்பு. தான் பிறந்த ஊர் என்ற முறையிலும் ஆய்வாளர் என்ற வகையிலும் இவ்வரலாற்றை அக்கறையோடு படைத்துள்ளார். நாடுகள் என்ற பெரிய நிலப்பரப்புகளுக்கு மட்டுமல்லாது ஒவ்வோர் ஊருக்கும் வரலாறு உண்டு என்பதைத் தெளிவுபடுத்துகிறது இந்நூல்.

வேட்டவலம் இன்றைய திருவண்ணாமலை மாவட்டத்தில் தென் கோடியிலுள்ள பேரூர். இவ்வூரைச் சுற்றி 30 ச.கி.மீ. நிலப்பரப்பின் தொல்லியல் மற்றும் கல்வெட்டு செவிவழிச் செய்திகள் ஆகியவற்றை முழுமையாக ஆய்ந்து தொகுத்து இந்நூலை ஆக்கியுள்ளார் இவர். தமிழக வரலாற்றின் ஒரு கூறு என்ற வகையில் பரந்துப்பட்ட தமிழக வரலாற்றுச் செய்திகளையும் ஆங்காங்கே சுட்டிக் காட்டி வேட்டவலம் வரலாற்றை எழுதியுள்ளார்.

அண்மைக் காலம் வரை இப்பகுதியை ஆண்டுவந்த வேட்டவலம் ஜமீன் குடும்ப வரலாற்றை விரிவாகச் சொல்வதை நோக்கமாகக் கொண்டு அதன் பின்புலமாக தொல்பழங்காலம் மற்றும் வரலாற்றுக்காலச் செய்திகளை நிலப்படம் காட்டி விளக்கியுள்ளார். சங்க காலம் முதல் இங்கு ஆண்ட பல பேரரசு குலங்கள் (பல்லவர், சோழர், பாண்டியர், போசளர் விஜயநகர மற்றும் நாயக்க அரசுகள்) குறுநில அரசுகள் (மலையமான், வாணர், மிலாடர்) விட்டுச் சென்ற இலக்கிய மற்றும் கல்வெட்டுச் சான்றுகள் வாயிலாக வரலாறாக வெளிப்படுத்தியுள்ளதுடன் இச்சான்றுகளை விளக்குவதிலுள்ள வேறுபட்ட கருத்துக்களையும்ம் பதித்துள்ளார்.

வேட்டவலத்திற்கும் இராமலிங்க அடிகளார் சன்மார்க்க சங்கத்திற்கும் இருந்த நெருக்கத்தையும் இந்நூலின் மூலம் அறிகிறோம். இப்பகுதியில் வாழ்ந்த வாழ்ந்து வருகின்ற பல்வேறு சமூகப்பிரிவினர் பற்றியும் இந்நூல் எடுத்தியம்புகிறது. பொதுவாக வரலாற்று நூல்களில் இதுபோன்ற சமூகச் செய்திகள் பல குறைபாடுகளுடன் எழுதப்படும்.

ஆனால் இந்நூலின் மூலம் மக்களின் எல்லா பிரிவினருக்கும் வரலாற்று வளர்ச்சியில் பங்கு உண்டு என்பதை எடுத்தியம்புகிறது. ஆனால் முன் சென்ற அரச குலங்களுக்கும் இப்பொழுதுள்ள இனப்பிரிவுகளுக்கும் தொடர்பு உண்டு என நேரிடையாக சொல்வதில் உள்ள சிக்கல்களையும் இவ்வாசிரியர் கருத்தில் கொண்டுள்ளார். விருப்புவெறுப்பின்றி ஒருபாற் கோடாது செய்திகள் இந்நூலில் சொல்லப்பட்டுள்ளது பாராட்டுக்குரியது.

மூலச் சான்றுகளை யாவரும் அறிந்து கொள்ளும் வகையில் அவற்றை நிலப்படமாக பிற்சேர்க்கையில் கொடுத்திருப்பதும் வரவேற்கத் தக்கது. மேலாய்வு செய்வோருக்கு இது பயன்படும். சொந்த ஊர் வரலாறு என்பதால் ஆசிரியர் தான் பழகிய தோழர், உறவினர், ஆசிரியர் முதலிய பலரையும் ஒளிப்படங்கள் வாயிலாக நன்றி பாராட்டுகின்றார்.

நன்றிக்கடப்பாடு என்றாலும் இதனை வரலாற்று நூலில் மிகைபடச் சொல்லியிருப்பது இது ஒரு தன்வரலாற்று நூலோ (autobiography) என்ற எண்ணத்தைப் படிப்பவர் மனதில் தோற்றுவிக்கிறது. அடுத்த பதிப்பில் இதனை தனியாகப் பிரித்து வெளியிடுவது நல்லது.

இந்நூலில் உள்ள சில கருத்துக்கள் மேலும் ஆய்வு செய்யவேண்டியவை. குறிப்பாக மலையமான், மிலாடர் ஒரு குலம் என்ற கருத்து ஆய்வுக்குரியது. பிற்காலத்தில் பல அரசகுலங்களுக்குள் மண உறவுகள் ஏற்பட்டன என்றாலும் இக்குலங்கள் தொடக்கத்தில் வெவ்வேறானவை என்பதை ஆசிரியர் கொடுத்துள்ள கல்வெட்டுச் சான்றுகளே உறுதி செய்யும். மலையமான் குலம் சங்ககாலம் முதல் இப்பகுதியில் இருந்துவரும் குலங்களில் ஒன்று. ஆனால் மிலாடர் அல்லது மலாடர் எட்டாம் நூற்றாண்டளவில் தான் இங்கு வரலாற்றில் அறிமுகம் ஆகின்றனர். அதற்கு முந்தைய நூற்றாண்டுகளில் பல அரச குலங்களும் மக்களும் இடம் பெயர்ந்திருக்கிறார்கள் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

எனினும் இக்கருத்துக்கள் மேலும் ஆய்வு செய்ய வேண்டியவை. பல மேலாய்வுகளுக்கும் வட்டார வளர்ச்சிப் பெருக்கத்துக்கும்

இந்நூல் அடிப்படையாக அமையும் என்பதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் இருக்க முடியாது.

**ஒய்.சுப்பராயலு,** கோயமுத்தூர்

**ஒய். சுப்பராயலு மற்றும் சு. இராசவேலு, விஜயநகர அரசர்க ளின் கல்வெட்டுகள், தொகுதி–5, பகுதி 1 இந்திய வரலாற்று ஆய்வு மையம், புதுதில்லி மற்றும் ப்ரமோஸ் புக்ஸ், புது தில்லி,பக்கங்கள்**-I-XLVIII+498 , **கல்வெட்டுப்படங்கள்8, விலை 1850/** ( Y.Subbarayalu and S. Rajavelu (Editors) Inscriptions of the Vijayanagara Rulers, Vol.V part I (Tamil Inscriptions), Published by Indian Council of Historical Research, New Delhi and Primus books, New Delhi,2014, Pages I-XLIII +498+Photos -8, Price Rs.1850/-)




இந்திய வரலாற்று ஆய்வுக் கழகம் இந்தியாவில் இருக்கின்ற கல்வெட்டுக்களை பிற மொழி ஆய்வாளர்களும் படித்து ஆய்வுகள் மேற்கொள்ள ஆங்கிலத்தில் கல்வெட்டின் மூலப்பாடங்களை தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. இந்தியாவின் மிகச் சிறந்த கல்வெட்டு ஆய்வாளர்களையும் பேராசிரியர்களையும் இக்கழகம் திட்ட நல்கையின் வழியாக நூல்களைப் பதிப்பித்து வருகின்றது. தமிழகத்தில் பல்லவர் கால கல்வெட்டுகளை பேராசிரியர் தி.வி. மகாலிங்கம் பதிப்பித்து வெளியிட்டார். இதே போன்று தொடர்ந்து தென்னிந்தியப் பேரரசுகளின் கல்வெட்டகள் பல்வேறு அறிஞர் பெருமக்களால் வெளியிடப்பட்டன.

இதன் தொடர்ச்சியாக தற்பொழுது வெளிவந்திருக்கும் நூல் விஜய நகர அரசர்களின் கல்வெட்டுகள் தொகுதி–5, பகுதி–1, தமிழ்க் கல்வெட்டுகள் என்னும் நூலாகும். இந்நூலின் ஆசிரியர்கள் இருவரும் தென்னிந்தியக் கல்வெட்டுக்களில் ஆழ்ந்த புலமையும் பட்டறிவும் மிக்கவர்கள். அவ்வகையில் இந்நூலைத் திறம்பட பதிப்பித்து ஆய்வுலகிற்கு அளித்துள்ளனர். தற்பொழுது வெளிவந்துள்ள நூல் விஜய நகர அரசர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபின் 1364 ஆம் ஆண்டிலிருந்து 1509 ஆம் ஆண்டு வரை உள்ள 576 கல்வெட்டுக்களைப் பதிப்பித்து

அக்கல்வெட்டுகளின் சிறப்புச் செய்திகளை குறிப்புகளாகத் தந்துள்ளனர். வழக்கத்திற்கு மாறாக ஏற்கனவே அறிந்த விஜய நகர அரசர்களின் வரலாற்றை முன்னுரையில் தெரிவிக்காது தாங்கள் பதிப்பித்துள்ள கல்வெட்டுகளின் முக்கிய கூறுகளை மட்டுமே ஆய்வாளர்களுக்குப் பயனுறும் வகையில் சுருக்கமாகத் தெரிவித்துள்ளனர்.

விஜய நகர மன்னர்களின் கல்வெட்டுகள் தமிழகம் மட்டுமன்றி கருநாடகத்தில் கோலார், பெங்களூரு மாவட்டங்களில் கிடைக்கின்ற தமிழ்க் கல்வெட்டுகளையும் ஆந்திராவின் சித்தூர் மாவட்டத்தில் கிடைக்கின்ற கல்வெட்டுகளையும் இந் நூலில் பதிப்பித்து உள்ளனர்.

கால வரிசைப்படியும் அரச வரிசைப் படியும் கல்வெட்டு கிடைக்கின்ற ஊர், வட்டம் மாவட்டம் ஆகியவற்றைப் படிப்பவர்களுக்குப் புரியும் வகையில் அட்ட வணைகளை இந்நூலில் இடம் பெறச் செய்துள்ளனர். ஒரு மன்னரின் பெயரே பல்வேறு வகையில் கல்வெட்டுகளில் குறிக்கப் பட்டுள்ளதை ஒப்பு நோக்கி ஒருங்குபடுத்தி கல்வெட்டுகளைப் பதிப்பித்துள்ளனர்.

தமிழகத்தில் வட மாவட்டங்களில் மட்டுமே விஜய நகர அரசர்களின் கல்வெட்டுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளதையும் மதுரை அதனை அடுத்துள்ள தென் மாவட்டங்களில் அவை கிடைக்கப்பெறாததையும் ஆசிரியர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். இக்கல்வெட்டுகளை ஆய்வு செய்வதின் மூலம் முன்னர் இருந்த நாட்டுப் பிரிவுகள் மறைந்து விஜய நகர அரசர்களின் காலத்தில் புதிய பிரிவுகள் ஏற்பட்டுள்ளதையும் அவை பற்று, உசாவடி, சாவடி என வழங்கப்பெற்றதையும் குறிப்பிடுகின்ற ஆசிரியர்கள் தமிழகத்திலும் சித்தூர் பகுதியிலும் பல கோயில்கள் கொடைகள் பல பெற்று புத்தொளி பெற்றதையும் குறிப்பாக திருமலை–திருப்பதி, திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம் திருக்கழுக்குன்றம் பாபநாசம் போன்ற இடங்கள் வழிபாட்டு முக்கிய கேந்திரங்களாக விளங்கியதையும் சுட்டிக்காட்டியுள்ளனர்.

இந்நூலின் தொடர்ச்சியாக மேற்கொண்டு கிருஷ்ண தேவராயரின் காலம் தொடங்கி இதுவரை பதிப்பிக்கப்பட்டு வெளிவந்துள்ள விஜயநகர அரசர்களின் கல்வெட்டுகள் அடுத்த தொகுதியில் வெளிவர உள்ளதற்கு முன்னோடியாக இந்நூல் அமைவதுடன் இதுவரை பல்வேறு நிறுவனங்களால் படி எடுக்கப்பட்டு பதிப்பிக்கப்பட்டு பல்வேறு தொகுதிகளிலும் இதழ்களிலும் வெளிவந்துள்ள விஜய நகர அரசர்களின் கல்வெட் டுகளை ஒருங்கிணைத்து பாடங்களைச் சீரமைத்து உரிய முக்கிய

கல்வெட்டுப்படங்களுடனும் படிப்பவர் எளிதில் தெரிந்து கொள்ளும் வன்னம் இறுதியில் சொல்லடைவுடனும் ஒரே தொகுதியாகப் பதிப்புத்துள்ள ஆசிரியர்களையும் இந்நூலினை அழகாகவும் நேர்த்தியாகவும் அச்சிட்டுள்ள இந்திய வரலாற்று ஆய்வு நிறுவனம் மற்றும் ப்ரமோஸ் புக்ஸ் நிறுவனம் ஆகியோரும் பாரட்டுக்குரியவர்கள்.

**ந.அதியமான்,** தஞ்சாவூர்

**முனைவர் ரா. நிரஞ்சனா தேவி, ஆர்.இராமகிருஷ்ணன் "கரிகாலன், மகா காவிரியை பாசனப் பயன்பாட்டிற்கு உட்படுத்தியவர்" ஈஸ்வர் அச்சகம், சென்னை, 2013 ,,பக்கங்கள் 601 + வண்ணப் படங்களுடன் விலை695/**(R,Niranjchanadevi & R. Ramakrishnan, King Karikalan, The Great- The Domesticator of the River Kaviri for irrigation,Eswar Press, Chennai, 2103, Pages-601 including colour photos, price-695/-)

சங்க இலக்கியங்கள் சுட்டும் சங்ககாலச் சோழர்களுள் பெரிதும் பேசப்படுகின்ற மன்னன் கரிகால்சோழன். அம்மன்னனுடன் தொடர்புபடுத்தி குறிக்கப்பெறும் காவிரியாறு தமிழகத்தின் வளத்திற்குப் பெருமை சேர்கசும் ஆறுகளுள் முதன்மையானது. தற்காலத்தில் இந்தியர்கள் காவிரி ஆறு குறித்து மிக அதிக அளவில் பேசுகின்ற சூழலில் வரலாறு,இலக்கியச் சான்றுகளை ஒருங்கினைத்தும் கள ஆய்வுத் தரவுகளில் பங்குபெற்றும் நேரிடையாகப் பல இடங்களுக்கும் சென்றும் இந்நூலை எழுதி யுள்ளார்.

செல்வி ரா. நிரஞ்சனாதேவி தனது தந்தையின் உதவியுடன் உடல் வருத்தி மனம் தளராது இச்சீரிய நூலை எழுதியுள்ளமைக்கு ஆய்வுலகம் நன்றி பாரட்டும். படிக்கும் காலத்திலி ருந்தே ஆசிரியர் நிரஞ்சனாதேவி தான் எடுத்துக்கொண்ட கடினமான ஆய்வுத் தலைப்புகளையும் மனம் தளராது ஆய்வு செய்து நூல்களாக வெளியிட்டவர். உடல் நலன் குன்றியும் மூளை அறுவைச் சிகிச்சைப் பெற்றும் இந்நூலை எழுதுவதற்காகக் கடினமானக் களப்பணிகள் மேற்கொண்டு தரவுகளைச் சேகரித்து எழுதியுள்ளமை பாராட்டத்தக்கது.

இந்நூல் கரிகாலனைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. கரிகாலன் குறித்த இலக்கியத் தரவுகள் கல்வெட்டுத் தரவுகளை ஒருங்கிணைக்கின்றது. கல்லனையைக் கரிகாலன் கட்டியதாக வரலாற்றுச் செய்திகள் இல்லை யெனினும் அம்மன்னன் காவிரியின் இருபக்கக் கரைகளையும் உயர்த்தி நீர்ப்பாசன மேலாண்மைக்கு வித்திட்டவன் என்பதை அனைவரும் அறிவர்




எனவே தான் பொன்னி நாடன் என்றும் வளவன் என்றும் புகழப் படுகின்றான் அவனது பெயரில் பெருவளத்தான் காவ்வாய், ஊர்ப் பெயர்கள் இன்றும் காவிரி பாயும் பகுதிகளில் உள்ளன என்பது அம்மன்னன் காவிரியை நீர்ப்பாசனத்திற்கு உட்படுத்தினான் என்பதைப் பறைசாற்றுகின்றது இந்நூலின் ஒவ்வொரு தலைப்பும் நுட்பமாக ஆய்வு செய்யப்பட்டு எழுதப்பட்டுள்ளது

இந்நூல் 13 இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது இறுதியில் முடிவுரை மற்றும் நூலின் நோக்கம் குறிப்பிடப்பட்டுள்ளன. நூல் கரிகாலனை மையப் படுத்தி எழுதியுள்ளதால் அவனுடன் தொடர்புடைய பிற செய்திகளும் காணப் படுகின்றன. நூலின் இறுதியில் பயன்படுத்திய நூற்பட்டியல் சொல்லடைவு போன்றவை கொடுக்கப்பட்டுள்ளது தரமான ஒளிப்படங்கள் நூலில் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. இலக்கியத்துடன் தொல்லியல் கல்வெட்டியல் மற்றும் தற்கால இலக்கியத் தரவுகளும் பயன்படுத்தியுள்ளமை பாரட்டத்தக்கது

தரமான தாளில் அச்சிடப்பட்டு இருப்பினும் இந்நூலில் தமிழ்ச் சொற்கள் உச்சரிப்பு முறையில் இருவகையாகப் பயன் படுத்தியுள்ளமை படிப்பவர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தும், எடுத்துக் காட்டாக தமிழ் உச்சரிப்புக்குறியீடுகளுடன் (Dialectical marks) ஆங்கில மிகுதி எழுத்துக்கள் (thanjavoor) இட்டும் இருவகையில் தமிழ்ச் சொற்கள் எழுதப்பட்டுள்ளன. குறியீடு முறையை முறையாகப் பயன்படுத்தி இது போன்ற இரு வகை முறைகளைத் தகர்த்திருக்கலாம். தமிழர்கள் கரிகாலன் குறித்தும் காவிரி குறித்தும் அவன் காலத்தில் வாழ்ந்த பிற மன்னர்கள் குறித்தும் அறிவதற்கும் மேலும் ஆய்வு செய்வதற்கும் ஆசிரியர். மிகச் சிறந்த நூலை உலகிற்கு வெளிப்படுத்திய உள்ளார். அவர் முயற்சிக்குப் பாராட்டுகள்

**சு.இராசவேலு**, தஞ்சாவூர்

# தமிழகத் தொல்லியல் கழகம்
# 23ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் செயலர் அறிக்கை

**த**மிழகத் தொல்லியல் கழகத்தின் 23 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு மற்றும் 2 4 ஆவது ஆவணம் இதழ் வெளியீட்டு விழா விழுப்புரம் கே.சி.பி. திருமண மண்டபத்தில் 2013 ஆம் ஆண்டு ஜூலை திங்கள் 20–21 நடைபெற்றது. முன்னதாக 15.07.2014 முதல் 18.07.2013 தமிழகத் தொல்லியல் கழகத்தின் கல்வெட்டுப் பயிற்சி முகாம் ஜெ.ஜி. பள்ளி வளாகத்தில் நடைபெற்றது. இப்பயிற்சியில் தமிழகத்திலிருந்தும் பாண்டிச்சேரி பகுதிகளிலிருந்தும் ஏறக்குறைய 55 மாணவர்கள் கலந்து கொண்டு கல்வெட்டுகளை படிப்பதற்கு எழுத்துக்கள் பயிற்சியையும் கல்வெட்டு பற்றிய அறிமுகத்தையும் தெரிந்து கொண்டனர்.. இக்கல்வெட்டுப் பயிற்சியை ஒருங்கிணைப்பாளாராக இருந்து முனைவர் சு. இராசகோபால் நடத்தினார்.

இக்கல்வெட்டுப்பயிற்சி வகுப்பைப் பேராசிரியர்கள் எ.சுப்ப ராயலு, சு.இராசவேலு, க.இராஜன், கோ. விஜயவேணு கோபால், கல்வெட்டு மற்றும் தொல்லியல் அறிஞர்கள் திரு. கி.ஸ்ரீதரன், முனைவர் அ.பத்மாவதி, முனைவர் அர.பூங்குன்றன், முனைவர் ப.வெங்கடேசன், முனைவர் வெ.வேதாச்சலம், முனைவர் ந.அதியமான், திரு.வீரராகவன் ஆகியோர் நடத்தினர். நான்கு நாட்கள் நடைபெற்ற இப்பயிற்சி மாணவர்களுக்குப் பயனுள்ளதாக அமைந்தது. 20.07.2013 அன்று வி.ஆர்.பி. பள்ளி நிருவாகத்தினர் இலவசமாக வழங்கிய பேருந்தில் விழுப்புரம் சுற்றியுள்ள திருவாமாத்தூர், பனைமலை மற்றும் மண்டகப்பட்டு ஆகிய இடங்களுக்கு தொல்லியல் சுற்றுளாவை மாணவர்கள் மேற்கொண்டனர்.

20.07.2013 அன்று தமிழகத் தொல்லியல் கழகத்தின் தொடக்கவிழா காலை 10 மணியளவில் துவங்கியது. கழகத்தின் தலைவர் முனைவர் அர.பூங்குன்றன் விழாவிற்குத் தலைமைத் தாங்கினார்.

கல்வெட்டாய்வாளர் திரு வீரராகவன்விழாவிற்கு வந் திருந்த அனைவரையும் வரவேற்றுப்பேசினார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் ம.திருமலை தொடக்கவிழாவைத் தொடங்கி வைத்து சிறப்புரை ஆற்றினார். கழகத்தின் நிறுவனர் பேராசிரியர் எ.சுப்பராயலு தமிழகத் தொல்லியல் கழகத்தின் நோக்கம் பற்றி விளக்கினார்.

இவ்விழாவில் விழுப்புரம் மாவட்டத்தின் காவல்துறைக் கண்காணிப்பாளர் திரு. மனோகர் இ.கா.ப. அவர்கள் கலந்து கொண்டு ஆவணம் இதழ் *24* யை வெளியிட்டார். இதனைப் பதிப்புச் செம்மல் திரு. ம. இலட்சுமணன் செட்டியார் பெற்றுக் கொண்டார். இக்கருத்தரங்கினை ஒட்டி திரு சி.வீரராகவன் ஏற்பாடு செய்திருந்த தொல்லியல் கண்காட்சியினை ஸ்ரீ. சிவஞான பாலய சுவாமி *20* ஆம் பட்டம் குரு மகா சந்நிதானம் மயிலம் பொம்மாபுர ஆதினம் அவர்கள் திறந்து வைத்து அருளுரை வழங்கினார். தொடக்க விழா நிகழ்ச்சியினை முனைவர் சாந்தலிங்கம் தொகுத்து வழங்க கழகத்தின் செயலர் முனைவர் இல. தியாகராஜன் நன்றியுரை நிகழ்த்தினார்.

இனிதே நடந்த தொடக்க விழாவிற்குப்பின் முதல் அமர்வு முனைவர் வேதாச்சலம் தலைமையில் நடைபெற்றது. திரு. வீரராகவன் முன்னிலை வகித்தார். இவ்வமர்வில் கட்டுரைகள் வாசிக்கப்பட்டன. இரண்டாவது அமர்விற்கு முனைவர் இராசகோபால் தலைமையேற்க முன்னிலையை கி.ஸ்ரீதரன் ஏற்றார். இரண்டாம் அமர்வுக்குப்பின் கோவிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவை முனைவர் ம.காந்தி அவர்கள் நிகழ்த்தினார். அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கு முனைவர். பூங்குன்றன் தலைமை ஏற்க பேராசிரியர் சு. இராசவேலு முன்னிலை வகித்தார்.

*21.07.2013* அன்று காலை தமிழகத் தொல்லியல் கழகத்தின் கருத்தரங்கில் கலந்து கொண்ட பேராளர்களை திப்பூர் ஜெ.ஆர். அசோசியேட்ஸ் உரிமையாளர்கள் திரு இராமச்சந்திரன், ஜெயலட்சுமி அவர்கள் ஏற்பாடு செய்திருந்த பேருந்துகளில் விழுப்புரம் பகுதியிலுள்ள எசாலம் எண்ணாயிரம், பிரமதேசம்,அகரம் சிந்தாமணி ஆகிய தொல்லியல் சிறப்பு வாய்ந்த இடங்களுக்கு சுற்றுலா அழைத்துச் செல்லப்பட்டனர். திரு சந்திரமூர்த்தி துணை இயக்குநர் தொல்லியல் துறை ஒய்வு அவ்வவ் பகுதிகளின் சிறப்புகளைப் பேராளர்களுக்கு நேரிடையாக விளக்கினார்.

அன்று காலை *10. 30* மணியளவில் சுற்றுலா முடிந்த பின்பு மூன்றாவது அமர்வு தொடங்கப்பட்டது. தலைவராக முனைவர் கி.ஸ்ரீதரனும் முன்னிலை முனைவர் பா.ஜெயக்குமாரும் மேற்கொண்டனர். இதனைத் தொடர்ந்து பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் நிறுவிய தி.ந. சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவை உடல் நலம் கருதி நேரில் கட்டுரை வாசிக்க இயலாத பேராசிரியர் புலவர் இராசு அவர்களின் கட்டுரையை முனைவர் வீ.செல்வகுமார் வாசித்தார்.

கருத்தரங்கின் 4 ஆம் அமர்வுக்கு கலைமாமணி புலவர் ந.வெங்கடேசன் தலைமை வகிக்க முனைவர் த. இரமேஸ் முன்னிலை வகித்தார்.

நிறைவு விழா அன்று மாலை இனிதே நடைபெற்றது. நிறைவு விழாவின் தலைவராக திரு. சி.வீரராகவன் தலைமையுரை ஆற்றினார். இக்கருத்தரங்கை சீரும் சிறப்புடனும் நடத்திய திருமதி மங்கை இராகவன், திரு வீரராகவன், திரு சசிதரன், திருமதி இந்துமதி, திரு. ஜெயக்குமார், சத்யா பேபி கீதிகா திருப்பூர் கிருஷ்ணமூர்த்தி, நடராஜ் ஐ.டி.ஐ நிருவாகிகள் ஆகியோரை அனைவரும் பாராட்டினர். நிறைவு விழாவில் கருத்தரங்க நிகழ்வுகளை பேராசிரியர் கோ.விஜயவேணுகோபால் தொகுத்து வழங்கினார். நிகழ்ச்சியின் நிறைவாகக் கல்வெட்டுப் பயிற்சியில் கலந்து கொண்டவர்களுக்கு ரோட்டரியன் வீ.ரா. சசிதரன் சான்றிதழ் வழங்கி சிறப்பித்தார். திருமதி மங்கையர்க்கரசி வீரராகவன் கருத்தரங்கில் கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி நவின்றார். அத்துடன் 23 ஆவது கருத்தரங்கம் இனிதே முடிவுற்றது.

**19.07.2014** **இல.தியாகராஜன்**, அரியலூர்

# அஞ்சலி

## பேராசிரியர் அறிவுடைநம்பி



**த**மிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் புதுவை மத்தியப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்த முனைவர் அறிவுடைய நம்பி இயற்கை எய்தினார். 1954 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 6ஆம் நாள் இவர் பிறந்தார். இவரின் தந்தையார் சாம்பசிவனார் மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைப் பேராசிரியராக இருந்தவர். தாயார் மனோன்மணியம்மையார். புதுவை மத்திய பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகச் சேருவதற்கு முன் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்தவர். இதுவரை 40க்கும் மேற் பட்ட நூல்களை எழுதியும் பதிப்பித்தும் வெளியிட்டவர். பல்வேறு கல்வி அமைப்புகளில் உறுப்பினராக இருந்து பல ஆய்வுக்கட்டுரைகளை எழுதியுள்ளார். பேராசிரியர் மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

## பேராசிரியர் இரா.பவுன்துரை



**த**மிழகத் தொல்லியல் கழகத்தின் உறுப்பினர் முனைவர் இரா. பவுன்துரை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் கட்டடக்கலைத்துறையில் பேராசிரிய ராகப் பணிபுரிந்து 2013 ஆம் ஆண்டு பணி ஓய்வு பெற்று 2014இல் இயற்கை எய்தினார். இப்பல்கலைக்கழகத்தின் அருங்காட்சியகத்தில் தொழில் நுட்ப உதவியாளராக சேர்ந்த இவர் கட்டடக்கலைத்துறையில் இணைந்த பின் நூல் கள் பல எழுதியுள்ளார். பேராசிரியர் மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

## முனைவர் மா.கணேசன்

**க**டந்த 8.4.2014 செவ்வாய்க்கிழமையன்று தம் 82ஆம் அகவையில் இயற்கை எய்திய கல்வெட்டறிஞர் முனைவர்

திரு.மா.கணேசனார் அவர்கள், தற்போதைய திருப்பூர் மாவட்டத்திலுள்ள அவிநாசியில் 14.11.1932. பிறந்து வளர்ந்தவர். செல்வச்செழிப்பு இல்லாத எளிய குடும்பச் சூழலில் வளர்ந்த அவர், தம் குடும்பம் அமைத்துத் தரமுடிந்த வாய்ப்பினைக்கொண்டு எஸ்.எஸ்.எல்.சி என்னும் பள்ளி இறுதி வகுப்பு மட்டுமே படித்துமுடித்தார். ஆசிரியப்பயிற்சி இல்லாமலே சிறிது காலம் ஆசிரியப்பணி ஆற்றியபின்னர் அப்பணியின்மூலம் சேர்த்த பணத்தைக்கொண்டும், தம் தமையனாரின் உதவிகொண்டும் திருப்பராய்த்துறையில் புலவர் பட்டம் படித்துமுடித்து ஆசிரியர் பணியில் அமர்ந்தார். சேவூர், காரமடை, அவிநாசி ஆகிய ஊர்களில் ஆசிரியப்பணி புரிந்த அவர், தம் நேரிய உழைப்பால் எம்.ஏ., பி.டி. ஆகிய பட்டங்களை முடித்து முனைவர் ஆய்வுப்பட்டத்தையும் பெற்றார். கோவை அரசு கலைக்கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார். கொங்கு நாட்டுப் பாடல்பெற்ற தலங்களிலுள்ள கல்வெட்டுகள் ஓர் ஆய்வு" என்ற பொருளில் முனைவர் ஆய்வை மேற்கொண்டார். கோவை மாவட்டக் கல்வெட்டுகளைத் தொகுத்து "கொங்கு நாட்டுக்கல்வெட்டுகள் கோயம்புத்தூர் மாவட்டம்" என்னும் நூலாகப் பதிப்பித்துள்ளார். புதுதில்லி இலக்கிய வரலாற்று ஆய்வுப்பெருமன்றத்தின் துணையுடன் 1992 முதல் 1995 முடிய பாரதியார் பல்கலைக்கழகத்தில் நிலவுடைமையும் வேளாண்மை வளர்ச்சியும் என்ற தலைப்பில் ஆய்வை நிறைவு செய்து தந்துள்ளார். கழகம் நடத்திய கருத்தரங்க விழாவுக்குக் கடைசியாக 2012 ஆம் ஆண்டு கோட்டையூர் வந்திருந்தார்.



# கட்டுரையாளர் முகவரி

**செல்வி. இரா, அகிலா,**
முனைவர் பட்ட ஆய்வாளார்
வரலாற்றுத்துறை,
அரசுக் கலைக்கல்லூரி, அரியலூர்

**முனைவர். ந. அதியமான்,**
பேராசிரியர், கடல்சார் வரலாறு
மற்றும் கடல்சார் தொல்லியல்
துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 10

**திரு. அ.அன்பு**
முனைவர் பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத்துறை,
அரசுக் கலைக்கல்லூரி, அரியலூர்

**திரு. பா.ஆத்மநாதன்,**
6எ, சுரேந்திர நகர், 5ஆம் தெரு
பொன்மேனி, மதுரை

**முனைவர். ச.இரவி,**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை
பூ.சா.கோ.கலைக்கல்லூரி
பீளமேடு, கோவை

**முனைவர்.சு.இராசகோபால்,**
இராஜாஜி இல்லம்,
7,முதல்தெரு,
வெங்கடேஸ்வரா நகர்,
அடையாறு, சென்னை20

**முனைவர் சு.இராசவேலு,**
பேராசிரியர், கடல்சார் வரலாறு
மற்றும் கடல்சார் தொல்லியல்
துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 10

**முனைவர். செ.இராசு,**
“புலவர் பூங்குடில்”,
58/2,திரு.வீ.க. நகர் சாலை,
பாலக்காட்டுத் தோட்டம்,
ஈரோடு 638 011.

**திரு. கரு.இராசேந்திரன்**
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை 622 420

**திரு. பொ.இராசேந்திரன்**
கல்வெட்டாய்வாளர்
7/805 பக்தவத்சலம் தெரு,
ஆழ்வார் நகர், நாகமலை
மதுரை 625 019

**திரு. எம்.எஸ்.இராம்ஜி**
கீழக்கொளத்தூர்
அரியலூர் வட்டம்
பெரம்பலூர் மாவட்டம் 621 715

**திரு. உடுமலை இரவி**
ரவி அச்சகம்
2, புறவழிச் சாலை
புதிய பேருந்து நிலையம்
அருகில் உடுமலைப்பேட்டை
642126
திருப்பூர் மாவட்டம்

**திரு.ரா.உதயகுமார்,**
17,அருஞ்சுணை தெரு
கலைவாணி நகர்
அவணியாபுரம்,
மதுரை
625 012

**செல்வி,கு.கண்ணகி,**
முனைவர்பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத்துறை
அரசுகலைக்கல்லூரி
அரியலூர் 621 713

**முனைவர்.உ. கருப்பதேவன்**
2/304, டாக்டர்
இராதாகிருஷ்ணன் தெரு
குறிஞ்சி நகர் நாராயணபுரம்,
மதுரை

**முனைவர். த.கலாஸ்ரீதர்**
உதவிப்பேராசிரியர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர். 613 010

**முனைவர். ப.கலைச்செல்வன்,**
உதவிப்பேராசிரியர்,
வரலாற்றுத்துறை,
அண்ணாமலைப்
பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர் 608 002.

**செல்வி. க.ஆ.கவிதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
எண்; 47/1 முத்து முதலி தெரு
வியாசர்பாடி, சென்னை 600039

**முனைவர், ம.காந்தி,**
875, பேஸ் 2, 7ஆவது
குறுக்குத்தெரு
சத்துவாச்சாரி, வேலூர் 632009

**திருமதி. த. காமாட்சி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
எண்; 4/403, எம்.ஜி.ஆர் தெரு
பி.டி.எம் நகர் பாடியநல்லூர்
ரெட்ஹில்ஸ்
சென்னை 600 052

**முனைவர். கி.குமார்,**
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு
தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை
சென்னை 600015

**திரு. இரா.கோவிந்தராஜ்,**
73/3, முதல் தளம்
நேதாஜி சாலை
புதிய விளாங்குடி
மதுரை 625018

**திரு.அ.சங்கர்,**
மாரனேரி,புதுத்தெரு
மேகளத்தூர் அஞ்சல்
தஞ்சாவூர் 613102

**திரு.சதாசிவம்,**
245, திருமலைநகர்
(பெட்ரோல் பங்க் எதிரில்)
நால் ரோடு,
குடிமங்கலம் 642 201
திருப்பூர் மாவட்டம்.

**திரு. இரா.சந்தனம்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் துறை
தமிழப் பல்கலைக்கழகம், தஞ்
சாவூர் 613010

**முனைவர்.அ. சந்திரபோஸ்**
விரிவுரையாளர்,
மாட்சிமை தாங்கிய மன்னர்
கல்லூரி
புதுக்கோட்டை

**திரு. க.சரவணக்குமார்**
126, V.P. பெரிய தெரு
சத்தியமங்களம்
ஈரோடு மாவட்டம்638401

**முனைவர். ப. சண்முகம்,**
டி1/25 ஆனந்தா குடியிருப்பு
50, லாட்டீஸ் பிரிட்ஜ் சாலை
கல்கி கிருஷ்ணமூர்த்தி சாலை
திருவான்மியூர்
சென்னை 600 041

**முனைவர். சொ.சாந்தலிங்கம்,**
மாவட்ட தொல்லியல் அலுவலர்,
(ஓய்வு) 32, பிரீதம் தெரு,
துரைசாமி நகர், மதுரை 625010

**முனைவர். ஜோ.ஆர். சிவராமகிருஷ்ணன்**
உதவிப் பேராசிரியர்
அண்ணாமலைப் பல்கலைக்
கழகம், அண்ணாமலை நகர்

**செல்வி, சே.சுதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

**திரு. து.சுந்தரம்,**
21,கிரின்வியூ டெலிகாம்
குடியிருப்பு விளாங்குறிச்சி
சாலை பீளமேடு,
கோவை 641001

**முனைவர். எ.சுப்பராயலு,**
371,பாரதி பூங்கா
6வது குறுக்குச்சாலை
சாய்பாபா காலனி கோயம்புத்தூர்
641011

**முனைவர். தி.சுப்பிரமணியன்,**
தொல்லியல் அலுவலர் (ஓய்வு)
மூங்கம்பட்டி
புள்ளம்பட்டி அஞ்சல்
கிருஷ்ணகிரி மாவட்டம்.635203

**திரு.செந்தீ நடராஜன்,**
122, கல்படித்தெரு
நாகராஜகோவில் அருகில்
நாகர்கோவில் 629001

**முனைவர். வீ. செல்வகுமார்**
உதவிப்பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613010

**திரு.மா. சைலேஸ்**
ஆய்வாளர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

**திரு. ந. தனசேகரன்**
எண் 1, மேட்டுத்தெரு
கள்ளபிரான்புரம்
மதுராந்தகம் தாலுக்கா
காஞ்சிபுரம் 603 308.

**முனைவர். இல.தியாகராஜன்,**
தலைவர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி,அரியலூர்
621 713

**திரு.தில்லை கோவிந்தராஜன்**
'சக்தி இல்லம்'
2218 மானோஜியப்பா தெரு
தஞ்சாவூர் 613 009
செல்: 9442148248

**செல்வி, கி. தேவிஸ்ரீ**
12,பி.அருணகிரி தெரு
புதுப்பாளையம். கடலூர்
6007001

**திரு.வீ.பரந்தாமன்**
ஆய்வு மாணவர்,
கல்வெட்டியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613010

**முனைவர். க.பன்னீர் செல்வம்**
உதவிக் கல்வெட்டு
கண்காணிப்பாளர்,
இந்தியத் தொல்லியல் துறை
சென்னை சரகம் புனித ஜார்ஜ்
கோட்டை, சென்னை 600 009

**திரு.கு.பால்துரை**
ஆய்வு மாணவர், பாண்டிச்சேரி
பல்கலைக்கழகம், புதுச்சேரி

**திரு.பா. பாலமுருகன்**
ஆய்வு மாணவர்
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்
புதுச்சேரி

**முனைவர். ப.தே.பாலாஜி**
இணைப்பேராசிரியர்,
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 009

**திரு.த. மகேந்திரன்**
2,கன்னியம்மன் கோயில் தெரு
டி.1, ஆர்.ஆர்.சி,
அபார்ட்மெண்ட்ஸ், நெசப்பாக்கம்,
சென்னை 600078

**திருமதி, வீ. மங்கை இராகவன்**
கே.சி.எம். பள்ளி
66, முத்துவேல் லேஅவுட்
கே.கே.சாலை
விழுப்புரம், 605 602

**திரு. கோ.மதிவாணன்**
எஸ்.கே. பாளையம்,
மாளிகை மேடு அஞ்சல் 607112

**முனைவர். வீ.ப..யத்தீஸ்குமார்**
உதவித்தொல்லியலார்
இந்தியத் தொல்லியல் துறை
தெற்கு வட்டம், புனித ஜார்ஜ்
கோட்டை, சென்னை 600 009

**திரு. வெ.யோகேஸ்வரன்**
சரளைப்பள்ளம்,
குப்பகுடி அஞ்சல்
ஆலங்குடி வட்டம்
புதுக்கோட்டை மாவட்டம்

**திரு. இரா. ரமேஷ்**
த/பெ கே. இராமசாமி
காளயூனூர், கருங்கல்லூர்
அஞ்சல்
மேட்டூர் வட்டம் சேலம்

**திரு.தகடூர், ரமேஷ்**
பொக்கலன் கொட்டாய் வழி
பேளரஹள்ளி அஞ்சல்
பாலக்கோடு வடடம்
தருமபுரி மாவட்டம் 636 808

**செல்வி. நா. ராஜலட்சுமி**
202, மேற்குத் தெரு,
மட்டையன் திடல்
பாபநாசம் வட்டம்,
தஞ்சாவூர்

**திரு. பெ.லெனின்**
4, பெரியண்ண
கவுண்டன் தெரு
பீரங்கி மேடு,
செஞ்சி 604202

**செல்வி,அ.வாசுமதி**
அரசு கலைக்கல்லூரி
அரியலூர்

**திரு.சி. வீரராகவன்**
கே.சி.எம். பள்ளி
66, முத்துவேல் லேஅவுட்
கே.கே.சாலை
விழுப்புரம், 605 602

**முனைவர். கோ. விஜய**
வேணுகோபால்
15,4வது குறுக்குத் தெரு
ஜெய நகர்,
ரெட்டிபாளையம்
புதுச்சேரி

**முனைவர். பா. ஜம்புலிங்கம்**
கண்காணிப்பாளர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613010

**முனைவர் இரா. ஜெகதீசன்**
இராஜாங்கம் இல்லம்
12/1 ஜெர்மன் தோட்டம்
சூலூர், கோவை 641 402

**முனைவர். பா.ஜெயக்குமார்**
உதவிப்பேராசிரியர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்
சாவூர் 613010

**திரு. பா. ஜோதிஸ்வரன்**
ஆய்வு மாணவர்,
தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600009

**திரு.கி.ஸ்ரீதரன்**
324, முதல் தெரு
நடேசன் நகர்
விருகம்பாக்கம், சென்னை 600
092

# நன்றி

கீழ்க்கண்ட கட்டுரையாளர்களுக்கு உதவி புரிந்த நண்பர்களுக்கு நன்றி

**வெள்ளாளன் கோட்டை நடுகல், கு.பால்துறை**
1.முனைவர் சு. இராசகோபால், 2.முனைவர் சொ.சாந்தலிங்கம், 3.பேராசிரியர். கா.இராசன், 4.முனைவர் இரா.பூங்குன்றன்.

**கன்னியாகுமரி மாவட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள், செந்தீ நடராசன்,**
1.முனைவர் அ.க. பெருமாள்,2. நூலகர் மாணிக்கவாசகம், 3.திரு.துரைப்பழம், 4.ஓட்டுநர் கோபால், 5.முருகேசன், 6.செல்லக்கிளி, எஸ்.எல்.குமார்

**சூரைக்குடி கல்வெட்டு, அ.சந்திரபோஸ்**
திரு. கரு.இராஜேந்திரன்

பெரியபட்டினத்தில் பாமினி சுல்தானியர் காசுகள், பெரியபட்டினத்தில் மதுரை சுல்தான்களின் காசுகள் – ப. சண்முகம்

ஆகிய கட்டுரைகளுக்கு ஆய்வு செய்யவும் கட்டுரைகள் வெளியிடவும் அனுமதி அளித்த பேராசிரியர்கள் கராஷிமா, ஒய். சுப்புராயலு.

